வாழ்க்கை வரலாற்றுவரிசை

# முத்துஸ்வாமி தீக்ஷிதர்

டி. எல். வெங்கடராம அய்யர்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா.

ஜஸ்டிஸ் டி. எல். வெங்கடராம அய்யர் சென்னை உயர்நீதி மன்றத்திலும், சுப்ரீம் கோர்ட்டிலும் நீதிபதியாகப் பணி ஆற்றியவர். சட்டக்கமிஷன் தலைவராகவும் இருந்து பெருந் தொண்டு புரிந்தவர்.

ஸம்ஸ்க்ருத மொழியில் பண்டிதராகவும் பெருங் கவிஞராக வும் விளங்கிய மகாமகோபாத்யாய லக்ஷ்மணஸூரி அவர் களின் புதல்வராகிய டி. எல். வெங்கடராம அய்யர், ஸம்ஸ் க்ருதத்தில் பெரும் புலமை பெற்று விளங்குபவர். பாரத நாட்டின் தலைசிறந்த ஸங்கீத வித்வானுகவும், ஸாஹித்ய கர்த்தாவாகவும் விளங்கிய முத்தையா பாகவதர் அவர்கள், இவருக்கு நெருங்கிய உறவினர். அவரிடம் கர்னடக ஸங் கீதத்தில், இவர், முறைப்படி பயிற்சி பெற்ருர். இவர் கர்னு டக ஸங்கீத சாஸ்திரத்திலும், இசையிலும் தலைசிறந்தவர் களில் ஒருவரென எல்லோராலும் இன்று மதிக்கப் பெறுகிருர். டி. எல். வெங்கடராம அய்யர் முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர் களுடைய ஸாகித்யங்களை நன்கு ஆராய்ந்தவர். தீக்ஷிதர் கீர்த்தனைகளில் பல இவருக்குப் பாடம் உண்டு. 1944-ம் ஆண்டில் இவர் சென்னை ஸங்கீத வித்வத் ஸபையின் தலைவ ராக இருந்து 'ஸங்கீத கலாநிதி' என்ற பட்டம் பெற்ருர்.

வாழ்க்கை வரலாற்று வரிசை

# முத்துஸ்வாமி தீக்ஷிதர்

டி. எல். வெங்கடராம அய்யர்

தமிழாக்கம்

கே. ஸி. தியாகராஜன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
புது டில்லி

# முன்னுரை

நமது பாரத நாடு நெடுங்காலமாக, எல்லாத் துறைகளிலும் வல்லுனர்கள் பலரைத் தோற்றுவித்துள்ளது. நம் நாட்டின் வரலாற்று ஏடுகளைப் புரட்டினால், கணக்கிட முடியாத பேரறிஞர்கள் பலருடைய பெயர்களைக் காணலாம். கலை, இலக்கியம், அரசியல், அறிவியல் முதலிய எல்லாத் துறைகளிலும் வல்லுனர்கள் நம் நாட்டில் வாழ்ந்திருக்கின்றனர்; இன்றும் வாழ்ந்து வருகின்றனர். அவர்களில் பலரது பெயர்கள் இன்று நமக்கு மிகவும் பழக்கமானவை. அத்தகைய பலரது பெயர்கள் நமக்கு நன்கு தெரிந்திருந்தாலும், அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளைப் பற்றியோ, அவர்களுடைய தொண்டுகளைப் பற்றியோ நாம் நன்கு தெரிந்துகொள்ளவில்லை; மிகப் பெருஞ்செயல்கள் புரிந்த பலருடைய பெயர்களைக்கூட மக்கள் பலர் அறிந்துகொள்ளவில்லை.

ஒரு நாட்டின் வரலாறு என்பது, அந்த நாட்டில் பிறந்து, வாழ்ந்து, செயற்கரிய செயல்கள் புரிந்த பெருமக்களின் வாழ்க்கை வரலாறேயாகும். காரணம், அவர்கள்தான் நாட்டை உருவாக்கி வளர்த்தவர்கள். எனவே, அத்தகைய பெருமக்களைப்பற்றி ஓரளவாவது தெரிந்துகொள்ளுவது இன்றியமையாததாகும். அவ்வாறு தெரிந்து கொண்டால்தான், நம்நாட்டின் படிப்படியான

வளர்ச்சியை நாம் நன்கு அறிந்துகொள்ளமுடியும். நம்நாட்டின் கலைகளின் வரலாற்றிலும் வளர்ச்சியிலும் நெடுங்காலம் முதற்கொண்டே இசை தனி இடம் பெற்றுவந்துள்ளது. ஆகவே, இசை வளர்ச்சியைப்பற்றி நன்கு தெரிந்துகொள்ளவில்லை என்றால், நாம் நமது இந்தியக் கலைகளின் வரலாற்றைப் பூரணமாக அறிந்துகொள்ள முடியாது. எனவே மகத்தான ஸங்கீத பாரம்பரியத்தை உருவாக்கிய மகான்களின் வாழ்க்கை வரலாறுகளைத் தெரிந்துகொள்ளுவது நம் நாட்டின் கலை வரலாற்றை நன்கு அறிந்து கொள்ளுவதற்கு இன்றியமையாதது.

இந்திய ஸங்கீதத்தை உருவாக்கிய அருமையான ஸாஹித்ய கர்த்தாக்களில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் மிகச் சிறந்த இடம்பெற்று விளங்குகிறார். நம் நாட்டு ஸங்கீதம் இருவகைப்படும். அவை ஒன்று ஹிந்துஸ்தானி ஸங்கீதம்; மற்றொன்று கர்னாடக ஸங்கீதம். கர்னாடக ஸங்கீத மகான்கள் வரிசையில், ஸ்ரீ தியாகையர், ஸ்ரீ சியாமா சாஸ்திரி இவர்களுடன் ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரும் இணைந்து விளங்குகிறார். இம் மூவரும் ஸங்கீத மும்மூர்த்திகள் எனப் போற்றப்பெறுகின்றனர். இவர்களைப் போலவே மற்றும் சிலரும், கர்னாடக ஸங்கீத வரலாற்றில் சிறப்புற்று விளங்கி இருக்கின்றனர். அவர்களில் புரந்தரதாஸரும், ஸ்வாதி திருநாள் மகாராஜாவும் குறிப்பிடத்தக்கவர்கள். நம்நாட்டின் கலைவளர்ச்சியில், கர்னாடக ஸங்கீதத்

தின் பங்கினை நன்கு உணர்வதற்கு, முத்துஸ்வாமி தீக்ஷிதர் போன்றவர்களின் வரலாறுகளை அறிந்து கொள்ளுவது மிகவும் முக்கியம். தீக்ஷிதருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதுவதற்கு டி. எல். வெங்கடராம அய்யர் அவர்களைவிட, தகுதி உள்ளவர்கள் வேறில்லை எனலாம். சிறந்த வழக்கறிஞராகவும், நீதிபதியாகவும் விளங்கிய அவர் ஸங்கீதத்திலும் முன்னணியில் வைத்துப் போற்றப் பெறுகிறார். ஸங்கீத சாஸ்திரத்திலும் இசையிலும் நல்ல புலமை பெற்ற அவர் முத்துஸ்வாமி தீக்ஷிதரிடத்தில் பெரும் பக்தி கொண்டவர். சிறந்த மாணவர். "தேசப் பெருமக்கள் வரலாற்று வரிசை" என்ற தலைப்பில் முத்துஸ்வாமி தீக்ஷிதரைப் பற்றி, தமக்குக் கிடைத்த சான்றுகளைக் கொண்டு இந்த நூலை எழுதியுள்ளார். எழுத்தோவியமாக தீக்ஷிதரை இவர் படம் பிடித்துக் காண்பித்துள்ளார். இந் நூலைப் படிப்பவர்கள் தீக்ஷிதருடைய வாழ்க்கை வரலாறுகளன்றி, அவருடைய ஸாஹித்தியங்களின் உயர்வு பற்றியும் தெளிவாக அறிந்து கொள்ளலாம். அத்துடன் இசைப் பாரம்பரியத்தின் பெருமையையும் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

புது டில்லி,
நவம்பர் 8, 1968

**பி. வி. கேஸ்கர்.**

## முகவுரை

ஸங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரெனப் போற்றப் பெறும் ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர், சென்ற நூற்ருண்டின் இறையருள் பெற்ற சாகித்ய கர்த்தா வாகவும் போற்றப் பெறுகிருர். அவரது வாழ்க்கை வரலாறுகளைப் பற்றிக் குறிப்பிடத்தக்க சான்றுகள் கிடைக்கவில்லை. அவரைப்பற்றியும் ஸ்ரீ தியாகை யரைப்பற்றியும் கணக்கற்ற கர்ண பரம்பரைக் கதைகள் வழங்குகின்றன. அவர்கள் பல அற்பு தங்களை நிகழ்த்திஞர்கள் என்று கூறுகின்றனர். அத்தகைய அற்புதங்களுக்காகவோ, அமானுஷ் யச் செயல்களுக்காகவோ நாம் அவர்களுக்குப் பெருமை தரவில்லை. அவர்களுடைய ஸாஹித் யங்கள் பாடுவோரையும், கேட்போரையும் பரவ சப்படுத்தும்; பக்தியில் ஆழ்த்தும்; அழகுணர்ச்சி யின் உச்சத்தில் நிறுத்தும். இத்தகைய மேம் பாடுகளுடன் விளங்கும் ஸாஹித்யங்களாகிய இசைச் செல்வத்தை நமக்கு அளித்ததற்காகவே அவர்களை நாம் போற்றுகிறோம். ஸாஹித்ய கர்த்தாவின் பெருமையையும், ஸாஹித்யங்களின் தன்மையையும் தெளிவாக உணர்த்துகின்ற வரலாற்று நூல்தான் பயன் உடையதாகும். ஆகவே தீக்ஷிதரோடு நெருங்கி வாழ்ந்தவர்கள் கூறிய நிகழ்ச்சிகளிலிருந்தும், அவருடைய க்ருதி களிலிருந்து புலப்படுவனவற்றையும் அடிப்படை யாகக் கொண்டுதான் இந்த நூலை எழுதி யுள்ளேன்.

என்னுடைய தாய்மாமன் புதல்வராகிய டாக்டர் எல். முத்தையா பாகவதரிடம் நான் கர்னாடக ஸங்கீதத்தை முறையாகக் கற்றுக்கொண்டேன். அவர் சிறந்த ஸங்கீத வித்வான். அத்துடன் தலைசிறந்த ஸாஹித்ய கர்த்தாவாகவும் விளங்கியவர். 14-5-1931 அன்று, என்னுடைய ஸங்கீத வாழ்க்கையில் ஒரு பெரும் திருப்பம் நிகழ்ந்தது. அன்று நான் எட்டையபுரத்திற்கு அருகிலுள்ள கோயில்பட்டியில் அம்பி தீக்ஷிதரைக் கண்டேன். அவர் முத்துஸ்வாமி தீக்ஷிதர் பரம்பரையைச் சேர்ந்தவர். முத்துஸ்வாமி தீக்ஷிதரின் இளைய சகோதரர் பாலுஸ்வாமி தீக்ஷிதர். இவருக்கு மகப்பேறு இல்லாததால், அவர், தமது மகள் வயிற்றுப் பேரன் சுப்பராம தீக்ஷிதரை ஸ்வீகாரம் செய்து கொண்டார். இந்த சுப்பராம தீக்ஷிதர் சென்ற நூற்றாண்டின் தலைசிறந்த ஸங்கீத சாஸ்த்ர விற்பன்னராகப் போற்றப் பெறுபவர். அவர் ஸம்ப்ரதாய ஸங்கீதக் களஞ்சியம். எட்டையபுர சமஸ்தானத்தின் ஆதரவில் அவர் ஸங்கீத ஸம்ப்ரதாய பிரதர்சினி என்னும் இசை நூலை வெளியிட்டிருக்கிறார். அது ஒரு ஸங்கீத ஆராய்ச்சி நூல். கர்னாடக ஸங்கீத சாஸ்திரத்தின் நுட்பங்களைத் தெளிவாகக் கூறும் மிகச் சிறந்த நூல் அது. அந்த நூலை அடிப்படையாகக் கொண்டுதான் பிற்கால இசை நூல்கள் தோன்றின. சுப்பராம தீக்ஷிதருடைய புதல்வரே அம்பி தீக்ஷிதர். இவருக்கு முத்துஸ்வாமி தீக்ஷிதர் என்ற பெயர் இடப் பெற்றிருப்பினும் அம்பி தீக்ஷிதர் என்றே அழைத்தனர். அந்த

அம்பி தீக்ஷிதரைத்தான் நான் 14-5-1931 இல் கோயில்பட்டியில் சந்தித்தேன். அப்பொழுது முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகள் சிலவற்றை அம்பி தீக்ஷிதர் பாட நான் கேட்டேன். தீக்ஷித ருடைய க்ருதிகள் பல அக்காலத்தில் அவ்வளவு அதிகமாக வழக்கத்தில் இல்லை. தீக்ஷிதருடைய ஸங்கீத நடை புதுமையானதாகவும், புத்துணர்ச்சி தருவதாகவும் இருந்ததைக் கண்டேன். அவ ருடைய க்ருதிகள் எல்லாம் கமகங்கள் நிறைந்து விளம்ப காலத்தில் அமைந்திருந்தன. தீக்ஷிதர் சாகித்தியங்களைப் பாடம் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் அன்றே எனக்கு ஏற்பட்டது. எனவே அவரை சென்னைக்கு அழைத்து வந்து தங்குமாறு செய்தேன். அவரிடமிருந்து தீக்ஷிதர் க்ருதிகளை நான் நேர்முகமாகப் பாடம் செய்தேன். தீக்ஷித ருடைய வாழ்க்கையில் நடந்த பல நிகழ்ச்சிகளை அவர் எனக்கு அவ்வப்போது கூறினர். அவரிடம் இருந்து அறிந்தவற்றையும், தீக்ஷிதர் க்ருதிகளி லிருந்து தொகுத்தவற்றையும் அடிப்படையாகக் கொண்டுதான் இந்த நூலை உருவாக்கி உள்ளேன். கர்னடக ஸங்கீதத்தை அதன் பழைய உன்னத மான நிலையில் இருத்தவும், அதன் தூய்மையை யும் அழகையும் பாதுகாக்கவும், ஏற்றவழி, முத்து ஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளைப் பாடுவதும் பரப்பு வதுமே ஆகும். கர்னடக ஸங்கீதத்தை உன்னத நிலையில் இருத்துவதற்கு இதுவே சிறந்த மார்க்கம் என்பது என் கருத்து.

டி. எல். வெங்கடராம அய்யர்.

# பொருளடக்கம்

# 1

## வம்ச பரம்பரையும் இளமைப் பருவமும்

உலக நாடுகளின் வரலாறுகளில், சில குறிப்பிட்ட காலங்களில், கலாசார மறுமலர்ச்சிகள் தோன்றுவதுண்டு. அதையே இன்றைய மொழியில் குறிப்பிடுவதானால் கலாசார திடீர் மாற்றம் என்னலாம். அத்தகைய காலங்களில் கலையும் இலக்கியமும் புத்துருவம் பெற்று, வளர்ந்து, உச்ச நிலையை அடைந்தன. தென்னகத்தின் வரலாற்றில் அத்தகைய ஒரு காலம் 18-ம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் தோன்றி ஏறத்தாழ நூறு ஆண்டுகாலம் விளங்கியது. இக் காலத்தை ஸம்ப்ரதாயக் கர்னாடக ஸங்கீதத்தின் பொற்காலம் என்று குறிப்பிடுதல் பொருந்தும். இப் பொற்காலத்தில் தலைசிறந்த பல ஸங்கீதவித்வான்களும், பல கர்னாடக இசைக்கர்த்தாக்களும் தோன்றி ஸங்கீத மணத்தைப் பரப்பினர். அவர்களுள் முன்னணியில் வைத்துப் போற்றப்பெறுபவர் மூவர். அவர்களே கர்னாடக ஸங்கீத மும்மூர்த்திகள் ஆவர். அவர்களில் முதல்வர் 1762-ல் பிறந்த சியாமா சாஸ்திரிகள்; இரண்டாமவர் 1767-ல் தோன்றிய தியாகராஜர்; மூன்றுமவர் 1775-ல் பிறந்த முத்துஸ்வாமி தீக்ஷிதர். இம்மஹான்களுடைய க்ருதிகள், ராகங்களையும் தாளங்களையும் கையாளுவதில் தனி அழகு பெற்று, தனித்தன்மையோடு விளங்கின.

அவற்றுள் சியாமா சாஸ்திரிகளின் க்ருதிகள், சிக்கலான தாள நுட்பங்கள் செறிந்தனவாக அமைந்திருந்தன. (தாளம்) தியாகையருடைய க்ருதிகள் உணர்ச்சியை எழுப்புவனவாகவும். அதே சமயத்தில் இனிய இசை அமைப்பைக் கொண்டனவாகவும் விளங்கி [பாவம்] கேட்டமாத்திரத்தில் மகிழ்விக்கும் தன்மை கொண்டு விளங்கின. முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளோ இன்னிசை அமைப்பினேடு ராகஸ்வரூபங்களாக [ராகம்] அமைந்திருந்தன.

18-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் தென்னிந்தியாவில் உள்ள விரிஞ்சிபுரம் என்னும் சிற்றூரில், காச்யப கோத்திரத்தைச் சேர்ந்த வேங்கடேச்வர தீக்ஷிதர் என்ற அந்தணர் ஒருவர் வாழ்ந்துவந்தார். அவர் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் பாட்டனுர் ஆவார். அவரது மனைவியின் பெயர் பாகீரதி. அவர்களுக்கு 1735-ம் வருஷம் இராமஸ்வாமி என்ற மைந்தர் பிறந்தார். அக்காலத்தில் விரிஞ்சிபுரத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் அரசியல் சூழ்நிலையால் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. 1742-ல் பகைவர்களுடைய குதிரைப் படையின் தாக்குதலுக்கு அஞ்சிய அப்பகுதியின் மக்கள் பெரும்பாலானவர்கள், அவ்விடத்தை விட்டு வேறு இடம் செல்ல வேண்டியிருந்தது. அவ்வாறு வெளியேறியவர்களில் வேங்கடேச்வர தீக்ஷிதரும் ஒருவர் ஆவார். அந்நாளில் காவிரிச் சமவெளிப் பகுதி தஞ்சையை அரசாண்ட மஹாராஷ்ட்ர மன்னர்களின் சீரான ஆளுகைக்கு உட்பட்டு

இருந்தது. ஆகவே அப்பகுதியில் அமைதி நிலவ, மக்கள் இன்பமாக வாழ்ந்திருந்தனர். விரிஞ்சி புரத்தை விடுத்துக் குடும்பத்துடன் புறப்பட்ட வேங்கடேச்வர தீக்ஷிதர் தஞ்சை ஸமஸ்தானத்தில் குடி புகுந்தார். காவிரிக்கரையில், மத்யார்ஜுனம் என்னும் இடத்திற்கு அருகில் கோவிந்தபுரம் என்னும் சிற்றூர் உள்ளது. அவ்வூர் தஞ்சை ஸமஸ்தானத்தை ஆண்டுவந்த முதல் நாயக மன்னர்களின் மந்திரியாக இருந்த கோவிந்த தீக்ஷிதரின் நினைவாக அப்பெயரைப் பெற்றது. கோவிந்த தீக்ஷிதர் சிறந்த அரசியல் நிபுணர். தேர்ந்த ஸம்ஸ்க்ருத பண்டிதர். உண்மையான தத்துவஞானி. இத்தகைய பெரியாரை நினைவு கூர்வதற்காகத்தான் அச்சிற்றூர் கோவிந்தபுரம் என்னும் பெயரைப் பெற்றது. அந்தச் சிற்றூரில் வேங்கடேச்வர தீக்ஷிதர் குடி புகுந்தார். 1751-ம் ஆண்டுக்குச் சற்று முன்பாகவோ பின்பாகவோ வேங்கடேச்வர தீக்ஷிதரும் அவர் மனைவியும் இறைவன் திருவடி நீழலை அடைந்தனர். இவ்வாருக இராமஸ்வாமி அனுதையாக விடப்பட்டார். தம்முடைய வருங்காலத்தைத் தாமே நிர்ணயித்துக்கொள்ள வேண்டிய சூழ்நிலை அவருக்கு ஏற்பட்டது.

இராமஸ்வாமி வேத அத்யயனத்தில் பயிற்சி பெற்றுக்கொண்டு இருந்தார். அவருக்கு இனிமையான சாரீர சம்பத்தை இறைவன் அருளியிருந்தார். இயற்கையிலேயே இசையில் ஈடுபாடும் இருந்தது. ஆகவே நுண்ணறிவு படைத்த பல

நண்பர்கள் ஸங்கீதத்தை முறைப்படி கற்றுக் கொள்ளுமாறு அறிவுரை கூறினர்கள். அந்தக் காலத்தில் தஞ்சையில் பிரசித்திபெற்ற ஸங்கீத வித்வான்கள் பலர் இருந்தார்கள். அவர்களுக்கு தஞ்சை மன்னர்களின் ஆதரவு பரிபூர்ணமாக இருந்தது. அத்தகையோர்களில் ஒருவர் வீர பத்ரையா என்பவர். அவரிடம் இராமஸ்வாமி ஸங்கீத சிக்ஷைக்காகச் சென்ருர். இராமஸ் வாமிக்கு இயற்கையாக அமைந்திருந்த சாரீர சம்பத்து வீரபத்ரையாவை மிகவும் கவர்ந்தது. அவர் உடனே இராமஸ்வாமியை சிஷ்யராக ஏற்றுக்கொண்டு கர்ணடக ஸங்கீதத்தை ஸம்ப்ர தாய முறைப்படி கற்பித்தார். இவ்வாருக வீர பத்ரையாவிடம் ஸங்கீத சிக்ஷையை முடித்துக் கொண்டு தனிக்கச்சேரிகள் செய்யும் தகுதியுடன் இராமஸ்வாமி தீக்ஷிதர் கோவிந்தபுரத்திற்குத் திரும்பினர்.

அந்தக் காலத்தில் மத்யார் ஜுனத்தில் வேங்கட வைத்தியநாத தீக்ஷிதர் என்னும் வைணிக வித் வான் பிரபலமாக விளங்கினர். அவர் கோவிந்த தீக்ஷிதர், வேங்கடமகி ஆகியோருடைய பரம் பரையைச் சேர்ந்தவர். தஞ்சை நாயக மன்னர் களின் அமைச்சராக இருந்த கோவிந்த தீக்ஷிதர் ஸங்கீத சாஸ்திரத்திலும் தேர்ந்தவராக விளங் கியவர். ஸங்கீத சாஸ்திர நூலாகிய 'ஸங்கீத ஸுதா' என்னும் பிரபலமான நூலின் ஆசிரியர் கோவிந்த தீக்ஷிதர். அவருடைய புதல்வர்களில் ஒருவரே வேங்கடமகி. அந்த வேங்கடமகி என்

பவரே 'சதுர் தண்டிப்ரகாசிகை' என்னும் அரிய இசை நூலே இயற்றிப் பெரும் புகழ்பெற்றவர் ஆவார். அவரை நவீன கர்னடக ஸங்கீதத்தின் 'பாணினி' எனப்போற்றுதல் பொருந்தும். இந்த ஸங்கீத சாஸ்திர நுட்பங்கள் எல்லாம் வேங்கட வைத்தியநாத தீக்ஷிதரிடம் பரம்பரைச் சொத்தாக அமைந்திருந்தது. இவருடைய நாளில் இவரை ஸங்கீத சாஸ்திரத்தின் வல்லுனர் என எல்லாரும் ஏத்திப் போற்றினர். ஸங்கீத சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்ருலன்றி ஒருவருடைய வித்வை பூரணத்துவம் பெருது என்ற கருத்துடையவர் இராமஸ்வாமி தீக்ஷிதர். ஆகவே அவர் வேங்கடவைத்தியநாத தீக்ஷிதரிடம் ஸங்கீத சாஸ்திரத்தில் தேர்ச்சி பெறுவதற்காகச் சென்ருர். வேங்கடவைத்தியநாத தீக்ஷிதர் தம்மை வந்தடைந்த இராமஸ்வாமி தீக்ஷிதருக்கு ஸங்கீத சாஸ்திரத்தைக் கற்பித்தார். அத்துடன் வேங்கடமகி அவர்களால் வகுக்கப்பெற்ற 72 மேளங்கள், ஜன்ய ராகங்கள் பற்றிய விவரங்களேயும் விளக்கமாகக் கற்பித்தார்.

பிறகு இராமஸ்வாமி தீக்ஷிதர் திருவாரூரில் வந்து நிரந்தரமாகக் குடி ஏறினர். அவருடைய ஸங்கீதக் கச்சேரிகள் பிரபலமாயின. அவரது புகழ் எங்கும் பரவியது. தஞ்சை அரசர் அவரைப் பெருமைப்படுத்தி விருதுகளும், பரிசுகளும் வழங்கினர். ஜமீன்தார்களும் பிரபுக்களும் அவரைப் போற்றிக் கௌரவித்தனர். இவருடைய ஸங்கீதப் புலமையைக்கண்டு, திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ

ஸ்வாமி கோயிலில் நாகஸ்வரம் வாசிக்கும் பத்ததியை வகுத்து அமைக்கும் பொறுப்பு இவரிடம் ஒப்புவிக்கப்பெற்றது. இவர் ஹம்ஸத்வனி இராகத்தைக் கல்பித்து நமது கர்னாடக ஸங்கீதத்திற்கு அறிமுகம் செய்தார். அந்த இராகம் இன்று அகில இந்திய இராகமாக வழங்குகிறது. இராமஸ்வாமி தீக்ஷிதர் குறிப்பிடத்தக்க ஸாஹித்திய கர்த்தாவாகவும் விளங்கினார். லக்ஷண-லக்ஷியச் செறிவுடன் பல உருப்படிகளை அவர் இயற்றினார். அவற்றுள், வர்ணங்கள், தருக்கள், கீர்த்தனைகள், இராகமாலிகைகள் ஆகியவை இடம்பெற்றுள்ளன. இவை யாவும் மிகப் பிரபலமடைந்து இவர் புகழின் உச்ச நிலையை எய்தி இருக்கக் கூடும். ஆனால் இவரது மைந்தர் முத்துஸ்வாமி தீக்ஷிதர் பெற்ற பெரும் புகழ் இவருடைய புகழை மங்கச் செய்துவிட்டது எனச் சொல்லலாம். முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளின் பேரொளியில், இவருடைய உருப்படிகளின் ஒளி குன்றி விட்டது என்று எண்ணவேண்டியிருக்கிறது.

இராமஸ்வாமி தீக்ஷிதர் வெகு காலமாகப் புத்திரப் பேறு இல்லாமல் இருந்தார். தமக்குப் புத்திர சந்தானம் வேண்டுமென்று தவமிருந்தார். அப்பொழுது ஒரு மகான் தேவியின் அருளினால் தான் மகவில்லாக் குறை நீங்குமென்று அறிவுரை கூறினார். அதோடு வைத்தீஸ்வரன் கோயிலில், கோயில் கொண்டிருக்கும் தேவி பாலாம்பிகையை இடைவிடாமல் பூஜித்து வந்தால் புத்திரசந்தானம் நிச்சயம் கிட்டும் எனவும் கூறினார். இதற்கு

முன்னதாகவே இராமஸ்வாமி தீக்ஷிதர் ஸ்ரீ வித்யா உபாஸனை செய்து வந்தார். அந்த உபாஸனையில் இவரை ஈடுபடுத்தியவர், அக்காலத்தில் பெரிய துறவியாக விளங்கிய ஸ்ரீ சிதம்பரநாதஸ்வாமிகள் ஆவார். எனவே, இராமஸ்வாமி தீக்ஷிதர் தந்த்ரீக முறைப்படி தேவி பாலாம்பிகைக்கு மண்டல பூஜை நிகழ்த்த முடிவுசெய்தார். ஆகவே அவர் தமது மனைவி சுப்பம்மாளுடன் வைத்தீஸ்வரன் கோயிலுக்குச் சென்றார். அங்கு அவர் தேவியின் சன்னிதியில் நாற்பது நாட்கள் தங்கி, ஆவரண பூஜைகள் செய்து, பஜனைகள் நிகழ்த்தினார். பூஜையின் கடைசி நாளில் தேவி இராமஸ்வாமி தீக்ஷிதர் கனவில் தோன்றி ஒரு முத்துமாலையை அளித்ததாகச் சொல்லப்பெறுகிறது. விழித்தெழுந்த தீக்ஷிதர் பேராச்சரியமுற்று, தமது கனவை அங்குள்ள பெரியோர்களிடம் எடுத்துக் கூறினார். அதனைக் கேட்ட பெரியோர்கள் தேவியின் அருள் அவருக்குக் கிட்டிவிட்டது என்பது தான் அக்கனவின் பொருள் என்று கூறினார்கள். அவருக்குக் கனவில் முத்து கிடைத்தது விரைவில் மகன் பிறக்கப்போவதற்கு அறிகுறி எனவும் அவர்கள் விளக்கினார்கள். பிறகு இராமஸ்வாமி தீக்ஷிதர் மனமகிழ்ச்சியுடன் திருவாரூர் வந்து சேர்ந்தார்.

அதன்பிறகு ஓராண்டிற்குள் இராமஸ்வாமி தீக்ஷிதர் எதிர்பார்த்துக்கொண்டிருந்த பலன் கிட்டியது. பல்குண மாதத்தில் அந்தப் பெரு நிகழ்ச்சி நடந்தது. அந்த மாதத்தில் ஸ்ரீ தியாக

ராஜஸ்வாமி கோயிலில் வசந்தோற்சவம் கோலா கலமாகக் கொண்டாடப்பெற்று வந்தது. திருவா ரூர் நகரம் முழுதும் வேத மந்த்ர ஒலிகளும் நாகஸ்வர இசையின் ஒலியும் நிரம்பி இருந்தன. நாட்டியக் கச்சேரிகள் ஒருபுறம். வாண வேடிக்கைகள் ஒருபுறம். இப்படிப்பட்ட கோலா கலமான சூழ்நிலையில் இராமஸ்வாமி தீக்ஷிதருக்கு மகன் பிறந்தான். மகனை தேவி பாலாம்பிகையின் வரப்பிரசாதம் என்றே இராமஸ்வாமி தீக்ஷிதர் கருதினர். ஆகவே வைத்தீஸ்வரன் கோயிலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ கார்த்திகேயக் கடவுளின் திருநாமமாகிய முத்துக் குமாரஸ்வாமி என்றே பெயரிட்டார். நீளமான அந்தப் பெயர் முத்து ஸ்வாமி என்று மருவி வழங்கப்பெற்றது. இதில் வியக்கத்தக்கதோர் நிகழ்ச்சி என்னவென்றால் ஸ்ரீ ஸுப்ரமண்யக் கடவுளின் திருநக்ஷத்திரமாகிய கிருத்திகா நக்ஷத்திரத்தில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் பிறந்ததாகும். முத்துஸ்வாமி என்று நாமகரணம் செய்ததற்கு வேருெரு காரணமும் கூறலாம். இராமஸ்வாமி தீக்ஷிதருடைய கனவில் தேவி பாலாம்பிகை முத்துமாலை அருளினள் அல்லவா. அந்த முத்தினை நினைவு கூர்ந்தே முத்துஸ்வாமி என்று பெயர் இடப்பெற்றது என்றும் கொள்ள லாம். ஸம்ஸ்கிருதத்தில் உள்ள 'முக்த' என்ற சொல்லுக்குத் தமிழில் நேரான பொருள் 'முத்து' என்பதாகும்.

இராமஸ்வாமி தீக்ஷிதர் கனவிற்கண்டதும், தேவி பாலாம்பிகை அவருக்கு வரம் தந்ததும்,

தீக்ஷிதர் குடும்பத்தில் பரம்பரைக் கதையாக வழங்கப்பெற்று வருகிறது. முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளில் "பஜரேரே சித்த பாலாம்பிகாம்" என்று தொடங்கும் பிரபலமான க்ருதியில் இந்தக் கனவு நிகழ்ச்சியைப் பற்றிய குறிப்புச் செய்தி காணப்பெறுகிறது. இந்த க்ருதி தேவி பாலாம்பிகையின் புகழைப் போற்றுவது ஆகும். அந்த அம்பிகையின் ஸந்நிதியை முத்துஸ்வாமி தீக்ஷிதர் அடைந்தபொழுது அவர் "என் மனமே! பாலாம்பிகையை வழிபடு. அந்தத் தேவி தன் பக்தர்களுக்கு எல்லா வரங்களையும் அருள்வாள். அவள் பாவம், ராகம், தாளம் ஆகிய மூன்றும் கலந்த ஸங்கீதத்தால் மகிழ்ச்சி அடைவாள். தன்னுடைய பக்தர்கள் கேட்கும் வரங்களை எல்லாம் அவள் அருள்வாள். அவளே குருகுஹனின் ரூபமாகிய முத்துக்குமாரனின் தாய். அந்த குருகுஹன் தம்முடைய பக்தர்களை எல்லாம் காப்பவர்" என்ற கருத்தினை அமைத்து இந்த க்ருதியைப் பாடியிருக்கிறார். *

இராமஸ்வாமி தீக்ஷிதருடை கனவு நிகழ்ச்சியையும் இந்த க்ருதியையும் ஒப்பிட்டு நோக்கும் பொழுது தேவியின் அருளால் மகப்பேறு கிடைத்த உண்மை புலப்படும். "இராமஸ்வாமி தீக்ஷிதரால்

---

* பாவ ராக தாள மோதினீம்
பக்தா பீஷ்டப்ரதாயினீம்
ஸேவகஜன பாலன குருகுஹ ரூப முத்துக்குமாரஜனனீம்
பஜரேரே சித்த பாலாம்பிகாம்
பக்த கல்பலதிகாம் காம்

பாடப்பெற்ற பாவ ராகதாள நயம் செறிந்த ஸங்கீதத்தைக் கேட்டுத் தேவி மிக மகிழ்ச்சி யடைந்தாள். அவருடைய வேண்டுகோளைத் தேவி நிறைவேற்றினாள். அந்தத் தேவி அளித்த வரம்தான் குருகுஹன். (முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளில் காணும் அங்கிதம் அதுதான்) அந்த குருகுஹனே முத்துக்குமாரஸ்வாமியாக (முத்துஸ்வாமி) உருவம் எடுத்தார்" என்னும் உட்பொருள் இந்த க்ருதியிலிருந்து உய்த்து உணர முடிகிறது.

முத்துஸ்வாமி தீக்ஷிதரின் இளமைப்பருவம் முழுவதும் கல்வி கற்கும் பருவமாகவே அமைந்தது என்று கூறிவிடலாம். கல்வி கற்பதிலேயே அவர் கண்ணும் கருத்துமாக இருந்தார். தமது மைந்தர் முத்துஸ்வாமி வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் சிறந்த விற்பன்னராக விளங்க வேண்டுமென்று இராமஸ்வாமி தீக்ஷிதர் விரும்பினார். ஆகவே தம் மைந்தனை வேதாத்யயனத்தில் ஈடுபடுத்தியதோடு ஸம்ஸ்க்ருத மொழியையும் நன்கு கற்குமாறு செய்தார். முத்துஸ்வாமி தீக்ஷிதரை ஏக சந்தக்ராஹி என்று சொல்லுவது பொருந்தும். அவருடைய ஸம்ஸ்க்ருத ஆசிரியர்கள் கற்பித்தவற்றை எல்லாம் மிக மிக விரைவில் அவர் விளங்கிக்கொண்டார். காவியங்களிலும், அலங்காரங்களிலும் அவர் சிறந்த பாண்டித்தியம் பெற்றார். அவருக்குச் சித்தாந்தக் கௌமுதியும் கற்பிக்கப்பெற்றது. ஆகவே அவர் சிறந்த வியா

கரண (இலக்கண) பண்டிதரானுர். இவரது கல்விப் புலமை முழுவதும் இவருடைய க்ருதி களில் செறிந்து விளங்குகின்றன. ஸம்ஸ்க்ருத மொழியைத் தட்டுத்தடங்கல் இல்லாமல் தாராள மாகக் கையாளுவதில் வல்லவர் என்பதை இவருடைய க்ருதிகளே சான்று பகரும்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஸங்கீதப் பயிற்சி பெற்ற வரலாறு மிகச் சுவை உடையதாகும். இராமஸ்வாமி தீக்ஷிதர் சிறந்த ஸங்கீத வித்வானுகவும் ஸங்கீத சாஸ்திர விற்பன்னராகவும் விளங்கினுர் என்பதை முன்பே குறிப்பிட்டோம். ஆகவே அவர் தமது மைந்தராகிய முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு ஸங்கீதத் திலும் சாஸ்திரத்திலும் நுணுக்கமான பயிற்சியை அளித்தார். அக்காலத்தில் ஸ்ரீ புரந்தரதாஸ ருடைய ஸங்கீத முறை பிரபலமாக இருந்தது. அப் பொழுது வாழ்ந்த ஸங்கீத வித்வான்கள் எல்லா ரும் அம் முறையைப் பின்பற்றியிருந்தார்கள். அந்தப் புரந்தர தாஸருடைய முறையிலேயே இராமஸ்வாமி தீக்ஷிதர் தமது புதல்வருக்குப் பயிற்சி கொடுத்தார். அதே காலத்தில் வேங்கட மகியின் ஸங்கீத சாஸ்திரமும் பிரசித்தி பெற்றிருந் தது. மேலும் வேறு சில பழைய சாஸ்திர முறை களும் வழக்கில் இருந்து வந்தன. அவற்றை எல்லாம் இராமஸ்வாமி தீக்ஷிதர் தமது மைந்த னுக்கு நன்கு போதித்தார். முத்துஸ்வாமி தீக்ஷி தரின் இசைக் கலைப்பயிற்சியில், வேங்கடமகியின் லக்ஷண கீதங்களும், ப்ரபந்தங்களும் முக்கியமான இடம் பெற்றிருந்தன என்பது குறிப்பிடத் தக்கது.

இவ்வாறு முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஸங்கீதத்திலும், சாஸ்திரத்திலும் சிறந்த புலமை பெற்றிருந்த காரணத்தினால் அவருடைய ஸங்கீதம் கர்னாடக ஸங்கீதத்தில் சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது. முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய ஸங்கீதத்தில் மற்றொரு முக்கியமான அம்சத்தையும் இங்குக் குறிப்பிட வேண்டும். அவர் சிறந்த பாடகராகவும், வைணிகராகவும் விளங்கியதுதான் அந்த அம்சம். வாய்ப்பாட்டுத் திறனும், வீணை வாத்திய அறிவும் கலந்த கலவையால் புதியதொரு பாணி உருவாகியது. அந்தப் பாணிக்குத் தனிப்பட்ட கவர்ச்சி உண்டு. முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய ஸங்கீதத்தில் உள்ள தனிச்சிறப்புக்குக் காரணம், அவர் வாய்ப்பாட்டிலும் வீணை இசைப்பதிலும் வல்லவராக இருந்தது தான். அவருடைய ஸங்கீதத்தின் திறமைபற்றி ஆராயும் இடத்து இதைப்பற்றி விளக்கமாகக் கூறுவோம்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் இளைஞராக இருந்த பொழுது அவர்களுடைய குடும்ப வரலாற்றில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி ஏற்பட்டது. சென்னைக்கு அருகில் மணலி என்னும் ஓர் ஊர் உள்ளது. அந்த ஊர் ஒரு பிரசித்திபெற்ற சமஸ்தானமாக விளங்கியது. அதன் உரிமையாளர் முத்துகிருஷ்ண முதலியார் என்பவர் ஆவார். அவர் சிறந்த பக்திமானாகவும், கலைகளை நன்கு ஆதரிப்பவருமாக விளங்கினார். அவர் ஒரு முறை ஸ்தல யாத்திரை சென்ற பொழுது திருவாரூரை அடைந்தார். திருவாரூரில் அவர் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி

கள் கோயிலுக்குச் சென்றிருந்த பொழுது அங்கு பஜனை நடப்பதைக் கண்ணுற்ருர். பஜனைப் பாடல்கள் அவரது கருத்தைக் கவர்ந்தன. அப் பாடல்களால் அவர் புளகாங்கிதம் அடைந்தார். அந்தப் பஜனையை நடத்தியவர் இராமஸ்வாமி தீக்ஷிதரே ஆவார். பஜனையில் பரவசமுற்ற முத்துகிருஷ்ண முதலியார் இராமஸ்வாமி தீக்ஷிதரைத் தம்முடைய மணலியில் சமஸ்தான வித்வானுக வந்து இருக்கும்படி வேண்டிக் கொண்டார். இராமஸ்வாமி தீக்ஷிதரும் அந்த வேண்டுகோளை ஏற்று, தமது குடும்பத்தினரோடு மணலி சென்று குடி ஏறினர்.

மணலியில் இராமஸ்வாமி தீக்ஷிதருடைய வாழ்க்கை ஒளி மயமாக விளங்கியது. அவருடைய இசைப் புலமை அந்தப் பகுதியில் பலரைக் கவர்ந்தது. அதனுல் அவரது பெயரும் புகழும் எங்கும் பரவின. முத்துகிருஷ்ண முதலியார் இராமஸ்வாமி தீக்ஷிதரை மிகுந்த மரியாதையுடன் நடத்தி அவ்வப்போது பலவகைப் பரிசுகள் அளித்துக் கௌரவித்து வந்தார். கொஞ்ச காலத்தில் முத்துகிருஷ்ண முதலியார் இறைவன் திருவடி நீழலை அடைந்தார். ஆனுலும் அவருடைய மைந்தராகிய வேங்டகிருஷ்ண முதலியார் இராமஸ்வாமி தீக்ஷிதரை நன்கு ஆதரித்து வந்தார். தந்தையைக் காட்டிலும் அவருக்குக் கலை ஆர்வம் நிரம்ப இருந்தது. ஆகவே அவர் இராமஸ்வாமி தீக்ஷிதருக்கு தாராளமாகப் பலவித உதவிகளைச் செய்து வந்தார். அப்பொழுது இராமஸ்வாமி

தீக்ஷிதர் 108 இராகங்களிலும் தாளங்களிலும் அமைந்த இராக தாள மாலிகை ஒன்றை இயற்றி அதனை மணலி வேங்கடகிருஷ்ண முதலியாருக்கு உரிமையாக்கினர். அப்பொழுது அவருக்குப் பிரத்யேகமான பல விருதுகள் கிடைத்தன. வேங்கட கிருஷ்ண முதலியார் சென்னையில் கிழக்கிந்திய கம்பெனியில் துவிபாஷியாகவும் இருந்தார். அதனால் அவர் அடிக்கடி சென்னையில் செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்குச் செல்லும் வாய்ப்பு உண்டாயிற்று. அவ்விடத்தில் அடிக்கடி நடைபெறும் பாண்டு வாத்தியக் குழுவினர் இசைக்கும் மேனாட்டு இசையினைக் கேட்கும் வழக்கம் உண்டு. அவர் தம்மோடு பல சமயங்களில் முத்துஸ்வாமி தீக்ஷிதரையும் அவரது சகோதரர்களையும் அழைத்துச் செல்லுவார். அத்தகைய சந்தர்ப்பங்களில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் அந்த மேனாட்டு இசை மெட்டுக்களை வியப்புடன் கேட்பார். இவ்வாறு முத்துஸ்வாமி தீக்ஷிதரின் குடும்பம் மேனாட்டு இசையினைக் கேட்கும் வாய்ப்பினைப் பெற்றது, தென்னிந்திய ஸங்கீத வளர்ச்சியில் பற்பல புதுமைகள் புகுவதற்குக் காரணமாக இருந்தது.

பாண்டு வாத்திய கோஷ்டியினர் இசைத்த பல இனிய மெட்டுக்களை முத்துஸ்வாமி தீக்ஷிதர் கிரஹித்துக் கொண்டார். அக்காலத்தில் கர்னல் ப்ரௌன் என்பவர் கிழக்கிந்தியக் கம்பெனியில் ஒரு உத்தியோகஸ்தராக இருந்தார். மேனாட்டு ஸங்கீதத்தில் வல்லவராகிய அவர் ஆங்கில இசை மெட்டுக்கள் சிலவற்றை இந்திய மக்களுக்கு அறி

முகப்படுத்த விரும்பினர். ஆகவே அவர் தம்முடைய விருப்பம் நிறைவேறுவதற்கு முத்துஸ்வாமி தீக்ஷிதரின் உதவியை நாடினர். தீக்ஷிதரும் அதற்கிசைந்து சில மேனாட்டு ஸங்கீத மெட்டுக்களில் ஸம்ஸ்க்ருத ஸாகித்தியங்களை அமைத்துக் கொடுத்தார். அத்தகைய ஐம்பது ஸாகித்தியங்கள் இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளன. உதாரணமாக 'காட் ஸேவ் தி கிங்' [God Save the King] என்னும் பிரபலமான இன்னிசைப் பாடலுக்கு முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஸம்ஸ்க்ருத ஸாகித்தியம் அமைத்தார். அந்த ஆங்கிலப் பாடலில் உள்ள சொற்களுக்கு ஏற்றவாறு வடமொழிச் சொற்களை அமைத்தார். அரசனுக்குப் பதிலாக தேவியை அமைத்து மக்கள் எல்லோரையும் காப்பாற்றும்படி பிரார்த்தனை கீதமாக அந்த ஸாகித்தியம் அமைந்தது* இப்படிப்பட்ட மேனாட்டு ஸங்கீத மெட்டுக்களில், ஸம்ஸ்க்ருத ஸாகித்தியங்களை அமைத்துப் பாடுதலைக் கேட்கும் ஒருவருக்கு ஒரு புத்துணர்ச்சி ஏற்படுவதில் ஐயமில்லை. இத்தகைய புதுமைகளால் புதிய அழகும் புதுப் பொலிவும் தோன்றுதலை நாம் காணலாம். இதனால் பழைய மெட்டுக்கள் சில புது மெருகு பெற்று விளங்குகின்றன. முத்துஸ்வாமி தீக்ஷிதர்

---

* ஸந்ததம் பாஹிமாம் ஸங்கீத ச்யாமளே
ஸர்வாதாரே ஜனனி
சிந்திதார்ப்பப்ரதே சித்ரூபிணி சிவே
ஸ்ரீகுருகுஹ பூஜிதே சிவமோஹாகாரே
ஸததம் பாஹிமாம்

இயற்றிய இவ்வகை ஸாகித்தியங்கள் எல்லாம் இந்து சமயத் தெய்வங்களின் புகழைக் கூறுவன வாக அமைந்துள்ளன. அவை ஒவ்வொன்றும் தனித்தனி முறையில் வசீகரிக்கும் தன்மை பெற் றவை. அவை யாவும் கர்னாடக ஸங்கீதத்தைக் கற்கத் தொடங்குபவர்களுக்குச் சுலபமான அப் யாஸ கானமாக விளங்குபவை. ஆனால் இத் தகைய மேனாட்டு மெட்டுக்களில் அமைந்த ஸாஹித்தியங்களுக்கு முக்கியமான இடம் கொடுத்துவிடக் கூடாது. உண்மையாக ஆராய்ந்து பார்த்தால் அவற்றிற்குக் கர்னாடக ஸங்கீதத்தில் இடமே இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்றால் அவற்றில் இராகமோ தாளமோ இல்லை. ஆனால் நமது கர்னாடக ஸங்கீ தமோ இராகமும் தாளமும் கலந்து குழைத்து எழுப்பப்பெற்ற ஒரு பெருங் கட்டிடமாகும். மேனாட்டுச் சங்கீத மெட்டுக்களுக்கும் நமது கர்னா டக ஸங்கீத இராக தாளங்களுக்கும் எத்தகைய தொடர்புமில்லை.

ஆயினும் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் குடும்பத் திற்கும் மேனாட்டு ஸங்கீதத்திற்கும் உண்டான தொடர்பினால் பெரும் பயன் ஒன்று கர்னாடக ஸங்கீத உலகிற்குக் கிட்டியது. நம்முடைய கர்னா டக ஸங்கீதக் கச்சேரிகளில் வயலின் முன்பெல் லாம் இடம் பெறவில்லை. சுருங்கக் கூறினால் வய லின் வாத்தியத்தைப்பற்றி நம்மவர் அறியவில்லை என்றே சொல்லலாம். வயலின் வாத்தியத்தைக்

கர்னாடக ஸங்கீதக் கச்சேரிகளில் சேர்த்துக்கொள்ளும் வழக்கத்தினை உண்டாக்கிய பெருமை தீக்ஷிதர் குடும்பத்தையே சாரும். நம் நாட்டில் பல வகைத் தந்தி வாத்தியங்கள் வழங்கி வந்தது உண்மைதான். ஆனால் வயலின் நமது ஸங்கீதத்திற்குப் புதியதே. தனுர் வீணை என்பது வயலினைப் போன்றதே என்று சிலர் சொல்லக்கூடும். இக்கருத்தைக் கொண்டு வயலின் நமக்குப் புதியதன்று எனச் சிலர் வாதாடலாம். அத்தகைய வாதத்தில் இறங்கத் தேவை இல்லை. தனுர்வீணை என்று பழங்காலத்தில் ஒரு கருவி இருந்தது உண்மையே. அதனைச் சிலர் பயன்படுத்தியதும் உண்மையே. ஆனால் நாளாவட்டத்தில் அந்தக் கருவி மறைந்து போயிற்று. இன்று அதைப்பற்றிய விவரம் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. இவ்வாறு தனுர்வீணையைப்பற்றி யாரும் அறிந்திராத நிலையில்தான் இராமஸ்வாமி தீக்ஷிதரும் அவருடைய புதல்வர்களும் செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் கேட்ட மேனாட்டு ஸங்கீதத்தில் இடம் பெற்ற வயலினைக் கண்ணுற்றனர். அந்த ஸங்கீதத்தில் வயலினுக்கு முதலிடம் கொடுக்கப்பெற்றிருந்தது. இவர்களுடைய கருத்தைக் கவர்ந்ததுடன், சிந்தனையையும் தூண்டிவிட்டது. அத்தகைய சிந்தனையால் ஸங்கீதக் கச்சேரிகளில் வீணையைப்போல் வயலின் தனி சிறந்த பக்க வாத்தியமாக உதவும் என்பது புலப்பட்டது. முத்துஸ்வாமி தீக்ஷிதர் வீணை வாசித்து வந்தார். ஆதலால் அவருடைய சகோதரராகிய பாலுஸ்வாமி வயலின் பயிற்சிபெற

வேண்டுமென முடிவு செய்யப்பெற்றது. பாலு ஸ்வாமிக்கு வயலின் கற்றுக் கொடுப்பதற்கு ஏற்ற ஐரோப்பிய ஆசிரியரை வேங்கடகிருஷ்ண முதலியாரே ஏற்பாடு செய்தார் என்றும் சொல்லப்பெறுகிறது. மூன்று வருஷப் பயிற்சியில் பாலுஸ்வாமி வயலின் வாசிப்பதில் வல்லவரானார். முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய வீணைக் கச்சேரிகளுக்கெல்லாம் பாலுஸ்வாமி பக்க வாத்தியமாக வயலின் வாசித்தார். இவ்வாறு பரிசோதனையாக ஆரம்பிக்கப் பெற்ற வயலின் பயிற்சி பிற்காலத்தில் பெரும் வெற்றியைத் தந்ததோடு, கர்நாடக ஸங்கீதக் கச்சேரி முறைகளில் ஒரு பெரும் புரட்சியை ஏற்படுத்தியது என்னலாம். தஞ்சை சகோதரர்களில் ஒருவரும் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் சிஷ்யருமாகிய வடிவேலு என்பவர் வயலின் வாசிப்பதில் கைதேர்ந்தவராக விளங்கினார். பிற்காலத்தில் அவர் திருவாங்கூரில் ஸ்வாதித் திருநாள் மஹாராஜாவின் சபையில் ஸமஸ்தான வித்வானாக இருந்தபொழுது இந்த வயலினை அங்கு அறிமுகப்படுத்தினார். தலை சிறந்த வயலின் வித்வானாக விளங்கிய திருக்கோடிக் காவல் கிருஷ்ணையர் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவரே ஆகும். திருக்கோடிக்காவல் கிருஷ்ணையர் கர்நாடக ஸங்கீதத்தில் வயலினின் நிலையைப் பெரிதும் உயர்த்தினார். அதிலிருந்து கர்நாடக சங்கீதக் கச்சேரிகளுக்கு வயலின் இன்றியமையாத பக்க வாத்தியமாகக் கருதப்பெற்றது. மேலும், வயலின் பக்க வாத்தியமில்லை என்றால்

எந்தக் கச்சேரியும் முழுமை பெற்றதாகக் கருதப் படவில்லை. ஆயின் இந்துஸ்தானி ஸங்கீதத்தில் வயலின் இத்தகைய முக்கியமான பக்க வாத்திய மாக இடம் பெறவில்லை என்பது இந்த இடத்தில் குறிப்பிடத் தக்கது.

இந்த நிலையில் முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க ஒரு மாறுதல் ஏற்பட்டது. சிதம்பரநாதயோகி என்பவர் இராம ஸ்வாமி தீக்ஷிதரின் குரு என்றும், ஸ்ரீ வித்யா உபாசனையில் அவரை ஈடுபடுத்தியவர் அந்த யோகியே என்றும், அந்த யோகியார் இராமஸ் வாமி தீக்ஷிதரை தந்த்ரீக முறையில் வழிபாடு செய்யுமாறு பணித்தவர் என்றும் முன்னமேயே சொன்னோம். இவற்றோடு அந்த யோகியார் வேதங்களில் வல்லவர். நாடு முழுவதும் சந்யாசி என்று போற்றப்பெற்றவர். அவர் ஒரு முனிவராக வும் தத்துவ ஞானியாகவும் விளங்கினார். இப்படிப் பட்ட சிதம்பரநாத யோகி காசியாத்திரைக்குக் கிளம்பினார். தெற்கே இருந்து புறப்பட்ட அவர் வழியில் சென்னையில் தங்கினார். அவரது சென்னை வருகையை அறிந்த அவரது சிஷ்யராகிய இராம ஸ்வாமி தீக்ஷிதர் அவரைத் தமது இருப்பிடத் திற்குப் பிக்ஷைக்காக அழைத்தார். சிதம்பரநாத ஸ்வாமிகளும் அதற்கு இசைந்து மணலியிலுள்ள தீக்ஷிதர் வீட்டிற்குச் சென்றார். வேங்கடகிருஷ்ண முதலியார் பூரண கும்ப மரியாதைகளுடன் யோகி யாரை வரவேற்று அவர் தங்குவதற்கான சௌ கரியங்களை எல்லாம் செய்து கொடுத்தார். முத்து

ஸ்வாமி தீக்ஷிதரும் அவரது தம்பியாரும் யோகி யாருடனேயே தங்கி, அவருக்குப் பணிவிடைகள் புரிந்துவந்தனர். யோகியார் பூஜை செய்யும் பொழுதெல்லாம் முத்துஸ்வாமி தீக்ஷிதர் பாடுவது வழக்கம். சிலநாட்கள் கழிந்தபின் ஸ்வாமிகள் தமது யாத்திரையைத் தொடங்கினர். அப் பொழுது இராமஸ்வாமி தீக்ஷிதரும் அவருடைய குடும்பத்தினரும் ஸ்வாமிகள்முன் சாஷ்டாங்க மாக நமஸ்காரம் செய்துவிட்டு அவருடைய ஆசி சுளை வேண்டினர். அந்நிலையில் சிதம்பரநாத ஸ்வாமிகள் இராமஸ்வாமி தீக்ஷிதரைப் பார்த்து "நான் உன்னை ஒன்று வேண்டப் போகின்றேன். அவ்வேண்டுகோளை நீ நிறைவேற்றுவாயா?" என்றார். அதற்கு இராமஸ்வாமி தீக்ஷிதர் "வேண்டுகோள் எதற்கு? தாங்கள் கட்டளை இட லாமே. தாங்களோ ஒரு துறவி. மேலும் எங் களுக்கு ஆசார்யர் அல்லவா நீங்கள்" என்றார். அதற்கு ஸ்வாமிகள் "நான் கேட்டதை நீ மறுக் காமல் கொடுப்பாயா?" என்று மீண்டும் வினவி னர். "கட்டாயமாகத் தருவேன்" என்று இராம ஸ்வாமி தீக்ஷிதர் கூறினர். அவ்வளவில் ஸ்வாமி கள் "உன்னுடைய மகனாகிய முத்துஸ்வாமியை என்னுடன் நீ அனுப்பவேண்டும். என்னுடைய யாத்திரைக் காலத்தில் அவன் என்னுடைய சிஷ் யனாக இருக்கட்டும். இதுவே என்னுடைய வேண்டுகோள்" என்றார்.

ஸ்வாமிகளின் இந்த வார்த்தைகள் இராம ஸ்வாமி தீக்ஷிதரின் செவிகளில் பேரிடிபோல்

விழுந்தன. அச் சொற்களைக் கேட்டவுடன் அவர் பெரும் திகைப்புற்றார். பேசும் சக்தியே இல்லாமல் அப்படியே அயர்ந்து உட்கார்ந்து விட்டார். இவ்வாறு சிறிது நேரம் மயக்கநிலையில் இருந்த இராமஸ்வாமி தீக்ஷிதர் தெளிவடைந்து ஸ்வாமிகளைப் பார்த்தார். ஸ்வாமிகளோ இராமஸ்வாமி தீக்ஷிதரின் பதிலையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அதுகண்ட தீக்ஷிதர் "ஸ்வாமி! முத்துஸ்வாமி நெடுநாள் கழித்து, தவம்கிடந்து நான்பெற்ற மகன். காசி எங்கு இருக்கிறது. நாம் எங்கே இருக்கிறோம்! அவனைப் பாராமல் எங்களால் எப்படி உயிர்வாழமுடியும்?" என்றார்.

"நீ கொடுத்த வாக்குறுதியை உன்னால் காப்பாற்ற முடியாவிட்டால், முடியவில்லை என்று வெளிப்படையாகச் சொல்லிவிடேன், நான் சென்றுவிடுகிறேன்" என்றார், சிதம்பரநாத யோகியார்.

"குருவே! உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். என்னுடைய வாக்குறுதியிலிருந்து என்னை விடுவிக்குமாறு தங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன் என்று சொல்லிக்கொண்டே இராமஸ்வாமி தீக்ஷிதர் ஸ்வாமிகளின் முன் விழுந்து வணங்கினார். சிதம்பரநாதஸ்வாமிகளும் அவ்விடத்திலிருந்து புறப்பட ஆயத்தமானார். ஆனால் அந்த நிலையில் வேங்கடகிருஷ்ண முதலியார் அங்கு வந்தார். ஸ்வாமிகளின் ஆசீர்வாதத்தைப் பெறுவதற்காக அவர்முன் வந்தபொழுது அங்கு நடந்த நிகழ்ச்சியை உணர்ந்தார். உடனே அவர் இராம

ஸ்வாமி தீக்ஷிதரை நோக்கி "ஐயா! தாங்கள் ஏன் தயங்குகிறீர்கள்? தடுமாற்றம் எதற்கு? விசுவாமித்திரர் குழந்தை இராமனைத் தன்னோடு கானகத்திற்கு அனுப்புமாறு கேட்டபொழுது தசரதற்கு நடுக்கமாகத்தான் இருந்தது. ஆனால் வசிஷ்டருடைய அறிவுரையைக் கேட்டு முடிவில், இராமனை விசுவாமித்திரருடன் காட்டுக்கு அனுப்பவில்லையா? அவ்வாறு சென்றதனால் இராமன் பலவகைப்பட்ட பெருமைகளை அடையவில்லையா? ஸ்வாமிகள் முத்துஸ்வாமியைத் தம்மோடு அனுப்புமாறு கேட்டதற்கு ஒரு சிறந்த காரணம் இருக்கவேண்டும். ஸ்வாமிகளுடன் முத்துஸ்வாமி சிஷ்யனாகச் செல்லுவதனால் அவனுக்கு நிச்சயமாகச் சிறந்த நன்மைகளே கிட்டும். ஐயா! சொன்ன வாக்கைக் காப்பாற்றுங்கள். சிறிதும் தயங்கவேண்டாம். ஸ்வாமிகளுடன் முத்துஸ்வாமியை அனுப்புங்கள். நடப்பவை எல்லாம் உங்களுடைய நன்மைக்காகத்தான்" என்றார்.

முடிவில் இராமஸ்வாமி தீக்ஷிதர் ஸ்வாமிகளின் வேண்டுகோளுக்கு இசையநேர்ந்தது. சிதம்பரநாதஸ்வாமிகள் முத்துஸ்வாமியைத் தமது சிஷ்யனாக ஏற்றுக்கொண்டார். பிறகு அவர், இராமஸ்வாமி தீக்ஷிதரையும், அவருடைய குடும்பத்தினரையும், வேங்கடகிருஷ்ண முதலியாரையும் ஆசீர்வதித்து முத்துஸ்வாமியுடன் தமது காசி யாத்திரையைத் தொடங்கினார்.

# 2

## காசி

அந்தக் காலத்தில் காசிக்குச் செல்லுவது என்பது சுலபமானதன்று. போகும்பொழுது பல வகைப் பட்ட இடையூறுகள் நேரிடும். காசிவரை நடந்தே செல்லவேண்டும். காசியோ நெடுந்தூரத்தில் உள்ளது. கொடிய காட்டு மிருகங்களாலும் கணக்கில்லாத தொல்லைகள் நேரும். இத்தகைய காரணங்களால் அக்காலத்தில் காசிக்குச் செல்லு பவர்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்தே செல்லு வது வழக்கம். மேலும் அவர்கள் இடைவழியில் ஆங்காங்குச் சத்திரங்களில் தங்கித்தங்கிச் செல்லு வர். அங்கங்கே வழியில் அமைந்திருந்த திருத் தலங்களை எல்லாம் அவர்கள் ஆர அமர தெரிசனம் செய்துகொண்டு தான் செல்லுவார்கள். இவ்வாறு காசியைச்சேர பல மாதங்கள் ஆகும். எனவே அக்காலத்தில் "காசிக்குச் சென்றவர் திரும்பினால் தான் நிச்சயம்" என்று சொல்லும் வழக்கம் உண்டு. இந்த நினைவினால் தான் இராமஸ்வாமி தீக்ஷிதர் தமது மைந்தனாகிய முத்துஸ்வாமியை ஸ்வாமிகளோடு காசிக்கு அனுப்பத் தயங்கினார்.

ஆனால் இராமஸ்வாமி தீக்ஷிதர் நினைத்த அள வுக்கு முத்துஸ்வாமியின் பயணம் அவ்வளவு கடினமானதாக இல்லை. சிதம்பரநாதஸ்வாமி களின் புகழ் பாரத நாடெங்கிலும் பரவி இருந்தது.

ஆகவே சென்ற இடங்களில் எல்லாம் மக்கள் பெரு வாரியாகத் திரண்டு வந்து அவரை வரவேற்று உபசரித்து வேண்டும் வசதிகளைச் செய்துகொடுத் தனர். இப்படிப்பட்ட சூழ் நிலையில் காசிக்குப் பயணம் செய்த முத்துஸ்வாமிக்கு அப்பயண காலம் இன்பமானதாகவே இருந்தது. சென்னை யிலிருந்து புறப்பட்ட யோகியாரும் முத்துஸ்வாமி யும் வடக்கு நோக்கிப் பயணத்தைத் தொடங் கினர்; வழியிலிருந்த புண்ணிய க்ஷேத்திரங்களை எல்லாம் தெரிசித்துக்கொண்டே காசியை அடைந் தனர். அங்கு அவ்விருவரும் ஒன்ருக ஐந்தாறு ஆண்டுகள் இருந்தனர்.

முத்துஸ்வாமி தீக்ஷிதரின் இந்தக் காசி வாழ்க் கைக் காலம் மிகமுக்கியமானதாகும். முத்து ஸ்வாமி தீக்ஷிதரை முழு உருவாக்கியது காசி என்று தான் சொல்லவேண்டும். சிதம்பரநாத யோகியோ ஆன்மீகப் பற்றும், மதப்பற்றும் மிக்கவர். அவருடைய சிஷ்யராக அமைந்த முத்துஸ்வாமி தீக்ஷிதரும் ஆழ்ந்த மதப்பற்றும், சிறந்த ஆன்மீகப்பற்றும் மிக்கவராக விளங்கினுர். ஸ்வாமிகள் தீக்ஷிதரை ஸ்ரீவித்யா உபாசனைத் துறையில் ஈடுபடுத்தினுர். அதற்காக அவர் தீக்ஷிதருக்கு 'ஷோடசாக்ஷரி' மந்த்ரத்தை உப தேசம் செய்து தந்த்ரீக முறையில் வழிபாடு செய் யும் முறையில் அவருக்குப் பயிற்சி கொடுத்தார். இவற்ருேடு ஸ்ரீசங்கராச்சார்ய ஸ்வாமிகளால் தோற்றுவிக்கப்பெற்ற வேதாந்த ரகசியங்களையும் கற்பித்தார். இத்தகைய சூழ்நிலையில் முத்து

ஸ்வாமி தீக்ஷிதருடைய தினசரி வாழ்க்கை நல்ல முறையில் அமைந்தது. அஃதாவது அவர் நாள் தோறும் அதிகாலையில் எழுவார். புனிதமான கங்கையில் நீராடுவார். பிறகு யோகப்பயிற்சி செய்வார். பின் தேவி பூஜை செய்வார். அதன் பின் சிதம்பரநாத யோகியாரிடம் வேதாந்தப் பாடம் கேட்பார். இவை முடிந்த பின் அவர் கோயிலுக்குச் சென்று, விச்வேச்வரரையும், அன்ன பூரணியையும் விசாலாக்ஷி அம்மையை யும் தெரிசிப்பார். தெரிசனம் முடிந்து தம் இருப் பிடம் திரும்பும்பொழுது சிதம்பரநாத யோகியார் மத்தியான பூஜையில் ஈடுபட்டிருப்பார். உடனே தீக்ஷிதர் தம் குருவின் முன் அமர்ந்து வேதபாரா யணம் செய்து, பாடல்களைப் பாடி, வீணை வாசிப்பார்.

மாலை வேளையில் மீண்டும் தீக்ஷிதர் கோயிலுக் குச் சென்று மூர்த்தங்களை வழிபடுவார். பிறகு அவர் ஸ்வாமிகளின் ஸாயங்கால பூஜையைக் கவனிப்பார். அப்பொழுது அவர் பஜனைப் பாடல் களைப்பாடுவார். இது தான் முத்துஸ்வாமி தீக்ஷி தரின் காசியில் தினசரி வாழ்க்கை. இளமைப் பரு வத்தில் இப்படிப்பட்ட ஒரு வாழ்க்கை பல வரு ஷங்கள் ஒருவருக்கு அமைந்தால் மனம் நேர்வழி யில் தான் செல்லும்; கட்டுப்பாட்டுடன் இருக்கும்; அவரை தருமவழியிலும், பக்தி மார்க்கத்திலும், ஞானமார்க்கத்திலும் செலுத்தும். அதே நிலைதான் முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கும் ஏற்பட்டது. அந்தப்

புனிதமான வாழ்க்கையின் சாயை அவருடைய க்ருதிகளிலெல்லாம் பிரதிபலிக்கக்காணலாம்.

முத்துஸ்வாமி தீக்ஷிதரும், சிதம்பரநாதயோகியும் காசியிலிருந்த காலத்தில் வட இந்தியாவிலுள்ள பல ஸ்தலங்களுக்கும் செல்லாமலிருந்திருக்க முடியாது. அவர்களுடைய வட இந்திய ஸ்தலயாத்திரை பற்றி எத்தகைய சான்றுகளும் காணப்படவில்லை என்றாலும் தீக்ஷிதருடைய க்ருதிகளில் அந்தச்சாயை புலப்படக்காண்கிறோம். பிற்காலத்தில் ஒரு ஸாஹித்திய கர்த்தாவாக ஆன பொழுது, அவர், தாம் வட இந்தியாவில் தெரிசித்த ஸ்தலங்களைப் பற்றி நினைவுகூர்ந்துள்ளார். அந்தந்தக் கோயில்களில் எழுந்தருளியுள்ள மூர்த்தங்களைப்பற்றி எல்லாம் க்ருதிகள் புனைந்துள்ளார். அவற்றுள் சில நமக்கு இன்று கிடைத்துள்ளன. அவற்றிலிருந்து பெருமதிப்புள்ள பல அரிய செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. அவற்றில் நாம் எதிர்பார்த்தபடியே விசுவேச்வரர், விசாலாக்ஷியம்மை, அன்னபூரணி, காசியிலுள்ள காலபைரவர் ஆகிய தெய்வங்களைப் போற்றும் பாடல்கள் உள்ளன. காசியிலுள்ள கங்கையைப் பற்றியும் புகழ்ந்துள்ள பாடலின் பகுதி நமக்குக்கிடைத்துள்ளது. பசுபதீச்வரர்பற்றிப் புகழ்ந்து அவர் இயற்றியுள்ள பாடல் இங்குக் குறிப்பிடத்தக்கது. அப்பாடலில் அவர் பசுபதீச்வரர் மேற்கு காஷ்மீர

---

* பஸ்சிம காச்மீர ராஜவிநுதம்

அரசரால்* வழிபாடு செய்யப் பெற்றவர் என்ற குறிப்புக்காண்கிறது. தீக்ஷிதர் பசுபதீச்வரர் கோயிலுக்குச் சென்றிருந்தபொழுது காஷ்மீர் அரசர் அங்கு ஈசனை வழிபட வந்திருக்கக் கூடும் என யூகிக்க இடம் இருக்கிறது. ஆனால் இதைப் பற்றித் திட்டமாக ஒன்றும் சொல்லமுடியவில்லை. எனினும் காட்மாண்டுவில் உள்ள பசுபதீச்வரர் ஆலயத்திற்கும் இந்தப் பாடலுக்கும் தொடர்பு உண்டு என்பது உறுதியாகிறது. மேலும் ஸ்ரீஸத்ய நாராயணரைப் பற்றி அவர் புகழ்ந்து புனைந்த பாடல் ஒன்று உள்ளது. அந்தப் பாடலில் ஸத்ய நாராயணர் பத்ரிநாத்தைப் பொலிவுபெற அருள் செய்கிறார் என்று வர்ணிக்கப் பெற்றுள்ளது.† இதிலிருந்து ஒன்று தெளிவாகிறது. சிதம்பர நாத யோகி, ஸ்ரீசங்கராச்சாரியாரின் அடிச்சுவட்டைப் பின் பற்றி, காட்மாண்டு, பத்ரி ஆகிய தலங்களுக்கு யாத்திரை சென்றிருக்கவேண்டும். முத்து ஸ்வாமி தீக்ஷிதரும் யோகியாருடன் அந்தத் தலங்களுக்குச் சென்றிருக்கவேண்டும்.

இங்கு மற்றொன்றும் நோக்குதற்குரியது. இந்த இரண்டு க்ருதிகளும் சிவபந்துவராளி இராகத்தில் அமைந்துள்ளன. அந்த இராகம் வேங்கடமகியின் மேளராக வரிசையில் 45-வது மேளகர்த்தாவாக அமைந்துள்ளது. அந்த இராகம் இப்பொழுது சுபபந்துவராளி என வழங்கப்பெறுகிறது. அதோடு அந்த இராகம் இந்துஸ்தானி ஸங்கீ

† பாலமான பதரீஸ்திதம்

தத்தைச் சேர்ந்த மியாங்கிதோடி இராகத்தை ஒத்துவிளங்குகிறது.

முத்துஸ்வாமி தீக்ஷிதரின் காலத்தில் சிவபந்துவராளி இராகம் அருமையாகத்தான் வழங்கி வந்தது. அந்த இராகத்தைப் பலரும் புறக்கணித்து வந்தார்கள். இன்றுகூட அந்த ராகம் நன்கு பரவவில்லை. ஆனால் மியாங்கிதோடியோ இந்துஸ்தானி ஸங்கீதத்தில் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. ஆகவேதான் முத்துஸ்வாமி தீக்ஷிதர் இவ்விரண்டு க்ருதிகளையும் இந்த இராகத்தில் அமைத்தார் என்றுகொள்ளுவது பொருத்தமாகும். மேலும் தீக்ஷிதர் பசுபதீச்வரரைப் பற்றிய க்ருதியில் அந்த மூர்த்திக்கு சிவபந்துவராளி இராகத்தில் விருப்பம் உண்டு‡ என்று வர்ணிக்கிறார். இதிலிருந்து அந்தத் தெய்வத்திற்கு முன் நடைபெற்ற பஜனைகளில் மியாங்கிதோடி இராகம் அதிகமாகக் கையாளப் பெற்றிருக்கவேண்டும் என யூகிக்கலாம்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் க்ருதிகளைப்பற்றிய மேற்கண்ட ஆராய்ச்சி மற்றொரு சுவைவாய்ந்த பெரியதொரு ஆராய்ச்சி செய்யத் தூண்டுகிறது. அவருடைய க்ருதிகளில் எந்த அளவுக்கு இந்துஸ்தானி ஸங்கீதம் செல்வாக்குப் பெற்றிருந்தது என்று ஆராய்வது பயன்தருவதாகும். இந்துஸ்தானி ஸங்கீதமும், கர்நாடக ஸங்கீதமும்

‡ சுக சௌனகாதி ஸேவித
சிவபந்துவராளி ராகப்ரியாய

இன்று வேறுபட்ட இசைகளாக நமக்குத் தோன்று கின்றன. இரண்டும் தனித்தனிப் பண்புகளைக் கொண்டுள்ளது என்பதும் உண்மை. இரண்டும் வெவ்வேறு பகுதிகளைச் சேர்ந்தது என்பதும் நமக்கு நன்கு தெரியும். ஆனால் இந்துஸ்தானி ஸங்கீதமும் கர்நாடக ஸங்கீதமும் ஒரே ஸங்கீத முறையின் இரு பிரிவுகளாகும். அவை இரண்டும் ஒரே உற்பத்தி ஸ்தானத்திலிருந்து உதித்தவை; இராகதாள அடிப்படையைக் கொண்டு தோன்றி யவை; இவையாவும் இந்திய ஸங்கீதத்திற்கே உரியவை. இவ்விருவகை ஸங்கீதங்களிலும் சாஸ் திரப் பகுதிகள் ஒரேவிதமானவை. இருவகை யிலும் ஆராய்ச்சி நூல்களும் ஒரே விதமானவை. ஒவ்வொன்றும் தனிப்பட்ட முறையில் வளர்ந்து வந்துள்ளது. ஆனால் அவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடு மொழிபற்றியதாகும். வேங்கடமகியின் காலத்தில் இத்தகைய வேறுபாடுகள் மிகைப் படுத்தப்படவில்லை. அவரே இந்துஸ்தானி ஸங்கீதத்திலும் வல்லவராக இருந்தார். இந்துஸ் தானி ஸங்கீதத்தில் பயிற்சி பெற்றவர்கள் பலர் அவருடைய சிஷ்யர்களாகவும் இருந்தனர். அவ ருடைய காலத்திற்கு முன்பு கர்நாடக ஸங்கீதம் இந்துஸ்தானி இராகங்கள் பலவற்றைச் சேர்த்துக் கொண்டு தன்மயமாக்கிக்கொண்டிருந்தது. வேங் கடமகி அத்தகைய இந்துஸ்தானி இராகங்கள் பலவற்றில் இலக்ஷண கீதங்கள் இயற்றியுள்ளார். வேங்கடமகியின் காலத்திற்குப் பிறகு அரசியல் சூழ்நிலை காரணமாக இவ்விருவகை ஸங்கீதங்

களும் விலகிச்செல்ல ஆரம்பித்தன. ஒன்ருே டொன்று கலப்பதற்கு வழியில்லாமற்போகவே ஒவ்வொன்றும் தனிப்பட்ட மார்க்கத்தில் வளரத் தொடங்கியது. அதன் பயனுகப் பிற்காலத்தில் இருவகை ஸங்கீதங்களில் வேறுபாடுகள் மிகுந்து விட்டன. அதே காரணத்திஞல் கர்னுடக ஸங்கீதத்தில் கலந்து தன்மயமான இந்துஸ்தானி இராகங்கள் தம்முடைய ஸ்வயப் பண்புகளை இழந்து, புதுவகையான ஸஞ்சாரங்களை மேற் கொண்டன. ஆகவே அவை முற்றிலும் வேறு பட்ட இராகங்களாக உருமாறிப்போயின. 18-ஆம் நூற்ருண்டின் இடைப்பகுதியில் தென்னிந்தியா வில் இந்துஸ்தானி ஸங்கீதத்தின் நிலை இதுவே யாகும்.

வேங்கடமகியின் ஸங்கீத சாஸ்திர முறையில் பயிற்சி பெற்றவர் முத்துஸ்வாமி தீக்ஷிதர். இந் துஸ்தானி ஸங்கீதம் அவரைப் பெரிதும் கவர்ந் தது. காசியில் வாழ்ந்த காலத்தில் கலப்பற்ற ஸ்வயமான இந்துஸ்தானி ஸங்கீதத்தைக் கேட் கும் வாய்ப்பு அவருக்கு அடிக்கடி கிடைத்தது. ஆகவே அவர் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, இந்துஸ்தானி ஸங்கீதத்தைக் கற்றுக் கொள்ள முற்பட்டார். கடவுள் வழிபாடு செய்யும் நேரமும், குருவுக்குப் பணிவிடை செய்யும் நேர மும் தவிர, மற்றைய நேரங்களிலெல்லாம் அவர் ஸங்கீதப் பயிற்சியிலேயே ஈடுபட்டார். அப்பொழு தெல்லாம் அவர் சிறப்பாக இந்துஸ்தானி இராகங் களைப் பயின்ருர். இவ்வாறு அவருக்கு அந்த

இராகங்களில் சிறந்த புலமை ஏற்பட்டது. இத்தகைய இந்துஸ்தானி இராகப் புலமையின் செல்வாக்கு அவருடைய ஸங்கீதத்தில் பொதுவாகக் காணப்படுகிறது. இந்துஸ்தானி இராகங்களை அவர் கையாளும் விதத்திலிருந்தும், இராக ஸஞ்சாரங்களிலும் அவருடைய இந்துஸ்தானி ஸங்கீத சாயல் நன்கு தென்படுகிறது. இந்துஸ்தானி இராகங்கள் சிலவற்றைக் கர்னாடக ஸங்கீதம் தன்மயமாக்கிக்கொண்டது என முன்பே குறிப்பிட்டோம். ஆனால் அவை வேங்கடமகியின் காலத்திற்குப் பிறகு பல மாறுதல்களை அடைந்துவிட்டன. முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளில் அவை தம்முடைய இயற்கையான தூய்மையையும் உருவையும் திரும்பப் பெற்று விளங்குகின்றன. இதற்குக்காரணம் முத்துஸ்வாமி தீக்ஷிதர் அந்த இராகங்களைத் தூய்மையான உருவத்தில் நேர்முகமாக காசியில் கற்றுக் கொண்டதேயாகும். அவ்வாறு கற்றுக்கொண்டதனால் எத்தகைய கலப்பும் இல்லாமல் அந்த இராகங்களை அவரால் பிரதிபலிக்க முடிந்தது. எனினும் கர்னாடக ஸங்கீதத்தின் அடிப்படையிலிருந்து அவரால் முழுவதும் விடுபட முடியவில்லை. இதற்கு ஓர் உதாரணம் காட்டுவோம். இந்துஸ்தானி ஸங்கீதமுறையைச் சேர்ந்த 'ஸாரங்' என்ற இராகத்தை கர்னாடக ஸங்கீதம் 'ப்ருந்தாவனி' என்ற பெயரில் ஏற்றுக் கொண்டிருக்கிறது. இவ்வாறு பெயர்களை மாற்றிக் கொள்ளுவது வழக்கத்தில் இருந்து வந்தது. 'மால் கோஸ்' என்ற இந்துஸ்தானி ராகம். கர்னாடக

ஸங்கீதத்தில் 'ஹிந்தோளம்' என்ற பெயரைப் பெற்றுள்ளது. இத்தகைய பெயர் மாற்றத்தினுல் அவற்றின் இசை அமைப்பிலோ, கையாளும் முறையிலோ வேறுபாடில்லை. வேங்கடமகி 'அம்பரகேச சம்புரே' என்று துவங்கும் ப்ருந்தாவனி ராக கீதத்தை இயற்றியுள்ளார். இதில் ஸ ரி ம ப நி ஸ் – ஸ் நி ப ம ரி ஸ என்னும் ஆரோஹண அவரோஹண முறையைக் கையாண்டிருக்கிருர். கர்ைடக ஸங்கீத முறையைச் சேர்ந்த மத்யமாவதி இராகத்திற்கும் இதே ஆரோஹண அவரோஹணம் தான். ஆனுல் ஒரு மாறுபாடு உண்டு. மத்யமாவதி இராகத்திற்கு இல்லாத காகலி (தீவ்ர) நிஷாதப்ரயோகமும், சில தனிப்பட்ட ஸஞ்சாரங்களும் ப்ருந்தாவனி இராகத்திற்கு உண்டு. இந்த கீதத்திலுள்ள ப்ருந்தாவனி இராகத்தின் லக்ஷணம் இந்துஸ்தானி ஸங்கீதத்திலுள்ள ஸாரங் என்னும் இராகத்தோடு முற்றிலும் ஒத்து விளங்குகிறது. வேங்கடமகியின் காலத்திற்குப் பிறகு இந்த இராகம் 'ப்ருந்தாவன ஸாரங்க' என இணைந்து, சில மாறுதல்களுடன் வழங்கப் பெற்றது. ஸாதாரண (கோமள) காந்தாரப்ரயோகமும் வெகு அற்பமாகக் கலப்பது உண்டு. இதனுல் விசேஷமான மாறுபாடு உண்டாகவில்லை. ஆனுல் பிறகு காகலி நிஷாதப்ரயோகமும் விசேஷமான ஸஞ்சாரங்களும் விலகிப்போயின. இதனுல் அந்த இராகத்தின் சாயையே அடியோடு மாறிப் போயிற்று. இவற்றை எல்லாம் முத்துஸ்வாமி தீக்ஷிதர் சரி செய்து அமைத்தார். அவர் ப்ருந்

தாவன ஸாரங்க இராகத்தில் 'ரங்கபுரவிஹாரா' 'ஸௌந்தர ராஜம்' 'ஸ்வாமிநாதேன' என்ற க்ருதிகளை இயற்றியுள்ளார். இந்தக் க்ருதிகளில் அவர் ஸாதாரண ப்ரயோகத்தை வெகு அல்பமாகக் கையாண்டிருக்கிறார். இந்த அல்ப ப்ரயோகத்தையே அவர் நீக்கி இருந்தாலும் க்ருதிகளின் அமைப்பில் எத்தகைய மாறுபாடும் ஏற்பட்டிருக்காது. அவர் அந்த இராகத்தைக் கையாண்டிருக்கிற முறைக்கும் இந்துஸ்தானி ஸங்கீதத்தைச் சார்ந்த ஸாரங் இராகத்தின் அமைப்பிற்கும் சிறிதும் வேறுபாடில்லை.

இனி முத்துஸ்வாமி தீக்ஷிதர் மற்றைய இந்துஸ்தானி இராகங்களைக் கையாண்டுள்ள விதத்தைப் பார்ப்போம். யமுனா கல்யாணி (யமன்) இராகத்தில் தீக்ஷிதர் பல க்ருதிகளை இயற்றி இருக்கிறார். அவற்றுள் 'ஜம்பூபதே மாம்பாஹி' என்னும் க்ருதியைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். அந்த க்ருதி இராக பாவ வளத்திலும், பொலிவிலும் தன்னிகரற்று விளங்குகிறது. 'பரிமளரங்கநாதம்' என்று துவங்கும் அவருடைய ஹமீர் கல்யாணி ராக க்ருதி மற்றொரு சிறந்த உருப்படியாகும். அந்த க்ருதியில் ஹமீர் கல்யாணி இராகத்தின் பூரண சாயையும் இந்துஸ்தானி ஸங்கீதத்தில் கையாளுவதைப் போலவே சுவைபட அமைந்துள்ளது. சிற்சில இடங்களில் அந்த இராகத்தில் 'கேதார்' என்னும் இந்துஸ்தானி இராகத்தின் சாயை வீசுகிறது. தென்னிந்திய ஸங்கீதத்தில்

அத்தகையவை பல நூற்றுண்டுகளாகக் கையாளப் பெற்று வருகின்றன. கர்நாடக ஸங்கீதம் 'த்விஜாவந்தி' என்ற பெயரில் ஏற்றுக்கொண்ட மற்ருெரு இந்துஸ்தானி இராகம் 'ஜெய் ஜெய் வந்தி' ஆகும். இந்த இராகத்தில் தீக்ஷிதர் 'சேதஸ்ரீ பாலகிருஷ்ணம்' என்ற க்ருதியை இயற்றியுள்ளார். இந்த க்ருதியில் அந்த இராகத்தின் பரிபூரண ரூபம் காணப் பெறுகிறது. அந்த இராகத்தில் அமைந்த கவர்ச்சிகரமான பாடலாக இந்த க்ருதி கருதப்படுகிறது. மாளவ பஞ்சமம் என்ருெரு இராகம் இருக்கிறது. இந்த இராகத்தில் தீக்ஷிதர் 'வாஸுதேவ முபாஸ்மஹே' என்று துவங்கும் க்ருதியை இயற்றியுள்ளார். இந்துஸ்தானி ஸங்கீதத்தைச் சேர்ந்த 'பஸந்த்' என்னும் இராகம்தானே என்று நினைக்கும்படியாக இந்த க்ருதி அமைந்திருக்கிறது. நாம் கையாளுகின்ற முறையில் மட்டும் சிறு மாற்றம் உண்டாகி இருக்கிறது. இந்துஸ்தானி இராகப் புலமையினுல் முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய க்ருதிகள் பெற்ற வளம்பற்றிப் போதுமான அளவு சொல்லிவிட்டோம். இந்தக் கோணத்திலிருந்து அவருடைய க்ருதிகளை ஆழ்ந்து ஆராய்தல் விரும்பத்தக்கது. அவ்வாறு ஆராயப் புகுவோர் இந்துஸ்தானி ஸங்கீதத்திலும், கர்நாடக ஸங்கீதத்திலும் நல்ல புலமை பெற்றவர்களாக இருக்கவேண்டும்.

இந்துஸ்தானி ஸங்கீதத்திலிருந்து மேற்கொள்ளப்பெற்ற இராகங்களைத் தவிர ஏனைய இராகங்களைத் கையாண்டுள்ள விதத்தை நுட்பமாக

நோக்கினுல் அவருக்கு இந்துஸ்தானி ஸங்கீதத்திலுள்ள ஆழ்ந்த புலமை ஆங்காங்கு வெளிப்படுவது புலனுகும். இந்த விஷயத்தைப்பற்றி, முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய ஸங்கீதத் திறமையை ஆராயும் அத்யாயத்தில் கவனிப்பது தான் பொருத்தம்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் காசியில் ஐந்து, ஆறு ஆண்டுகளை மகிழ்ச்சியாகக் கழித்தார். அப்பொழுதெல்லாம் அவர் வேதாந்த சாஸ்திர அறிவையும், ஸங்கீத அறிவையும் வளர்த்துக் கொண்டார். ஒரு நாள், சிதம்பரநாத யோகி, அன்னபூர்ணேச்வரியை வழிபடும்பொழுது தீக்ஷிதரை நோக்கி "இந்த தேவி மக்களின் வாழ்க்கைக்குத் தேவையானவற்றை எல்லாம் அருளுவாள். அவற்ருேடு மோக்ஷஸாம் ராஜ்யத்தையும் தருவாள். ஆகவே உன்னுடைய வாழ்நாள் முழுவதும் தவருமல் இந்தத் தேவியை நீ வழிபட்டு வரவேண்டும்" என்று அறிவுரை கூறியதாக ஒரு கர்ண பரம்பரைச் செய்தி வழங்குகிறது. இத்தகைய அறிவுரை கூறிய மறுதினம் சிதம்பரநாத யோகியும் முத்துஸ்வாமி தீக்ஷிதரும் நீராடுவதற்கு கங்கைக்குச் சென்றனர். அங்கு யோகியார் தீக்ஷிதரை நோக்கி "நாம் பிரியும் நேரம் நெருங்கி விட்டது. உன்னுடைய வீட்டுக்குத் திரும்பி உனது பெற்ருேர்களையும் சகோதரர்களையும் காணவேண்டும் என்ற ஆசை உனக்கு உண்டாக வில்லையா? என்று கேட்டார். அதற்கு தீக்ஷிதர் "தெய்வ

வழிபாடு செய்வதிலும், முக்திக்ஷேத்திரமாகிய இந்தக் காசியில் உங்களுக்குப் பணிவிடை செய்வதிலும் என்னுடைய வீட்டை நான் மறந்துவிட்டேன்" என்று சொன்னார். அது கேட்ட யோகியார் "அது சரி! நீ உன் வீட்டை மறந்திருக்கலாம். ஆனால் உன் தந்தை உன்னை மறந்திருப்பாரா? உன்னை என்னோடு அனுப்புவதற்கே அவர் விரும்பவில்லையே. உன்னைப் பார்க்க வேண்டுமென்று அவர் ஆசைப்படுவாரே. அவரைக் கவனித்து அவருக்கு நீ பணிவிடை செய்ய வேண்டாமா? சரி. இந்தக் கங்கையில் இன்னும் இரண்டு மூன்று படிகள் இறங்கு. அங்கு உனக்கு என்ன கிடைக்கிறது என்பதை எனக்கு நீ சொல்" என்று கட்டளையிட்டார்.

குருவின் கட்டளைக் கிணங்கி தீக்ஷிதர் கங்கையில் 3, 4 படிகள் இறங்கினார். ஆம். என்ன ஆச்சர்யம்! அவருக்கு அங்கு ஒரு வீணை கிடைத்தது. அந்த வீணையில் 'ராம' என்ற சொல் தேவநாகரி லிபியில் பொறிக்கப்பெற்றிருந்தது. அந்த வீணையை தீக்ஷிதர் குருவினிடம் சமர்ப்பித்தார். உடனே யோகியார் "கங்காதேவி உனக்குக் கொடுத்த பிரசாதம்தான் இது. நீ சிறந்தவைணிகவித்வானாகவும் வாய்ப்பாட்டு வித்வானாகவும் விளங்குவாய்" என்று ஆசீர்வதித்து அந்த வீணையைத் தீக்ஷிதரிடம் கொடுத்தார்.*

* இந்த வீணை இப்பொழுது பாலுஸ்வாமி தீக்ஷிதரிடம் உள்ளது. இந்த பாலுஸ்வாமி தீக்ஷிதர், ஸுப்பராம தீக்ஷிதரின் பேரர் என்பதும், எனது குருவாகிய முத்துஸ்வாமி தீக்ஷிதர் என்னும் அப்பி தீக்ஷிதரின் மகன்

இவ்வாறு ஆசீர்வதித்த சிதம்பரநாத யோகி யார் தீக்ஷிதரைக்கரையில் இருக்கச் செய்து வழக் கம்போல் கங்கையில் ஸ்நானம் செய்ய நீரில் மூழ்கினுர். மூழ்கிய யோகியார் மறுபடியும் வெளியே வரவில்லை. யோகியார் காசிக்கு வந்த காரியம் முடிந்துவிட்டது போலும்! அவர் பூத உடலை விடுத்து இறைவன் திருவடி நீழலை அடைந்து விட்டார். ஹனுமான் கட்டத்தில் அவரது பூத உடல் சமாதி வைக்கப் பெற்றது. தமக்குச் சிறந்த வழிகாட்டியாகவும், குருவாகவும் விளங்கிய சிதம்பரநாத யோகியாரின் மறைவினுல் முத்துஸ்வாமி தீக்ஷிதர் தீராத்துயரம் எய்தினுர். அத்தகைய துயரத்துடன் அவர் காசியை விட்டு நீங்கித் தமது ஊர் நோக்கித் திரும்பலானுர்.

---

என்பதும், அந்த அம்பி தீக்ஷிதர் ஸுப்பராம தீக்ஷிதரின் மகன் என்பதும் கொள்ளவேண்டும்.

3

## திருத்தணியும் காஞ்சியும்

காசியை விடுத்துப் புறப்பட்ட முத்துஸ்வாமி தீக்ஷிதர் மெல்ல மெல்ல யாத்திரை செய்து மணலி வந்துசேர்ந்தார். அவரைக் கண்ணுற்ற பெற்றோர் களும் சகோதரர்களும் பெருமகிழ்ச்சி அடைந் தனர். அவருடைய காசிவாழ்க்கையில் நடை பெற்ற நிகழ்ச்சிகளை எல்லாம் கேட்டு வியப்புற்ற னர். அவர் வேதாந்தத்தில் பெற்ற பேர் அறிவினை உணர்ந்து அவர்கள் அவரிடம் மரியாதை காட் டினர். அவருடைய இந்துஸ்தானி ஸங்கீதத்தின் பெரும் புலமைகண்டு பெரிதும் மதித்தனர். இவ்வாறு சிலகாலம் மணலியில் அவர்களுடைய வாழ்க்கை குதூஹலமாக இருந்தது *

ஆனால் இப்படிப்பட்ட குதூஹலமான மணலி வாழ்க்கை முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு மன நிறைவை உண்டாக்கவில்லை. சிதம்பரநாத யோகி யாரின் நினைவு அவரது உள்ளத்தில் அழியாத இடத்தைப் பெற்றிருந்தது. அவர் தமது இஷ்ட தெய்வம் ஸ்ரீ ஸுப்ரமணியக் கடவுள் என்பதனை

* தீக்ஷிதர் மணலி திரும்பியதுபற்றி வேறுவகையான வரலாறு ஒன்றும் சொல்லப்படுகிறது. அவர் மணலிக்குத் திரும்பியபோது அவருடைய பெற்றோர்கள் அங்கு இல்லை என்றும், அவர்கள் முன்னதாகவே திருவா ரூருக்குச் சென்றுவிட்டனர் என்றும் கூறுகின்றனர். உண்மை எதுவா யினும் இங்கு நாம் சொல்லப்போகும் செய்தியில் எத்தகைய மாறுதலும் இருக்க இடமில்லை.

நினைவில் வைத்திருந்தார். அந்தக் கடவுளின் எல்லையற்ற பெருமையையும், கரையில்லாத கருணையையும் பற்றி அவர் அடிக்கடி எல்லோருக்கும் சொல்லுவதுண்டு. ஆகவே அந்த ஸுப்ரமணியக் கடவுளை வழிபாடு செய்யவேண்டும் என்ற ஒரு பேரார்வம் அவருக்கு உண்டாயிற்று. மணலியிலிருந்து ஏறத்தாழ ஐம்பது மைல் தூரத்தில் திருத்தணி என்னும் பிரசித்தமான ஸ்தலம் உள்ளது. அந்தத் திருத்தலத்தில் உள்ள மலை உச்சியில் ஸ்ரீ ஸுப்ரமணியப் பெருமான் திருக்கோயில் கொண்டிருக்கிறார். அந்தத் திருத்தலத்திற்கு முத்துஸ்வாமி தீக்ஷிதர் சென்று, மலைப் படிகளில் ஏறி, உச்சியை அடைந்து, முருகப் பெருமான் முன்நின்று ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டார். அப்பொழுது அவர் "என் தந்தை பாலாம்பிகையை ஒரு மண்டல காலம் வழிபட்டார். தான் தந்தையாகவேண்டும் என்ற விருப்பத்துடன் அவர் அவ்வாறு வழிபட்டுப் பயன் அடைந்தார். நான் ஏன் அந்த அம்பிகையின் மைந்தராகிய முருகப் பெருமானை ஒரு மண்டல காலம் வழிபாடுசெய்து ஆன்மீக ஞானத்தைப் பெறக்கூடாது" என்று சிந்தித்தார். இத்தகைய சிந்தனையின் பயனாக அவர் திருத்தணியில் நாற்பது நாட்கள் தங்க முற்பட்டார். ஸுப்ரமணியக் கடவுளை வழிபடுவதிலும் பஜனைகள் நடத்துவதிலும் அவர் காலம் கழித்தார். ஸுப்ரமணிய மூர்த்தியின் எதிரில் அமர்ந்து ஷடாட்சரி ஜபம் செய்வதும், பஜனைப் பாடல்கள் பாடுவதும்

அவருடைய தினசரி வழக்கமாக இருந்தது. யாத்ரீகர்கள் பலர் அந்தத் திருத்தலத்திற்கு வருவதும் போவதுமாக இருந்தனர். ஆனால் தீக்ஷிதரோ தமது நியதியிலிருந்து சிறிதும் மாற வில்லை. திருத்தணி மலை எவ்வாறு அசையாமல் இருந்ததோ அதைப்போலவே அவருடைய மன மும் கொஞ்சமும் சலியாமல் இருந்தது. சித்தத்தை ஒரு நிலைப்படுத்தி தியானத்தில் ஈடுபட்டிருந்தார் முத்துஸ்வாமி தீக்ஷிதர்.

இவ்வாறு தியானத்தில் ஈடுபட்டிருந்த நாற்ப தாம் நாள் தீக்ஷிதருடைய வாழ்க்கையில் பெரும் திருப்பத்தை உண்டாக்கிய ஒரு நிகழ்ச்சி நடந் தது. அந்த நாற்பதாம் நாள் நடுப்பகல் வழிபாடு முடிந்த பிறகு அவர் ஷடாட்சரி மந்திரத்தைக் கண்கள் மூடியவாறு உச்சரித்துக் கொண்டிருந் தார். அப்பொழுது பெரும்பாலான யாத்ரீகர்கள் தெரிசனம் முடிந்து திரும்பிவிட்டனர். தீக்ஷிதர் கண்களை மூடியவாறு தியானத்தில் ஈடுபட்டிருந்த பொழுது ஒரு முதியவர் அவருக்கு எதிரில் வந்து "முத்துஸ்வாமி! உன் வாயைத் திற" என்று கூறினார். உடனே தீக்ஷிதர் கண்களைத் திறந் தார். தெய்வ ஒளி வீசிக் கொண்டிருந்த அந்த முதியவரைக் கண்டார். "நாமோ இந்த ஊருக் குப் புதியவன். என்னுடைய பெயர் இந்த முதிய வருக்கு எப்படித் தெரிந்தது" என்று தீக்ஷிதர் சிந்தித்தார். அந்நிலையில் அந்த முதியவர், தீக்ஷி தரின் வாயில் ஏதோ ஒரு பொருளை இட்டவாறே "உன்னுடைய கண்களை மூடிக்கொள். நான்

உனது வாயில் இட்டது என்ன என்பதைக் கண்டு பிடித்துச் சொல்" என்றார். அவருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்தவாறே தீக்ஷிதர் கண்களை மூடிக்கொண்டு "ஸ்வாமி! இது கற்கண்டு" என்று சொல்லிக்கொண்டே கண்களைத் திறந்தார். என்ன ஆச்சரியம்! அங்கிருந்து அந்த முதியவர் மாயமாக மறைந்து விட்டார். அந்த முதியவருக்குப் பதிலாக வல்லீதேவஸேனா ஸமேதராக மயிலின்மீது ஸ்ரீ ஸுப்ரமணியக் கடவுள் நின்ற காக்ஷி அவருக்குத் தென்பட்டதாகச் சொல்லப் படுகிறது. பிறகு அந்த உருவம் மெல்ல மெல்லப் பின்நோக்கிச் சென்று கர்ப்ப க்ருஹத்தில் மறைந்துவிட்டது. முதியவர் உருவத்தில் தமக்கு எதிரில் நின்று, தம் வாயில் கற்கண்டை இட்டவர் ஸ்ரீ ஸுப்ரமணிய ஸ்வாமியே என்று உணர்ந்த தீக்ஷிதர் அந்தக் கற்கண்டே முருகப் பெருமான் தமக்களித்த ஞானம் எனவும் யூகித்தார். அப்பொழுது அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவர் தம்மை மறந்து முருகப் பெருமானைப் புகழ்ந்து பல க்ருதிகளை இயற்றலானார். அந்த க்ருதிகளிலெல்லாம் அவர் முருகப் பெருமானை 'குருகுஹ' என்று அழைக்கிறார். இவ்வாறு திருத்தணியில் அவர் அருளிய க்ருதிகள் எல்லாம் 'குருகுஹ' க்ருதிகள் அல்லது திருத்தணி க்ருதிகள் என அழைக்கப்பெறுகின்றன.

திருத்தணி க்ருதிகளில் முதற் க்ருதி "குஹா! ஸ்ரீ நாதா முதலாகிய தேவதைகளுக்கெல்லாம் முதல்வராக விளங்கும். குஹன் எல்லையற்ற

சிறப்புடன் விளங்குகிருர். * ஸ்ரீ வித்யா உபாசனை யில் ஈடுபட தீக்ஷை பெறுபவர்களுக்கு, தொடக் கத்தில் ஒரு தீக்ஷா நாமம் கொடுக்கப்படுவது வழக்கம். முத்துஸ்வாமி தீக்ஷிதரின் குருவாகிய சிதம்பரநாதஸ்வாமிக்கு "ஸ்ரீ நாதானந்தா" என்பது தீக்ஷா நாமம். முத்துஸ்வாமி தீக்ஷித ருக்கோ "சிதானந்தநாத" என்பது தீக்ஷா நாமம். ஆகவே இந்த முதற் க்ருதியில் 'ஸ்ரீ நாதா' என் னும் சொல் தீக்ஷிதருடைய குருவாகிய சிதம்பர நாத யோகியைக் குறிப்பதாகும். இந்தப் பாட்டு மாயா மாளவகௌள ராகத்தில் அமைந்துள்ளது. புரந்தரதாஸருடைய காலத்திலிருந்து மாயா மாளவகௌள இராகத்தில்தான் கர்நாடக ஸங்கீ தப் பயிற்சி பெறுபவர்களுக்கு ஸ்வர அப்யாசங்கள் கொடுப்பது வழக்கம் என்பதும் நினைவுகொள்ளத் தக்கது.

இந்த க்ருதிக்குப் பிறகுதான் 'மானஸ குருகுஹ' என்ற பிரசித்திபெற்ற ஆனந்த பைரவி இராக க்ருதி இயற்றப்பெற்றது. திருத்தணியில் முருகப் பெருமான் தெரிசனம் தந்து மறைந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து, இந்த க்ருதியில் அவர் "ஏ மனமே! குருகுஹனின் ரூபத்தை நினை. மாயைகளினுல் ஏற்படும் சஞ்சலங்களை எல்லாம் அகற்று" என்ற கருத்தினை அமைத்துள்ளார். † பூர்வி இராகத்தில் அமைந்துள்ள மற்றொரு க்ருதியில் அவர் "நான்

* ஸ்ரீ நாதாதி குருகுஹோ ஜயதி ஜயதி

† மானஸ குருகுஹ ரூபம் பஜரேரே
மாயாமய ஹ்ருத்தாபம் த்யஜரேரே

குருகுஹனின் தாஸன். நானே குருகுஹன் என்று சொல்லலாம்'' என்ற கருத்தினை அமைத்துள்ளார். *

மேலே குறிப்பிடப்பெற்ற க்ருதிகளில் காணப் பெறும் கருத்துக்களை நன்கு புரிந்துகொள்ள வேண்டுமானல் வேதாந்தத் தத்துவங்களை ஒரு சிறிது அறிந்துகொள்ளுதல் இன்றியமையாததா கும். வேதாந்தத்தில் இருவகைக் கொள்கைகள் உள்ளன. ஒரு வகையைச் சேர்ந்தவர்கள் ஓர் பக்தன் கடவுளுடைய அருளைப்பெற்றல் அவ னுக்கு மோக்ஷத்தில் இடம் கொடுக்கப்பட்டு விடும் என்றும், அவன் கடவுளுக்குத் தாஸனக இருந்து பணிவிடை செய்யும் சிறந்த தகுதி கிடைக்கும் என்றும் சொல்லுகிருர்கள். ஆனல் மற்றொருவகை வேதாந்திகளோ இதனின்றும் வேறுபடக் கூறு கிருர்கள். உண்மையானதும் அழிவில்லாதது மாகிய பேரானந்தம் கடவுளை உண்மையாக உணர்ந்தவர்களுக்குத் தான் கிட்டும் என்றும், ஞானத்தினல் தான் கடவுளை உண்மையாக உணரமுடியும் என்றும், அதற்கு முக்கியமான வழி காட்டி பக்தியே என்றும் சொல்லுகிருர்கள். ஸ்ரீசங்கராச்சாரியார் இந்த இரண்டாவது கொள் கையைத் தோற்றுவித்தவர் ஆவார். முத்துஸ் வாமி தீக்ஷிதர் இந்தக் கொள்கையையே பின் பற்றியவர். ஆகவேதான் மேலே கூறிய க்ருதி

* ஸ்ரீகுருகுஹஸ்ய தாஸோஹம்
நோசேதுசித் குருகுஹராவாஹம்

களில் "நானே குருகுஹன்" என்று சொல்லி இருக்கிறார். ஸ்ரீசங்கராச்சாரியாருடைய மஹாவாக்கிய மாகிய "நானே ப்ரம்மம்"* என்பதோடு தீக்ஷிதருடைய கருத்து ஒத்திருப்பது இங்கே நோக்குதற்குரியது. இப்படிப்பட்ட கருத்துக்கள் ஸ்ரீகமலாம்பிகயா† என்னும் க்ருதியிலும் மற்றும் பல க்ருதிகளிலும் காணப்படுகின்றன. இனி திருத்தணி க்ருதிகள் அமைந்துள்ள இராகங்களைப் பார்ப்போம்.

| | |
|---|---|
| 1. ஸ்ரீநாதாதி குருகுஹோ | —மாயாமாளவ கௌள |
| 2. மானஸகுருகுஹ | —ஆனந்தபைரவி |
| 3. ஸ்ரீகுருணா | —பாடி |
| 4. குருகுஹாயா | —சாம |
| 5. குருகுஹதன்யம் | —பலஹம்ஸ |
| 6. குருகுஹாஸ்ய | —பூர்வி |
| 7. குருகுஹஸ்வாமினி | —பானுமதி |
| 8. ஸ்ரீகுருகுஹமூர்த்தே | —உதயரவி சந்த்ரிக |

மேலே கூறப்பெற்றுள்ள க்ருதிகளின் இராகங்கள் பல அபூர்வராகங்களாக அமைந்திருப்பது கவனிக்கத்தக்கது. அவற்றுள் பாடி, பூர்வி, உதயரவி சந்த்ரிக முதலிய இராகங்களுக்கு ஆதாரமாக இந்த க்ருதிகளே விளங்குகின்றன. பானுமதி

* அஹம் ப்ரஹ்மாஸ்மி

† ஸ்ரீகமலாம்பிகயா கடாக்ஷிதோஹம்
ஸச்சிதானந்த பரிபூர்ண ப்ரஹ்மாஸ்மி

என்ற இராகம் அல்பமான இராகமாக இருப்ப தோடன்றி விவாதிமேளத்தைச் சார்ந்ததாகவும் இருக்கிறது. தீக்ஷிதர் விவாதி தோஷங்களை அகற்றி இந்த க்ருதியை அமைப்பதில் தம்முடைய திறமையைக் காண்பித்துள்ளார். விவாதிதோஷ மானது இன்னிசைக்கு ஏலாததொடர்கள். குரு குஹ கீர்த்தனைகளை இயற்றும் பொழுது தீக்ஷிதர் இருபத்தைந்து வயதானவராகத்தான் இருக்க வேண்டும். இத்தகைய இளம் பருவத்திலேயே அவர் வேதாந்தத்திலும், ஸங்கீதத்திலும் சிறந்த பக்குவநிலையை அடைந்திருந்தார் என்பது அவ ருடைய குருகுஹ கீர்த்தனைகளை ஆராய்பவருக்கு நன்கு புலப்படும்.

குருகுஹ கீர்த்தனைகளில் குறிப்பிடத்தக்க மற் றொரு அம்சமும் உண்டு. ஸம்ஸ்க்ருத மொழியில் உள்ள எட்டு விபக்திகளையும் இவர் சரளமாகக் கையாண்டிருப்பதே அந்த விசேஷ அம்சமாகும். விபக்தி என்பது ஸம்ஸ்க்ருதத்தில் பெயர்ச் சொற்கள் வேற்றுமை உருபுகளை ஏற்கும் நிலை ஆகும். ஏதேனும் ஒரு தெய்வத்தைப்பற்றி எட்டு க்ருதிகளோ அல்லது அதற்கு அதிகமாகவோ இயற்றும் பொழுது அந்த எட்டு விபக்திகளையும் வரிசைப்படி கையாளுகின்ற வழக்கம் தீக்ஷிதரிடத் தில் இருந்தது. இதிலிருந்து ஸம்ஸ்க்ருத பாஷை யில் அவருக்கிருந்த ஆழ்ந்த புலமை நன்கு புலப் படுகிறது.

திருத்தணிக்கு வடக்கே ஐம்பது மைல் தூரத் தில் திருப்பதி என்னும் க்ஷேத்திரம் உள்ளது.

அந்தக் கோயிலில் ஸ்ரீவேங்கடேசப் பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிறார். அந்தத் தெய்வம் தான் தீக்ஷிதருக்குக் குலதெய்வம். முத்துஸ்வாமி தீக்ஷிதர் காசியிலிருந்து மணலிக்குத் திரும்புவதற்கு முன்பு அவருடைய தம்பியாகிய சின்னஸ்வாமி திடீரென்று கண்பார்வை இழந்து விட்டதாகவும் ஸ்ரீவேங்கடேச்வரரின் அருளால் அவர் கண் பார்வை மீண்டும் பெற்றார் எனவும், அதற்கேற்ற பூஜைகளையும் வழிபாடுகளையும் இராமஸ்வாமி தீக்ஷிதர் செய்தார் எனவும் சொல்லப் படுகிறது. ஆகவே முத்துஸ்வாமி தீக்ஷிதர் திருப்பதி மலையில் ஸ்ரீவேங்கடேசப் பெருமானை வழிபட விரும்பிச் சென்றதில் வியப்பில்லை. திருப்பதிக்குச் சென்று ஸ்ரீவேங்கடேச்வரரை தெரிசித்து முத்துஸ்வாமி தீக்ஷிதர் வராளி இராகத்தில் "சேஷாசல நாயகம் பஜாமி" என்னும் க்ருதியை இயற்றியுள்ளார். அந்த க்ருதி ஸ்ரீவேங்கடேச்வரரைப் பெரிதும் புகழ்ந்து போற்றியுள்ள பாடலாகும். அந்த க்ருதியில் அவர் தம்மை அபிநவ குருகுஹனின் பிரியத்திற்கு ஆளானவன் என்று வர்ணித்துக் கொண்டிருக்கிறார். இதிலிருந்து அவர் 'குருகுஹ' என்னும் தொடரை தம்முடைய க்ருதிகளில் முத்திரையாக மேற்கொண்டார் என்று அறியமுடிகிறது.

திருப்பதியிலிருந்து தீக்ஷிதர் காளஹஸ்தி என்னும் ஸ்தலத்திற்குப் பயணமானார். அந்த ஸ்தலம் ஒரு புண்ணிய க்ஷேத்திரமாகும். அங்குச் சிவபெருமான் எழுந்தருளியுள்ள பிரபலமான

ஆலயம் உள்ளது. சைவ ஆகம சாஸ்திரங்களின் படி தென்னிந்தியாவில் ஐந்து சிவலிங்க ஷேத்திரங்கள் உள்ளன. ப்ருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய ஐந்து உருவங்களில் ஐந்து லிங்கங்களை மக்கள் வழிபடுவது மரபாகி வந்துள்ளது. இவற்றை பஞ்ச பூதஸ்தங்கள் எனப் போற்றுவர். பஞ்ச பூதஸ்தலங்கள் பின்வருமாறு :

1. ப்ருத்வி (மண்) — காஞ்சீபுரம்
2. அப்பு (நீர்) — ஜம்புகேச்வரம் (திருச்சிக்கருகில் உள்ள திரு ஆனைக்காவல்)
3. தேஜஸ் (தீ) — திரு அண்ணுமலை
4. வாயு (காற்று) — காளஹஸ்தி
5. ஆகாசம் (ஆகாயம்) சிதம்பரம்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் காளஹஸ்திக்குச் சென்று அங்குள்ள வாயுலிங்கத்தை வழிபட்டு, அந்த லிங்கத்தின் புகழை 'ஸ்ரீ காளஹஸ்தீச' என்னும் க்ருதியை உசேனிராகத்தில் அமைத்துப் போற்றியுள்ளார். காளஹஸ்தியிலிருந்து பிறகு முத்துஸ்வாமி தீக்ஷிதர் மணலிக்குத் திரும்பினுர். அங்கு அவர் தமது திருத்தணி அனுபவங்களை எல்லாம் தமது பெற்றோர்களுக்கும் சகோதரர்களுக்கும் கூறினுர். மேலும் தாம் தெரிசித்த ஸ்தலங்களிலெல்லாம் தாம் இயற்றிய க்ருதிகளைப் பாடிக் காண்பித்தார். அவற்றைக் கேட்ட எல்லோரும் மெய்ம்மறந்தனர். இராமஸ்வாமி தீக்ஷிதர் தன் புதல்வனைப் பார்த்து "நீ தேவியின்

அருட்பிரசாதம். அவளுடைய அருளினால்தான் உனக்கு இத்தகைய ஆற்றல் வந்துள்ளது. உண்மையாகவே தேவியின் அருள் உனக்குப் பரிபூரணமாகக் கிடைத்துள்ளது" என்று சொன்னார். முத்துஸ்வாமி தீக்ஷிதரின் சகோதரர்கள் அவர் இயற்றிய க்ருதிகளை எல்லாம் கற்றுக் கொண்டு பாடினார்கள். அவற்றைக் கேட்ட இராமஸ்வாமி தீக்ஷிதர் "இது தேவ கீதம். எப்பொழுதும் அழியாமல் சாசுவதமாக நிலைத்துநிற்கும்" என்று தம்மை மறந்து கூறினார்.

மிக விரைவில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் மணவாழ்க்கையை விடுத்து, தென்னாட்டிலுள்ள திருத்தலங்களை எல்லாம் தெரிசிக்க விரும்பினார். இயற்கையில் ஆழ்ந்த மதப்பற்றோடு இருந்த காரணத்தினாலும் இளமையிற் பெற்ற சிறந்த பயிற்சியினாலும் அவருடைய காசி வாழ்க்கை அவரைக் கடவுள்பக்தி மிக்கவராக ஆக்கி இருந்தது. மேலும் அவருக்கு, திருத்தணியில் கிடைத்த தெய்வதெரிசனம் அவரைப் பரிபக்குவநிலைக்குக் கொண்டுவந்திருந்தது. அவரது தந்தை இராமஸ்வாமி தீக்ஷிதர் அவருக்குத் திருமணம் முடித்து வைத்தார் என்பது உண்மை. இளமையிலேயே திருமணம் முடித்துவைப்பது அக்காலத்திய வழக்கமாகும். அவர் திருவாரூரில் இளைஞராக இருக்கும்பொழுதே அவருக்குத் திருமணம் முடிந்துவிட்டது. அதிலும் அவர் இரண்டு பெண்களை மணக்கநேர்ந்தது. இப்படிப்பட்ட சூழ்நிலை

இருந்தாலும் அவர் இவ்வுலக வாழ்க்கையில் பற்றற்று விளங்கினார். அதற்குக் காரணம் அவருடைய ஆன்ம ஞானம் பரிசுத்தமாக இருந்து கடவுளோடு ஐக்கியப்படும் நிலையில் இருந்தது தான். எனவே அவர் அதுவரையில் கிருஹஸ்த சந்நியாசியாகவே வாழ்ந்துவந்தார். குடும்பத்தோடு அவர் வாழ்ந்தாலும் அவர் குடும்பப் பற்றில்லாமல் தாமரை இலைத் தண்ணீர்போல வாழ்ந்து வந்தார். "எத்தகைய பற்றுமில்லாமல் எவனொருவன் தன்னுடைய கடமைகளைச் செய்கின்றானோ அவனே சந்நியாசியும் யோகியும் ஆவான்" என்று பகவத்கீதையும் கூறுகிறது.* அதற்கு உதாரணமாகவே முத்துஸ்வாமி தீக்ஷிதர் வாழ்ந்து வந்தார். தமிழ் நாட்டிலே சிறப்புற வாழ்ந்த சைவ சமய நாயன்மார்களும், வைஷ்ணவ சமயாசாரியர்களாகிய ஆழ்வார்களும் வாழ்ந்து காட்டிய நெறியை அவர் நன்கு அறிந்திருந்தார். நாயன்மார்களும் ஆழ்வார்களும் தம்முடைய வாழ்நாள் முழுவதையும் திருக்கோயில்களுக்குச் செல்லுவதிலும் ஆங்காங்கு கோயில் கொண்டுள்ள மூர்த்திகளைப் போற்றிப் பாடுவதிலும் வாழ்க்கையை நடத்தினார்கள் என்பதும் தீக்ஷிதருக்குத் தெரியும். அவர்கள் வாழ்ந்து காட்டிய மார்க்கத்தை முன்மாதிரியாகக் கொண்டு முத்துஸ்வாமி தீக்ஷிதர் தம் வாழ்க்கையை நடத்த

* அனுஸ்ருதஹ கர்மபலம் கார்யம் கர்ம கரோதியஹ
ஸஸந்யாசி சயோகீச நநிரக்னிஹி நசாக்ரியஹ

விரும்பினார். அதற்கேற்ப அவர்தம் வாழ்நாள் முழுவதும் ஒவ்வொரு திருத்தலத்திற்கும் சென்று ஆங்காங்கு விளங்கும் தெய்வங்களைப் பற்றி எல்லாம் புகழ்ந்து பாடி வரலானார். அவருடைய வாழ்க்கை வரலாற்றைச் சுருங்கக் கூறுவோமே யானால் அது கோயிலுக்குக் கோயில் யாத்திரை சென்ற கதையாகவே அமையும்.

சென்னைக்கு நாற்பது மைல் தூரத்தில் காஞ்சிபுரம் என்ற ஒரு ஸ்தலம் உள்ளது. தென்னாட்டின் அரசியல் வரலாற்றிலும், கலாசார வரலாற்றிலும் அந்த நகரம் முக்கியத்துவம் பெற்றுள்ளது. அந்நகரில் கணக்கற்ற கோயில்கள் உள்ளன. சைவ சமயக் கோயில்களும், வைஷ்ணவ சமயக் கோயில்களும் அங்கு ஏராளமாக உள்ளன. இக்காரணத்தினால் அந்நகரம் 'கோயில் நகரம்' என்று வழங்கப்படுகிறது. அவற்றுள் பிரசித்தி பெற்றது தேவி எழுந்தருளியுள்ள காமக்ஷியம்மன் கோயிலாகும். கி.பி. 9-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே ஆதிசங்கரர் அந்தக்கோயிலுக்குச் சென்றிருக்கிறார். அங்கு ஸ்ரீசக்கரத்தை அவர் பிரதிஷ்டை செய்துள்ளார். அன்று முதல் இன்றுவரை அந்தக் கோயில் அங்கு வருவோரைக் கவர்ந்து கொண்டு இருக்கிறது. தேவியின் பக்தராகவும், ஸ்ரீவித்யா உபாசகராகவும் இருந்த முத்துஸ்வாமி தீக்ஷிதர், காஞ்சீபுரம் சென்று காமாக்ஷியம்மனை வழிபடப் பேரார்வம் கொண்டார். ஆகவே அவரது குடும்பம் முழுவதும், பல்லாண்டுகளாக வாழ்ந்து வந்த

மணியை விடுத்துக் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தது. காஞ்சியில் தங்கி இருந்த காலத்தில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் காமாக்ஷியம்மனைப்பற்றியும், ஏகாம்ப்ரேச்வரரைப் பற்றியும் போற்றிப் பல க்ருதிகளை இயற்றியுள்ளார். அவற்றுள் மிகப் பிரபலமானவை "கஞ்சதளாய தாக்ஷி" என்ற கமலாமனோஹரி ராகக்ருதி, (இந்த இராகத்தை வேங்கடமகி மனோஹரி என்றே குறிப்பிடுகிருர்) 'நீரஜாக்ஷி காமாக்ஷி' என்ற ஹிந்தோள இராகக்ருதி, 'ஸரஸ்வதி மனோஹரி' என்னும் ஸரஸ்வதி மனோஹரி ராகக்ருதி, ஏகாம்ப்ரேச நாயிகே என்னும் கர்நாடக சுத்த ஸாவேரி ராகக்ருதி முதலியவை. இவையாவும் காமாக்ஷியம்மனைப் புகழ்ந்து பாடியவையாகும். ஏகாம்ப்ரேச்வரரைத் துதித்துப் பாடிய க்ருதிகளில் பைரவி இராகத்திலுள்ள 'சிந்தயமாகந்த' என்னும் க்ருதியும், கமகக்ரிய இராகத்தில் அமைந்த 'ஏகாம்ப்ரநாதம் பஜேஹம்' என்னும் க்ருதியும் பிரபலமானவை. 'சிந்தயமாகந்த' என்னும் பைரவி இராகக்ருதி ப்ருத்வி லிங்கத்தை வர்ணிக்கிறது. அது பஞ்சலிங்கக் கீர்த்தனைகளில் ஒன்று. காஞ்சீபுரத்தில் சிவபெருமானுக்குரிய மற்றொரு கோயிலும் உண்டு. அது கைலாஸநாதர் கோயில். அந்தக் கைலாஸ நாதரைப் போற்றியும் தீக்ஷிதர் பல க்ருதிகளை இயற்றியிருக்கிருர். அவற்றுள் 'கைலாஸநாதம்' என்னும் வேகவாஹினி இராகக்ருதியும், 'கைலாஸநாதேன' என்னும் காம்போதி இராகக்ருதியும்

குறிப்பிடத்தக்கவை. இந்தக் கைலாஸநாதர் கோயில் பிற்காலத்தில் பழுதடைந்து போய் விட்டது.

காஞ்சீபுரம் சிறந்த வைஷ்ணவ க்ஷேத்திரமாக வும் போற்றப் பெறுகிறது. தென்னிந்தியாவில் பிரபலமாக விளங்கும் வைஷ்ணவக் கோயில் களில் ஒன்ருகிய வரதராஜஸ்வாமி கோயில் அங்கு உள்ளது. அந்த வரதராஜப் பெருமாளைப் புகழ்ந்து 'வரதராஜம் உபாஸ்மஹே' என்னும் சாரங்க இராகக்ருதியை தீக்ஷிதர் இயற்றியுள்ளார். இந்த சாரங்க இராகம் கர்னடக ஸங்கீத முறை யைத் தழுவியது. சைவசமய நாயன்மார்களும், வைஷ்ணவ சமய ஆழ்வார்களும் காட்டிய முறை யைப் பின்பற்றி முத்துஸ்வாமி தீக்ஷிதர் கோயில் களுக்கெல்லாம் சென்று தெய்வங்களை எல்லாம் போற்றிப் பாடினுர் என்பது உண்மை. ஆனுல் அவர்களுடைய வாழ்க்கைக்கும் தீக்ஷிதருடைய வாழ்க்கைக்கும் முக்கியமானதொரு வேறுபாடு உண்டு. சைவ சமய நாயன்மார்கள் சிவன் கோயில்களுக்கு மட்டுமே சென்று பாடினுர்கள். வைஷ்ணவ சமய ஆழ்வார்கள் பெருமாள் கோயில் களுக்கே சென்று பாடினுர்கள். முத்துஸ்வாமி தீக்ஷிதரோ இரண்டு சமயங்களையும் வித்தியாச மாகக் கருதவில்லை அவர் சிவன் கோயில்களுக் கும், பெருமாள் கோயில்களுக்கும் தாராளமாகச் சென்று எல்லா மூர்த்திகள் பேரிலும் க்ருதிகளை இயற்றினுர். இதற்குரிய காரணத்தைச் சற்று ஆராய்வது பயன்தருவதாகும்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் வேதாந்த தத்துவ சாஸ்திரத்தைச் சேர்ந்த அத்வைத கோட்பாட்டில் பயிற்சி உடையவர். பல வகைப்பட்ட தெய்வங்களைப் பல்வேறு பெயர்களில் வழிபடுதல் (ஸகுணோபாஸனை) சிறந்த மனப்பயிற்சி என்பது அத்வைத கோட்பாட்டின் தத்துவமாகும். அவ்வாறு வழிபட்டு மனப் பயிற்சி பெற்றால் இவ்வுலகப் பற்றுகளிலிருந்து மனம் விடுதலை பெற்றுவிடும் என்று சொல்லப்படுகிறது. உலகங்களின் சிருஷ்டி கர்த்தாவை வழிபட்டு த்யானத்தில் ஈடுபடுவதும், எங்கும் நிறைந்தவரும் எக்காலத்தும் இருப்பவருமாகிய பரப்ரமத்தை தனக்குள்ளேயே உணர்ந்து கொள்ளுவதும் தான் ஒருவருடைய சிறந்த கொள்கையாக இருக்க வேண்டும் என்பது அக்கோட்பாட்டின் உள்நோக்கமாகும். சுருங்கக் கூறினால் பெயர்களையும், உருவங்களையும், பண்புகளையும் தாண்டிய பரப்ரஹ்மத்யானந்தான் (நிர்க்குணோபாஸனை) அத்வைத வேதாந்தத்தின் உட்கருவாகும். இப்படிப்பட்ட நிர்க்குணோபாஸனை தத்துவத்தைப் பின்பற்றிய காரணத்தால் முத்துஸ்வாமி தீக்ஷிதர் சிவன் கோயில்களுக்கும், பெருமாள் கோயில்களுக்கும் தாராளமாகச் சென்று வழிபட்டார்; எல்லாத் தெய்வங்களையும் அவரவர்களுக்கு வழங்கப் பெறும் பெயர்களையும் உருவங்களையும் அமைத்து க்ருதிகளை இயற்றினார்.

அதே சமயத்தில் அவர் அந்தத் தெய்வங்களெல்லாம் எத்தகைய உருவமும், எத்தகைய பெயரும்

இல்லாத சிருஷ்டி கர்த்தாவின் பல்வகைத் தோற்றங்கள் என்னும் கருத்தைத் தம் க்ருதிகளில் வற்புறுத்தி யிருக்கிறார். இவ்வாறு சமயப் பிணக்குகளுக்கெல்லாம் அப்பாற்பட்டு பக்தியையும் ஞானத்தையும் இணைத்து தீக்ஷிதர் இயற்றியுள்ள க்ருதிகள் தனி அழகுடனும் பொலிவுடனும் விளங்குகின்றன.

அந்த நாளில் காஞ்சீபுரத்தில் 'உபநிஷத் ப்ரம்மம்' என்ற ஒரு சந்நியாசி வாழ்ந்து வந்தார். அவர் ஒரு சிறந்த தத்துவ ஞானி. உபநிஷதங்கள் சிலவற்றிற்கு அவர் வியாக்யானங்கள் எழுதி இருக்கிறார். மேலும் அவர் சிறந்த இராம பக்தர். அவர் தான் ஸ்ரீ தியாகையருக்கு ஸ்ரீ இராம தாரக மந்திரத்தை உபதேசித்தவர். அவர் ஸ்ரீ இராம பிரான்மீது இராமாஷ்டபதி என்னும் இசை நாடகத்தை இயற்றியிருக்கிறார். அதிலுள்ள பாடல்களெல்லாம் ஸ்ரீ ஜெயதேவரின் கீத கோவிந்தத்தை ஒத்தவை. முத்துஸ்வாமி தீக்ஷிதரின் பெயரும் புகழும் உபநிஷத் பிரம்மத்தின் செவிக்கும் எட்டியது. ஆகவே அவர் முத்துஸ்வாமி தீக்ஷிதரை தமது மடத்திற்கு வரவழைத்து, தாம் இயற்றியுள்ள இராமாஷ்டபதிக்கு மெட்டுக்கள் அமைத்துத் தருமாறு கேட்டுக் கொண்டார். தீக்ஷிதரும் மனமுவந்து மெட்டுக்கள் அமைத்துக் கொடுத்தார். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அந்த மெட்டுக்கள் யாவும் மறைந்து போய் விட்டன.

உபநிஷத் பிரம்மத்தோடு தமக்குக் கிடைத்த தொடர்பினைப் பயன்படுத்தி, தமது வேதாந்த ஆராய்ச்சியைப் பூர்த்திசெய்து கொள்ள விரும்பினார் முத்துஸ்வாமி தீக்ஷிதர். ஆகவே அவர், தமது விருப்பத்தை உபநிஷத் பிரம்மத்திடம் பிரஸ்தாபித்தார். அவரும் மனமுவந்து தீக்ஷிதருக்கு உபநிஷதங்களைக் கற்பித்த தோடல்லாமல் ஸ்ரீ இராமனிடத்தில் ஆழ்ந்த பக்தியையும் தீக்ஷிதர் மனத்தில் பதியச் செய்தார். அதன் பிறகு தீக்ஷிதர் ஸ்ரீ இராமன் பேரில் இயற்றிய க்ருதிகளில், உபநிஷத் பிரம்மம் விதைத்த விதை முளைத்துப் பரிணமித்திருப்பதைக் காணலாம். மாஞ்சி இராகத்தில் அவர் இயற்றிய 'ராமச்சந்த்ரேண ஸம்ரக்ஷிதோஹம்' என்ற க்ருதியில் தீக்ஷிதர் ஸ்ரீ இராமனை லக்ஷ்மி, ஸரஸ்வதி, கௌரி ஆகிய மூன்று தேவதைகளின் பதிதெய்வங்களும் ஒன்றுகக் கலந்த உருவம் என்று வர்ணித்திருக்கிறார்.* மாஹுரி இராகத்தில் இயற்றியுள்ள மாமவ ரகுவீர' என்னும் க்ருதியில் அவர் "சிவபெருமானும் மற்றையோரும் உன்னை ப்ரம்மம் என்றே போற்றுகின்றனர் என்கிறார்.† இந்த க்ருதியிலுள்ள பகுதிகள் ஸ்ரீ தியாகையருடைய 'எவரனி' என்னும் க்ருதியின் பகுதிகளை ஒத்துள்ளன. உயர்ந்தோராயினும் தாழ்ந்தோராயினும் யாரே ஆயினும் இராம தாரக மந்த்ரத்தை உச்சரித்து

* ரமாபாரதீ கௌரீ ரமண ஸ்வரூபேண ராமச்சந்த்ரேண ஸம்ரக்ஷிதோஹம்

† த்வாமாஹுர்ஹர ஈசாதயஹ தத்வமஸீது

ஜபம் செய்தால் அவர்களுக்கு மோக்ஷம் சித்திக்கும் என்ற கொள்கை அக்காலத்தில் பரவி இருந்தது. ஸ்ரீ இராம பக்தர்கள் மட்டுமல்லாமல் ஏனைய தெய்வ வழிபாடு செய்பவர்களும் இக்கருத்தை ஏற்றுக் கொண்டிருந்தனர். இந்தக் கருத்தில் ஊறிப்போன தீக்ஷிதர் முன்னர் நாம் குறிப்பிட்ட மாஹுரி ராக க்ருதியில் "பாமரராயினும் பண்டிதராயினும் அவரைத் தூய்மைப் படுத்துவது ஸ்ரீ இராம நாமம்" * என்று கூறியுள்ளார்.

தீக்ஷிதர் காஞ்சீபுரத்தில் நான்கு ஆண்டுகள் இருந்தார். இந்நிலையில் அவருக்குத் திருவாரூர் ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் நினைவும், கமலாம்பிகையின் நினைவும் வந்துவிட்டன. அவர்களைத் தெரிசிக்கவேண்டும் என்னும் ஆர்வம் மிகவே அவர், தமது குடும்பத்தைக் கலைத்துவிட்டு, காஞ்சீபுரத்தை விடுத்துத் திருவாரூர் நோக்கிப் பயணமானார்.

---

* பாமர பண்டித பாவனகர
நாமதேய குருகுஹ நுத
மாமவ ரகுவீரா

## 4

# திருவாரூர்

திருவாரூரில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமியையும் கமலாம்பிகையையும் தெரிசிக்கவேண்டும் என்னும் ஆர்வத்தினுல் முத்துஸ்வாமி தீக்ஷிதர், காஞ்சீபுரத்தை விட்டுப் புறப்பட்டாலும் அவர் நேராக திருவாரூருக்குச் செல்லவில்லை. நாயன்மார்களும் ஆழ்வார்களும் வாழ்ந்து காட்டிய நெறியைப் பின்பற்றியவர் ஆதலால், இடைவழியிலிருந்த பிரசித்திபெற்ற க்ஷேத்திரங்களை எல்லாம் அவர் தெரிசிக்க விரும்பினுர். அதற்கேற்ப அவர் முதலில் திரு அண்ணுமலையை அடைந்தார். பஞ்சலிங்க க்ஷேத்திரங்களில் திரு அண்ணுமலை ஒன்று. அங்குக் கோயில்கொண்டிருக்கும் அருணுசலேச்வரர் பஞ்சபூதங்களில் ஒன்ருகிய அக்னியின் ரூபம் என்று கொள்ளப்பெற்றுள்ளது. தீக்ஷிதர் இந்தக் கோயிலுக்குச்சென்று, இறைவனை வழிபட்டு அவரைப் புகழ்ந்து கர்னுடக ஸங்கீத முறையைச் சார்ந்த ஸாரங்க இராகத்தில் ‘அருணுசலநாதம்ஸ்மராமி’ என்று தொடங்கும் க்ருதியை இயற்றினுர்.

அதன் பின் தீக்ஷிதர் சிதம்பரம் சென்ருர். சிதம்பரமும் பஞ்சலிங்க க்ஷேத்திரங்களில் ஒன்று. அங்கு இறைவன் ஆகாசலிங்கமாகப் போற்றப்

பெறுகிறார். இங்குள்ள இறைவன் பெயர் நடராஜர். நடராஜர் அங்கு ஆனந்த நடனம் ஆடுகிறார். அந்த நடனத்திற்கு ரகசியமான உட்பொருள்கள் பல சொல்லப்படுகின்றன. இந்தியாவிலுள்ள பிரபலமான கோயில்களில் சிதம்பரம் நடராஜர் கோயிலும் ஒன்று. நடராஜப் பெருமானைப் பற்றி தீக்ஷிதர் பல க்ருதிகளை இயற்றியிருக்கிறார். அவற்றுள் எல்லோருக்கும் தெரிந்த க்ருதி கர்னாடக ஸங்கீதத்தைச் சேர்ந்த கேதார இராக க்ருதி ஆகும். "ஆனந்த நடனப்ரகாசம்" என்று அந்த க்ருதி தொடங்குகிறது. இந்த க்ருதியின் தனிச் சிறப்பு என்ன என்றால், நடனத்திற்கு ஏற்ற சொல்லுக்கட்டு இதில் நன்கு அமைந்திருப்பதாகும். இக்கோயிலில் உள்ள அம்பிகையின் பெயர் சிவகாம சுந்தரி. அந்த ஈச்வரியின் பெயரிலும் "சிவகாமேச்வரீம்" என்ற கல்யாணி இராகக்ருதியை தீக்ஷிதர் இயற்றி இருக்கிறார்.

சிதம்பரத்தில் நடராஜா ஸந்நிதியை அடுத்து ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் ஸந்நிதி உள்ளது. அந்தப்பெருமானைப் புகழ்ந்தும் தீக்ஷிதர் பல க்ருதிகளை இயற்றியுள்ளார். அவற்றுள் "கோவிந்தராஜனும் உபாஸ்மஹே" என்று ஆரம்பமாகும் முகாரி இராகக்ருதியும் "கோவிந்தராஜேண" என்று தொடங்கும் மேசபௌளி இராகக்ருதியும் குறிப்பிடத்தக்கவை. இந்த மேசபௌளி இராகம் அல்பமாகவே வழங்கப்பெற்று வருகிறது. வேங்கடமகியின் கீதங்களிலிருந்தும், முத்துஸ்வாமி தீக்ஷி

தரின் இந்த க்ருதியிலிருந்துதான் இந்த இராகம் நமக்குத் தெரிகிறது *

சிதம்பரத்திலிருந்து திருவாரூரை நோக்கிப் பயணம் தொடங்கிய முத்துஸ்வாமி தீக்ஷிதர் கொள்ளிடத்தைத் தாண்டி வைத்தீஸ்வரன் கோயிலை அடைந்தார். அங்கு அவர் வைத்திய நாதஸ்வாமி, பாலாம்பிகை, முத்துக்குமாரஸ்வாமி ஆகிய மூர்த்தங்களைப் புகழ்ந்து பற்பல க்ருதிகளை இயற்றினார். பாலாம்பிகையைப் போற்றிப் பாடியுள்ள பல க்ருதிகளில் "பஜரேரே சித்த பாலாம்பிகாம்" என்ற கல்யாணி இராக க்ருதி மிகப்பிரபலமானது. இதைப் பற்றி முன்பே குறிப்பிட்டுள்ளோம். அடாணா இராகத்தில் அவர் ஸ்ரீ வைத்திநாதரைப் புகழ்ந்து "வைத்தியநாதம்" என்ற க்ருதியையும் இயற்றியிருக்கிறார். வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்து தீக்ஷிதர் பிறகு மாயூரத்தை அடைந்தார். அங்குப் புராதனமான சிவன் கோயில் ஒன்றுள்ளது. அங்குள்ள இறைவன் பெயர் மயூர நாதஸ்வாமி. அம்பிகையின் பெயர் அபயாம்பிகை. இந்தத்தலத்தில் மயூரநாதரைப் பற்றியும் அபயாம்பாளைப்பற்றியும் பல கீர்த்தனைகளை தீக்ஷிதர் இயற்றியுள்ளார். அவற்றுள் அபயாம்பாளைப் பற்றிய க்ருதிகள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. அபயாம்பிகை க்ருதிகளில் ராகத்தின்

---

* பிற்காலத்திய வாக்கேயகாரர் ஒருவர் இயற்றியுள்ள "தேவிதிவ்ய" என்ற க்ருதிக்கு ஸுப்பராம தீக்ஷிதர் மேசபௌளி இராகத்தில் மெட்டமைத்திருக்கிறார்.

சாயைகள் எல்லாம் மிக அழகாகக் கையாளப் பெற்றுள்ளன. மேலும் தந்த்ரீகக் கொள்கைகளும் அவற்றில் விவரிக்கப்பெற்றுள்ளன. கர்நாடக ஸங்கீதத்தைச் சேர்ந்த கேதார இராகத்தில் அமைந்த "அம்பிகாயா அபயாம்பிகாயா" என்ற க்ருதியால் குண்டலினி சக்தியைத் தூண்டி எழுப்பும் முறை வர்ணிக்கப்பெற்றுள்ளது. திருத்தணி குருகுஹ க்ருதிகளைப்போலவே இந்த க்ருதிகளும் எல்லா விபக்திகளிலும் அமைந்துள்ளன. அவை பின்வருமாறு:

1. அபயாம்பா ஜகதம்பா — கல்யாணி
2. ஆர்யாம்பாயமாம் — பைரவி
3. கிரிஜாய அஜாய — சங்கராபரணம்
4. அபயாம்பிகாயை — யதுகுலகாம்போதி
5. அபயாம்பிகாயா — கேதாரகௌள
6. அம்பிகாயா அபயாம்பிகாயா — கேதாரம்
7. அபயாம்பிகாயாம் — ஸஹானா
8. தாக்ஷாயணி — தோடி

"ஸ்ரீ அபயாம்பா நின்னு" என்று தொடங்கும் தேவியைப் புகழும் இவருடைய க்ருதி ஸ்ரீ ராகத்தில் அமைந்துள்ளது. இந்த இராகம் பெரும்பாலும் மங்களகரமான முடிவைக் குறிப்பிடும் இராகமாகக் கருதப் பெறுகிறது. ஆகவே ஏதோ ஒருவகைத் தொடர்க்ருதிகளின் கடைசி க்ருதியாக இது அமைந்திருக்கவேண்டும் எனவும் புலப்படுகிறது. மேலே குறிப்பிடப்பெற்றுள்ள எட்டுக்

கீர்த்தனைகளும் பஜனைகளில் ஒரு சேரப்பாட வேண்டும் என்பதும், 'ஸ்ரீ அபயாம்பா நின்னு' என்ற இந்தக்ருதி மங்கள கீர்த்தனமாகக் கடைசியில் பாடப் பெறுதல்வேண்டும் என்பதும் தீக்ஷிதருடைய நோக்கமாக இருக்கவேண்டும். ஆகவே தான் ஸ்ரீ ராகத்தில் இந்த க்ருதியை இயற்றினர் என்பது கண்கூடு. மேலும் இந்த ஸ்ரீ ராகக்ருதியில் குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பு உள்ளது. இந்த க்ருதி ஸம்ஸ்க்ருதம், தெலுங்கு, தமிழ் ஆகிய மூன்று மொழிகளும் கலந்த மணிப்ரவாள நடையில் அமைந்துள்ளது. இப்படிப்பட்ட மணிப்ரவாள க்ருதிகள் இன்னும் சில உள்ளன. அவற்றுள் காபி இராகத்தில் அமைந்த "வெங்கடாசலபதே நின்னு நம்மிதி" என்னும் க்ருதி பிரபலமானது. இது திருப்பதி வேங்கடேசப் பெருமான் மீது அமைந்தது.

மாயூரத்திலிருந்து தீக்ஷிதர் திருவாரூரை நோக்கிப் பயணமானர். 16 வருஷங்களுக்கு முன்னதாகவே இராமஸ்வாமி தீக்ஷிதர் திருவாரூரை விட்டுக் கிளம்பியவர் என்றாலும் அவர் சிறந்த ஸங்கீதவித்வான் என்பதும், பெரும் ஸாஹித்திய கர்த்தா என்பதும், ஸ்ரீ தியாகராஜஸ்வாமி கோயிலில் நாகஸ்வரம் வாசிக்கும் முறையை வகுத்துக் கொடுத்தவர் என்பதும் திருவாரூர் மக்கள் மனத்தை விட்டு அகலவில்லை. முத்துஸ்வாமி தீக்ஷிதரோ திருவாரூரை விட்டுக் கிளம்பும் பொழுது சிறு பையனாக இருந்தவர் என்றாலும்

அவர் சிறந்த ஸாஹித்திய கர்த்தா என்னும் புகழ் முன்னதாகவே திருவாரூரில் பரவி இருந்தது. ஆகவே இராமஸ்வாமி தீக்ஷிதரும் முத்துஸ்வாமி தீக்ஷிதரும் திருவாரூருக்குத் திரும்புவதை திருவாரூர் மக்கள் எல்லோரும் பெருமையுடனும் ஆர்வத்துடனும் எதிர் நோக்கி இருந்தனர். இராமஸ்வாமி தீக்ஷிதரும் அவருடைய புதல்வர்களும் திருவாரூரைச் சேர்ந்த நாள் ஒரு மறக்கமுடியாத நாளாகும். தங்களுடைய பழைய வீட்டில் புகுந்த பொழுது அவர்களுக்கு மமிழ்ச்சிபொங்கியது. அப் பகுதிமக்கள் மனமார வரவேற்பளித்த பொழுது தீக்ஷிதர் குடும்பத்தினர் பெருமிதமடைந்தனர். இப்படிப்பட்ட நிலையில் எல்லையற்ற மகிழ்ச்சியுடன் அவர்கள் திருவாரூர் வாழ்க்கையை மேற்கொண்டனர்.

திருவாரூரில் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது அங்குள்ள ஸ்ரீ தியாகராஜஸ்வாமி கோயில்தான். தென்னிந்தியாவில் உள்ள கவர்ச்சிமிக்க கோயில்களில் அது ஒன்று; மிகவும் புராதனமானது; அமைப்பில் பிரம்மாண்டமானது; கணக்கற்ற மூர்த்தங்களைத் தன்னிடத்தே கொண்டது. அக் கோயிலுக்கு வெளியில் கமலாலயம் என்ற மிகப்பெரிய புண்ணியதீர்த்தம் ஒன்று உள்ளது. தீக்ஷிதர் தம்முடைய நேரத்தில் பெரும் பகுதியை அக்கோயிலிலேயே கழித்தார். அங்குள்ள மூர்த்திகளை எல்லாம் வழிபடுவதிலும் அவற்றைப் புகழ்ந்துபாடுவதிலும் அவருடைய

பொழுது இன்பமாகக் கழிந்தது. ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி, ஸ்ரீ கமலாம்பாள், ஸ்ரீ நீலோத்பலாம்பாள், கணேசர், சுப்ரமணியர் இவர்களைப் பற்றி எல்லாம் போற்றி தீக்ஷிதர் இயற்றியுள்ள க்ருதிகள் பல. திருவாரூரைச் சார்ந்த விஜயபுரத்தில் உள்ள ஒரு கோயிலில் எழுந்தருளி இருக்கும் ரேணுகாதேவி யைப் பற்றிக் கன்னடபங்காள இராகத்தில் ஒரு க்ருதி இயற்றியிருக்கிறார். அதோடு திருவாரூ ரோடு அதிகத்தொடர்பு கொண்டவரும், தேவார ஆசிரியர்களில் ஒருவருமாகிய சுந்தரமூர்த்தி நாய னரைப் பற்றியும் 'டக்க' இராகத்தில் ஒரு க்ருதி இயற்றியுள்ளார்.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளைப் பற்றித்தான் தீக்ஷி தர் கணக்கில்லாத க்ருதிகளைப் புனைந்துள்ளார். அந்த மூர்த்தியைப் பற்றி இயற்றியுள்ள விபக்தி இன க்ருதிகள் பின்வருமாறு:

1. த்யாகராஜோ விராஜதே — அடாண
2. த்யாகராஜம் பஜரே — யதுகுல காம்போதி
3. த்யாகராஜேன ஸம் ரக்ஷிதோஹம் — ஸாளக பைரவி
4. த்யாகராஜாய நமஸ்தே — பேகட
5. த்யாகராஜாதன்யம் — தர்பார்
6. ஸ்ரீத்யாகராஜஸ்ய பக்தஹ — ருத்ரப்ரிய
7. த்யாகராஜே க்ருத்யாக்ருத்யம் — ஸாரங்க
8. வீரவஸந்தத்யாகராஜ — வீரவஸந்தம்

இந்த விபக்தி இன க்ருதிகளைத் தவிர அவர் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி பேரில் வேறு பல க்ருதிகளை யும் இயற்றியுள்ளார். அவற்றுள் பிரபலமானவை கௌள இராகத்தில் அமைந்துள்ள 'த்யாகராஜ பாலயாசுமாம்' என்னும் க்ருதியும் 'த்யாகராஜ யோக வைபவம்' என்னும் ஆனந்த பைரவி இராக க்ருதியும் ஆகும். இவற்றோடு 'த்யாகராஜ மஹாத்வ ஜாரோஹ' என்று தொடங்கும் ஸ்ரீ ராகக் கீர்த்தனையும் உள்ளது. அக்ருதியில் தீக்ஷிதர் திருவாரூர்க் கோயிலில் வருஷந்தோறும் கோலா ஹலமாகக் கொண்டாடப்பெறும் வஸந்தோத்ஸ வத்தை வர்ணித்திருக்கிறார்.

திருவாரூர்க் கோயிலில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி யைத் தவிர ஐந்து சிவலிங்கமூர்த்திகள் உள்ளன. அந்த ஐந்து சிவலிங்கங்களையும் புகழ்ந்து தீக்ஷிதர் ஐந்து கீர்த்தனைகள் புனைந்துள்ளார். அவை பின் வருமாறு:

1. அசலேச்வர — பூபாலம்
2. ஹாடகேச்வர — பிலஹரி
3. வால்மீகேச்வர — காம்போதி
4. ஆனந்தேச்வர — ஆனந்தபைரவி
5. ஸித்தீச்வர — நீலாம்பரி

இனி தீக்ஷிதர் இயற்றிய நவாவரணக் கீர்த் தனைகள் உள்ளன. அவை யாவும் கமலாம்பா தேவியைப் பற்றியனவாகும். ஸங்கீதக் கண் கண்டு நோக்கினால் அவை யாவும் கர்னாடக ஸங்கீதத்தின் தலை சிறந்த உருப்படிகள் எனலாம்.

இந்தக் கீர்த்தனைகளில் உள்ள இராக அமைப்புக்களை உற்று நோக்கினால் முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஸங்கீதத்தில் அடைந்திருந்த பக்குவ நிலையும் நுண்ணறிவும் நன்கு புலனாகும். இராகங்களின் நுட்பமான பிரயோகங்களை எல்லாம் அவற்றின் முழு உருவத்தில் தம்மிடத்தே பெற்றிருப்பதால் தான் இந்த க்ருதிகள் தன்னிகரற்று விளங்குகின்றன. இந்த க்ருதிகள் அளவிலும் தரத்திலும் மிக உயர்ந்து விளங்குகின்றன. இவற்றை இராக தேவதைகள் எழுந்தருளியிருக்கும் நாதக்கோயில்கள் எனலாம். அந்த க்ருதிகளிலுள்ள ஸாஹித்தியங்களை ஆராய்ந்தால் அவை தேவியை தந்த்ரீக முறையில் வழிபடுதற்குரிய வழி வகைகள் கூறுதல் புலப்படும். தேவியைப் பூஜிப்பதற்குரிய தந்த்ரங்கள், அதற்கென்று மேற்கொள்ள வேண்டிய விரதங்கள் ஆகியவற்றை விளக்கமாகக் கூறுகின்றன. தேவியை நெருங்குவதற்கு ஒருவர் ஒன்பது வட்டங்களைக் கடந்து செல்லவேண்டுமென்றும், ஒவ்வொரு வட்டத்திற்கும் குறிப்பிட்ட பூஜைகள் செய்யவேண்டுமென்றும் சொல்லப்படுகின்றன. அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தனிப்பட்ட பெயர்களும் சக்திகளும் உள்ளன. ஒவ்வொன்றினாலும் கிடைக்கின்ற பலன் வெவ்வேறானவை. ஒன்பது வட்டங்களுக்கும் முறைப்படி பூஜை நடத்தினால் தான் தேவி தன்னுடைய பக்தர்களுக்கு முழு அருளையும் கொடுப்பாள் என்று கருதப்படுகிறது. இந்த விவரமான

விரதத்திற்கு நவாவரண பூஜை என்று பெயர். தீக்ஷிதர் இயற்றியுள்ள கமலாம்பா நவா வரணக் கீர்த்தனைகள் ஒன்பதும் தேவியைப் பூஜிப்பதற்குரிய ஒன்பது வட்டங்களுக்கும் ஏற்றனவாக அமைந்துள்ளன. இந்த ஒன்பது கீர்த்தனைகளோடு ஆரம்பத்தில் பாடவேண்டிய த்யானக் கீர்த்தனை ஒன்றும் முடிவில் பாடவேண்டிய மங்களக் கீர்த்தனை ஒன்றும் உள்ளன. ஆகவே நவாவரணக் கீர்த்தனைகள் பதினோரு கீர்த்தனைகளைக் கொண்டு விளங்குகின்றது. அவை பின்கண்டவாறு வரிசைப்படுத்தப் பெற்றுள்ளன.

1. கமலாம்பிகே — தோடி. (த்யானக்கீர்த்தனை)
2. கமலாம்பாஸம்ரக்ஷது — ஆனந்த பைரவி
3. கமலாம்பாம்பஜரேரே — கல்யாணி
4. ஸ்ரீ கமலாம்பிகயா — சங்கராபரணம்
5. கமலாம்பிகாயை — காம்போதி
6. ஸ்ரீ கமலாம்பிகாயா: பரம் — பைரவி
7. கமலாம்பிகாயாஸ்தவ — புன்னாகவராளி
8. ஸ்ரீ கமலாம்பிகாயாம் பக்திம் — ஸஹானா
9. ஸ்ரீ கமலாம்பிகே அவ அவ — கண்ட
10. ஸ்ரீ கமலாம்பா ஜயதி — ஆஹிரி
11. ஸ்ரீ கமலாம்பிகே — ஸ்ரீ ராகம் (மங்கள கீர்த்தனை)

இவற்றுள் முதலில் காணப்பெறும் (2 முதல் 9 முடிய) எட்டுக் கீர்த்தனைகளும் எட்டு விபக்திகளில் அமைந்திருப்பதும், ஆஹிரி இராக க்ருதியில் எட்டு விபக்திகளும் காணப்பெறுவதும் கவனிக்கத் தக்கன.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமி கோயிலில் ஸ்ரீ நீலோத்பலாம்பாள் என்னும் தேவியும் எழுந்தருளி இருக்கிருள். தேவி சிவபெருமானை மணப்பதற்குத் தவம் செய்யும் கோலத்தில் கமலாம்பாள் காக்ஷி தருகிருர். சிவபெருமானை மணந்த திருக்கோலத்தில் நீலோத்பலாம்பாள் காக்ஷி தருகிருள். நீலோத்பலாம்பாள்மீது பின்வரும் க்ருதிகளை இயற்றியுள்ளார்.

1. நீலோத்பலாம்பா ஜயதி —நாராயணகௌள
2. நீலோத்பலாம்பாம் பஜரே —ரீதிகௌள *
3. நீலோத்பலாம்பிகாயா —கன்னடகௌள
4 நீலோத்பலாம்பிகாயை —கேதாரகௌள
5 நீலோத்பலாம்பிகாயா: —கௌள
6 நீலோத் பலாம்பாயா ஸ்தவ மாயாமாளவகௌள
7. நீலோத்பலாம்பிகாயாம் —பூர்விகௌள
8. ஸ்ரீ நீலோத்பலாம்பிகே —சாயாகௌள

இந்த எட்டு க்ருதிகளும் ஸம்ஸ்க்ருத இலக்கணத்தைச் சேர்ந்த எட்டு விபக்திகளுடன்

---

* ரீதி கௌள இராகத்திலேயே நீலோத்பலாம்பாள் பேரில் அமைந்த மற்றொரு க்ருதி உள்ளது. அது இந்தத் தொகுதியில் சேராத தனிக் கீர்த்தனை.

அமைந்துள்ளன. இவற்றுள் ஒரு 'க்ருதி 'கௌள' இராகத்திலும், மற்றவை எல்லாம் 'கௌள' என்றே முடியும் பான்மையும் நோக்குதற்குரியன. அவை யாவும் பெயரளவில் கௌள வரிசையைச் சேர்ந்தது. இதிலிருந்து கௌள என்று முடியும் எல்லா இராகங்களும் ஒரே இனத்தைச் சேர்ந்தவை எனக் கருதக்கூடாது. அவற்றுள் 5, 6, 8 ஆம் க்ருதிகள் அமைந்துள்ள இராகங்கள் ஒரே மேளத்தைச் சார்ந்தவை. மற்ற க்ருதிகள் வேறு மேளங்களைச் சேர்ந்தவை. அவற்றின் வடிவங்கள் வெவ்வேருனவை. இங்கே குறிப்பிடப்பெற்ற மாயாமாளவ கௌள இனத்தைச் சேர்ந்த மூன்று க்ருதிகளும் கூட ஒன்றிற்கொன்று இசையமைப்பில் வேறுபட்டவை. இந்த எட்டு க்ருதிகளின் இராகங்களுள் 'சாயா கௌள' 'பூர்வ கௌள' ஆகிய இரண்டும் அபூர்வ இராகங்கள். ஆகவே இவ்விரு இராகங்களிலும் அமைந்த க்ருதிகள் தனிச் சிறப்புடையவை. அவற்றின் ஸாஹித்தியங்களை நோக்கினுல் அவை ஸ்தோத்திரங்களாக அமைந்துள்ளனவே அன்றி தந்த்ரீக முறை ஏதுமில்லை என்பது தெரியவரும்.

திருவாரூர் ஸ்ரீதியாகராஜஸ்வாமி கோயிலில் கணபதியின் பல்வேறு வடிவங்கள் காணப்படுகின்றன. ஆகமசாஸ்திர முறைப்படி கணேசருக்குப் பதினுறு உருவங்கள் சொல்லப் பெறுகின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தனிப்பட்ட பெயரும், தனிப்பட்ட மந்திரங்களும், தனித்

தனி வழிபாட்டுத் தந்திரங்களும், அவற்றை வழி படுவதனுல் கிடைக்கும் பயன்களும் உள்ளன. பயன்களைப் பற்றிக் கருத்து வேறுபாடுகளும் உண்டு. கணேசரின் இந்தப் பதினறு ரூபங்களும் திருவாரூர்க் கோயிலில் உள்ளன. கணபதியை வழிபடும் முறையாகிய கணுபத்யத்தில் தீக்ஷிதர் சிறந்த பயிற்சி பெற்றவர். கணபதியைப் பற்றிய பாடல்கள் அவருடைய கணுபத்யப் புலமையை நன்கு வெளிப்படுத்துகின்றன. அவற்றுள் மிகவும் பிரசித்தமானவை ஹம்ஸத்வனி இராகத்தில் அமைந்த 'வாதாபி கணபதிம்', கௌள இராகத்தில் அமைந்த 'ஸ்ரீ மஹா கணபதி ரவதுமாம்', ஸ்ரீராகத்தில் அமைந்த 'ஸ்ரீ மூலாதார சக்ர விநாயகா', மலஹரி இராகத்தில் அமைந்த 'பஞ்ச மாதங்கமுக கணபதினும்', ஸாவேரி இராகத்தில் அமைந்த 'கரிகளபமுகம்' என்பவை ஆகும். சுருங்கக் கூறினுல் தீக்ஷிதருடைய க்ருதிகளில் பெரும்பாலானவை திருவாரூரிலுள்ள மூர்த்திகளைப் பற்றிப் பாடியவையே ஆகும். மேலும் அவருடைய வாழ் நாளில் ஒரு குறிப்பிட்ட மூர்த்தியைப் பற்றி மிகுதியான க்ருதிகளை அமைத்ததும் திருவாரூரில்தான். பாடல்களின் எண்ணிக்கையில் மட்டுமின்றி, தரத்திலும் திருவாரூர் க்ருதிகள் மேம்பட்டு விளங்குகின்றன.

தென்னிந்தியாவிலுள்ள பிரபலமான ஸ்தலங்களுக்கெல்லாம் செல்ல வேண்டும் என்பதும், ஆங்காங்குக் கோயில் கொண்டு எழுந்தருளி

இருக்கும் மூர்த்திகளைப் பற்றி எல்லாம் போற்றிப் பாட வேண்டும் என்பதும் தீக்ஷிதருடைய குறிக்கோள் ஆகும். ஆகவே, திருவாரூரில் ஸ்திர வாழ்க்கை மேற்கொண்டிருந்தும் கூட அவர் அடிக்கடி பிரபலமான ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்று வந்தார். இந்தக் காலத்தில்தான், அவர், காவிரிச் சமவெளிப் பகுதியிலுள்ள, ஸ்வாமிமலை, மன்னார்குடி, நாகப்பட்டினம், திருச்சிராப்பள்ளி முதலிய ஸ்தலங்களுக்குச் சென்று ஆங்காங்கு உள்ள மூர்த்திகள் பேரில் க்ருதிகள் பலவற்றை இயற்றினர். ஸ்வாமிமலையில் ஸுப்ரமணியருக்கு உரிய விசேஷமான கோயில் ஒன்று உண்டு. முருகப்பெருமானுக்கு உகந்த ஆறுபடை வீடு களில் ஸ்வாமிமலையும் ஒன்று. ஸ்வாமிமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமிநாதப் பெருமான் பேரில் தீக்ஷிதர் பல க்ருதிகளை இயற்றியிருக்கிறார். அவற்றுள் நாட இராகத்தில் அமைந்த ‘ஸ்வாமி நாத என்ற க்ருதியும், பிலஹரி இராகத்தில் அமைந்த ‘ஸ்ரீபாலஸுப்ரமண்ய’ என்னும் க்ருதி யும் பிரபலமானவை. மன்னார்குடியில் ஸ்ரீஇராஜ கோபால ஸ்வாமிக்குரிய வைஷ்ணவக் கோயில் ஒன்று உள்ளது. அந்தக் கோயிலில் எழுந் தருளி இருக்கும் பெருமாளுக்கு ‘ஸ்ரீவித்யா ராஜ கோபாலன்’ என்பது திருநாமம். இந்தக் கோயி லில்தான் கிருஷ்ண பகவான் ஸ்ரீவித்யாவுடன் சேர்ந்திருப்பதாக ஐதீகம். தேவி வழிபாட்டின் அடிப்படைத் தத்துவமே இதுதான். ஸ்ரீவித்யா

ராஜகோபால ஸ்வாமியைப் பற்றித் தீக்ஷிதர் பல க்ருதிகளை இயற்றியுள்ளார், அவற்றுள் மிகச் சிறப்புடையது 'ஸ்ரீ ராஜ கோபால' என்னும் ஸாவேரி இராக க்ருதியாகும். அதோடு ஜகன் மோஹினி இராகத்தில் அமைந்த 'ஸ்ரீவித்யா ராஜகோபாலம்' என்னும் க்ருதியும் இங்கே பாடப் பெற்றது. நாகப்பட்டினத்தில் பிரபலமான பல கோயில்கள் உள்ளன. காயா ரோகண ஸ்வாமிக்குரிய சிவன் கோயில் அங்கு ஒன்று உண்டு. அங்குத் தேவியின் பெயர் நீலாயதாக்ஷி. அவ்வூரில் உள்ள பெருமாள் கோயிலில் எழுந்தருளி இருப்பவர் ஸ்ரீ ஸௌந்தரராஜப் பெருமாள். நாகப்பட்டினத்தில் காயாரோகணர், நீலாயதாக்ஷி, ஸௌந்தரராஜப் பெருமான் ஆகிய மூர்த்தங்களைப்பற்றி முத்துஸ்வாமி தீக்ஷிதர் பல க்ருதிகளை இயற்றி யிருக்கிறார். அவற்றுள் அம்பாள் பேரில் நீலாம்பரி இராகத்தில் அமைந்துள்ள 'அம்பா நீலாயதாக்ஷி' என்னும் க்ருதியும், ப்ருந்தாவன ஸாரங்க இராகத்தில் ஸௌந்தரராஜப் பெருமாள் மீது அமைந்த ஸௌந்தரராஜம் ஆச்ரயே என்று தொடங்கும் க்ருதியும் பிரபலமானவை. அவற்றோடு காயாரோஹணரைப் பற்றி தேவகாந்தாரி இராகத்தில் அமைந்த 'காயாரோஹணேசம் பஜரே' என்ற க்ருதியும் உள்ளது.

தீக்ஷிதருக்கு ஆண் குழந்தை இல்லை. ஒரே ஒரு பெண்தான் இருந்தாள். அவளைத் திருச்சிராப்பள்ளியில் திருமணம் செய்து கொடுத்திருந்தார்.

ஆகவே அடிக்கடி அவர் திருச்சிக்குச் செல்ல வேண்டிய வாய்ப்பு ஏற்பட்டது. அப்பொழுதெல்லாம் அவர் திருச்சியிலும், திருச்சிக்குச் சமீபத்திலும் உள்ள கோயில்களுக்கெல்லாம் சென்று பல க்ருதிகளை இயற்றியிருக்கிறார். திருச்சிராப்பள்ளிக்கு அருகில் ஜம்புகேச்வரம் எனப்படும் திரு ஆனைக்காவல் என்னும் க்ஷேத்திரம் உள்ளது. இது பஞ்சலிங்க க்ஷேத்திரங்களில் ஒன்று. சிவபெருமான் இங்கு அப்புலிங்க வடிவத்தில் (நீர்) காக்ஷி தருகிறார். யமுனா கல்யாணி இராகத்தில் அமைந்த 'ஜம்பூபதே' என்னும் பிரசித்தமான க்ருதியை தீக்ஷிதர் இங்கு தான் இயற்றினார். அக் கோயிலிலுள்ள தேவியைப் பற்றிப் பேகட இராகத்தில் 'ஸ்ரீமாதாஸ் சிவவாமாங்கே' என்ற க்ருதியைப் புனைந்துள்ளார்.

திருச்சியிலுள்ள மாத்ருபூதேச்வரரைப் பற்றி கன்னட இராகத்தில் 'ஸ்ரீமாத்ருபூதம்' என்னும் க்ருதியை தீக்ஷிதர் இயற்றியுள்ளார். இந்த க்ருதி மிகச்சிறப்பு வாய்ந்தது. தீக்ஷிதர் ஸ்ரீரங்கத்திற்குச் சென்று ஸ்ரீரங்கநாதரைப் பற்றியும் க்ருதிகளைப் பாடினார். அவற்றுள் மிகப்ரபலமானவை 'ரங்கநாயகம்' என்னும் நாயகி இராகக் கீர்த்தனையும், மங்கள கைசிகி இராகத்தில் அமைந்த 'ஸ்ரீபார்கவி' என்னும் அருமையான க்ருதியும் ஆகும். அகண்ட காவேரிக் கரையில் உள்ள பல க்ஷேத்திரங்களுக்கும் சென்று பல க்ருதிகளைப் பாடியிருக்கிறார். அவற்றுள் முகாரி இராகத்தில் அமைந்த 'பாஹி

மாம் ரத்னசல நாயக' என்னும் க்ருதியும், கேதார கௌள இராகத்தில் அமைந்த 'நீலகண்டம் பஜேஹம்' என்னும் க்ருதியும் குறிப்பிடத்தக்கவைகள் ஆகும்.

தீக்ஷிதர் கீழ்வேளூருக்கு விஜயம் செய்தது பற்றி விசேஷமாகக் குறிப்பிடவேண்டும். கீழ்வேளூர் என்பது திருவாரூருக்குப் பக்கத்தில் உள்ள ஒரு சிற்றூர். அந்த ஊரில் மிகப் புராதனமான சிவன் கோயில் ஒன்று உள்ளது. அதில் சிவபெருமான் ஆகாசலிங்கரூபத்தில் காட்சி தருகிறார். இந்தக் கோயிலுக்கு இவர் சென்று வழிபட்டது பற்றிய கர்ண பரம்பரைச்செய்தி ஒன்று உண்டு. அந்தக் கோயிலில் உள்ள மூர்த்தியைப் போற்றி "அக்ஷய லிங்கவிபோ" என்ற சங்கராபரண இராகக்ருதியை இயற்றிக்கொண்டு தீக்ஷிதர் அதனை அக்கோயிலின் சந்நிதியில் பாடுவதற்காகக் கோயிலுக்குச் சென்றார். அவர் அங்குச் சென்ற பொழுது அந்தக் கோயில் பூஜை முடிந்துவிட்டது. கோயில் அர்ச்சகரோ கர்ப்ப க்ருஹக் கதவுகளை மூடிவிட்டு வெளியில் வந்து கொண்டிருந்தார். அப்பொழுது தீக்ஷிதர் இன்னம் சிறிது நேரம் கர்ப்ப க்ருஹக் கதவுகளைத் திறந்து வைக்கும்படி கேட்டுக் கொண்டே அர்ச்சகரை நோக்கி "ஸ்வாமி! திருவாரூரிலிருந்து இந்த மூர்த்தியின் தெரிசனத்திற்காக வந்திருக்கிறேன். தயவு செய்து கர்ப்ப க்ருஹக் கதவுகளைத் திறந்து வையுங்கள்" என்று வேண்டினர். அது கேட்ட அர்ச்சகர்

"ஐயா! நீங்கள் தெரிசனம் செய்யத்தானே விரும்புகிறீர்கள். நாளைக்குத் தெரிசனம் செய்து கொள்ளலாமே. அதற்குள்ளாக இந்த ஸ்வாமி எங்காவது ஓடிவிடப்போகிருரா என்ன?" என்று பரிகாசமாகச் சொன்னுர். இவ்வாறு சொல்லிக் கொண்டே அர்ச்சகர் அங்கிருந்து கிளம்ப முற்பட்டார். ஆனால் தீக்ஷிதர் அங்கேயே உட்கார்ந்து கொண்டு தாம் இயற்றிவந்த க்ருதியைப் பாடத் தொடங்கினுர். அவருடைய ஸங்கீதம் அந்த கிராமத்து மக்களை எல்லாம் கவர்ந்து இழுத்தது. அவர்கள் கூட்டமாகவந்து தீக்ஷிதரைச் சூழ்ந்து கொண்டு அவரது இசையை ரஸிக்கத்தொடங்கினர். அர்ச்சகரும் ஆர்வத்துடனும், ஆச்சரியத்துடனும் தீக்ஷிதரைப் பார்த்துக்கொண்டிருந்தார். தீக்ஷிதர் அந்த க்ருதியை முடிக்கும் தருணத்தில் என்ன ஆச்சரியம்! கர்ப்பக்ருஹக் கதவுகள் தாமாகத் திறந்துகொண்டன. மூர்த்தியின் திரு உருவம் எல்லோருக்கும் நன்கு தெரிந்தது. மக்கள் எல்லாரும் அந்நிகழ்ச்சியைக்கண்டு அதிசயித்தனர். அர்ச்சகரோ திகைப்படைந்து தீக்ஷிதரின் திருவடிகளில் வீழ்ந்து தம்மை மன்னித்து அருளுமாறு வேண்டினுர். அர்ச்சகரை ஆசீர்வதித்து, மூர்த்தியைக் கண்ணுரத் தெரிசனம் செய்துவிட்டு முத்துஸ்வாமி தீக்ஷிதர் திருவாரூர் திரும்பினுர்.*

* முத்துஸ்வாமி தீக்ஷிதர்பற்றியும் தியாகையரைப்பற்றியும் அவர்கள் நிகழ்த்திய அற்புதங்கள்பற்றி எத்தனையோ கதைகள் தமிழ்நாட்டில் வழங்குகின்றன. எனினும் எனது குருவாகிய அம்பி தீக்ஷிதரிடமிருந்து நேர்முகமாக நான் கேட்ட செய்திகளையும் தீக்ஷிதர் குடும்பத்தில் வழங்கிய கர்ண பரம்பரைச் செய்திகளையும் மட்டுமே இந்நூலில் குறிப்பிடுகிறேன்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் தெய்வத்தன்மை வாய்ந்த வாக்கேயகாரர் என்ற புகழ் நாடு முழுவதும் பரவியது. முக்கியமாக, கோயில்களின் தர்மகர்த்தாக்களும், தனவந்தர்களும் போட்டி போட்டுக்கொண்டு, அவரை அழைத்து, தங்கள் மேற்பார்வையிலுள்ள கோயில்களைத் தெரிசிக்கு மாறும், அந்த மூர்த்திகள்பேரில் பாடல்கள் புனையு மாறும் வேண்டினர். அவ்வாறு அழைத்தவர் களில் வைத்தியலிங்க முதலியார் என்பவரும் ஒருவர். அவர் திருவாரூருக்கு அருகிலுள்ள 'கர்த்த தீர்த்தம்' எனப்படும் குளிக்கரையில் பெரிய மிராசுதார். அவ்வூரில் விசுவேச்வரருக் கும், விசாலாக்ஷி அம்மைக்கும், அன்னபூரணிக் கும் உரிய சிவன்கோயில் ஒன்று உள்ளது. முத்து ஸ்வாமிதீக்ஷிதர் வைத்தியலிங்க முதலியாரின் அழைப்பை ஏற்று அங்குச் சென்று சிலநாட்கள் தங்கி, அங்குள்ள தெய்வங்களைப்பற்றி க்ருதிகள் இயற்றினார். அவற்றில் எல்லோரும் நன்கு அறிந்தவை "காசி விச்வேச்வர" என்னும் காம்போதி இராகக்ருதியும், "அன்னபூரணி" என்னும் சாமா இராகக்ருதியும் ஆகும். அவற்றைக்கேட்ட வைத்தியலிங்க முதலியார் பெருமகிழ்ச்சி அடைந்து அவருக்குக் கனகாபி ஷேகம் செய்து பெரும் சிறப்புக்களை அளித்தார். அதன்பிறகு அங்கு இருந்த சிலர் வைத்தியலிங்க முதலியாரைப் புகழ்ந்து அவர்மீது ஒரு பாட்டுப் பாடும்படி யோசனை கூறினார். ஆனால் தீக்ஷிதர்

அதனை மறுத்து, அவ்வாறு பாடுவதால் முதலியாருக்கோ, தனக்கோ எத்தகைய நன்மையும் விளையாது என்று சொல்லி, வைத்தியலிங்க முதலியாரைக் காத்து அருளுமாறு, தான் அவ்வூர் இறைவனை வேண்டிப் பாடுவதால் பெரும் பயன் விளையும் என்று கூறினார். அதன்பிறகு அவர் பிரசித்தி பெற்ற "ஸ்ரீ விச்வநாதம்" என்னும் சதுர்தச ராகமாலிகையை இயற்றினார். அந்த இராகமாலிகை பதினான்கு இராகங்களில் அமைந்துள்ளது. அதன் கடைசியில் தீக்ஷிதர், அந்தக் கோயிலின் மூர்த்தியை "செல்வந்தர் வைத்திய லிங்கத்தைக் காப்பாற்றுகிறவர்" என்று வர்ணித்துள்ளார். *

நரஸ்துதியை வெறுத்த தீக்ஷிதரின் கொள்கை பெரிதும் போற்றதற்குரியது. தீக்ஷிதர், செல்வம் மிகுந்த வசதியான நிலையில் என்றுமே இருந்த

---

* 1892-ம் ஆண்டு சின்னஸாமி முதலியார் என்பவர், 'ஐரோப்பிய இசைக்குறியில் கீழ்த்திசை ஸங்கீதம்' (Oriental Music in Europian Notation) என்னும் ஒரு நூலைப் பதிப்பித்திருக்கிறார். அந்த நூலில் அவர் இந்த இராகமாலிகையைச் சேர்த்துள்ளார். அதன் கீழ்ப் பகுதியில் பின்வருமாறு குறிப்பு ஒன்று எழுதியுள்ளார்:—இந்த இராகமாலிகை புலமை பெற்ற குளிக்கரை மிராசுதார் ஆகிய வைத்தியலிங்க முதலியாரின் வேண்டுகோளுக்கிணங்க இயற்றப் பெற்றது. இந்த மிராசுதார் முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு கனகாபிஷேகம் செய்து பெருமைப் படுத்தினார். தீக்ஷிதரின் விசேஷமான தகுதிகளை அந்த மிராசுதார் நன்கு உணர்ந்துதான் பெருமைப் படுத்தினார். அவர் தன்னையும் புகழ்ந்து ஒரு பாட்டு இயற்றுமாறு தீக்ஷிதரை வேண்டிக்கொண்டார். ஆனால் தியாகையரைப் போலவே நரஸ்துதி செய்வதைப் பெரிதும் வெறுத்தார். ஆகவே தீக்ஷிதர் குளிக்கரையிலுள்ள தெய்வங்களைப் பாடி விட்டு முடிவில், அவ்வூரின் மிராசுதாருக்கு அருள் செய்யும் படியாகக் கடவுளை வேண்டிக்கொண்டு அந்த இராகமாலிகையை முடித்தார்.

தில்லை. வாழ்க்கை நடத்துவதற்கு அவர் பெரிதும் பாடுபடவேண்டியிருந்தது. சுருங்கக் கூறினால் பசி தன் வீட்டை நெருங்காதிருக்க அவர் பெரு முயற்சி செய்யவேண்டியிருந்தது. அவருடைய வறுமை நிலையைப் பற்றியும், சில சமயங்களில் அதைப் போக்கிக்கொண்ட அதிசயம் பற்றியும் எவ்வளவோ சுவையான நிகழ்ச்சிகள் சொல்லப் பெறுகின்றன. அவற்றுள் ஒன்றை இங்கே குறிப்பிடுவது பொருத்தமாகஇருக்கும். அந்த நிகழ்ச்சி இந்தத் திருவாரூர் வாழ்க்கையோடு தொடர்பு கொண்டது. அதோடு அந்நிகழ்ச்சிபற்றி அவர் குடும்பத்தில் கர்ண பரம் பரைக்கதையும் உள்ளது. ஒருமுறை அவர் வீட்டில் உணவுப் பொருள்கள் தீர்ந்துவிட்டன. அன்று சமைய லுக்கு வேண்டிய உணவுப்பொருள்கள்கூட தேவையான அளவு இல்லை. ஸ்த்ரீகள் சமையல் அறையில் என்ன செய்வது என்று புலப்படாமல் திகைத்தார்கள். அந்தச் சமயத்தில் தீக்ஷிதர் தம்முடைய சிஷ்யர்களுக்கு ஸங்கீதம் கற்பித்துக் கொண்டிருந்தார். அவர்களுள் தாஸிகமலம் என்றொரு சிஷ்யை இருந்தாள். அவளுக்கு அந்த ஊர்க்கோயிலில் மானிய உரிமை இருந்தது. தீக்ஷிதரின் மனைவி மெல்ல அந்தக் கமலத்தை உள்ளே அழைத்து, "கமலம்! வீட்டில் சமையலுக்கு அரிசியில்லை. நாங்கள் பட்டினிகிடக்க நேரிடும்போல் தோன்றுகிறது. உன்னால் ஏதேனும் உதவி செய்ய முடியுமா?" என்றுகேட்டாள். உடனே கமலம்,

"அம்மா! நானிருக்கும்பொழுது தாங்கள் எதற்காகக் கவலைப்படவேண்டும்? என்னுடைய கையிலுள்ள தங்க வளையல்களை அடகுவைத்துப் பணம் வாங்கிவருகிறேன். அதை வைத்துக் கொண்டு தாங்கள் தங்களுக்குத் தேவையான பண்டங்களை எல்லாம் வாங்கிக்கொள்ளுங்கள்" என்று கூறினாள். இந்த வார்த்தைகள் தீக்ஷிதரின் செவிகளில் விழுந்தன. சிஷ்யர்களை நாம் பராமரிக்க வேண்டியது போக, அவர்களுடைய பராமரிப்பில் நாம் இருக்கவேண்டிய நிலையா வந்துவிட்டது! இவ்வாறு எண்ணிய முத்துஸ்வாமி தீக்ஷிதர் சொல்லமுடியாத வருத்தமுற்று கமலம் வெளியே வந்தவுடன் அவளை நோக்கி "கமலம்! என்ன செய்ய முற்பட்டாய்! உன்னுடைய வளையல்கள் எங்களுக்குச் சில நாட்கள் சோறுபோடும். அதன் பின்! வாழ்நாள் முழுவதும் எங்களை நீ காப்பாற்ற வேண்டிய நிலை ஏற்பட்டால் உன்னிடம் என்ன எஞ்சி இருக்கும்? நம் எல்லோருக்கும் உணவளிப்பவர் கடவுளே ஆவார். நான் உண்மையான பக்தனாக இருந்தால் ஸ்ரீ தியாகேசர் என்னைக் கைவிட மாட்டார். எனக்குத் தேவையானபொழுது அவர் கட்டாயமாக உதவி செய்வார். ஆகவே உன் நகைகளை அடகுவைக்கவேண்டாம். என்னுடைய ஸங்கீதத்தை சிஷ்யர்களுக்கு விற்று நான் வாழ்க்கை நடத்துகிறேன் என்று யாரும் எந்தச் சமயத்திலும் சொல்ல இடம் கொடுத்துவிடாதே" என்று சொல்லிவிட்டு அவர் வழக்கப்படி ஸ்வாமி

தெரிசனம் செய்யக் கோயிலுக்குச் சென்றுவிட்டார். அன்றைய தினமே அவர் யதுகுல்காம்போதி இராகத்தில் "தியாகராஜம் பஜரேரேசித்த" என்ற க்ருதியை ஸ்ரீ தியாக ராஜஸ்வாமிகள் பேரில் இயற்றினர். அவர் ஸ்வாமி ஸந்நிதியில் இந்த க்ருதியை ஆழ்ந்த பக்தியுடனும் உணர்ச்சியுடனும் பாடிவிட்டுத் தன் வீடு திரும்பினர். அதற்குள்ளாக ஒரு அதிசயம் வீட்டில் அவருக்குக் காத்திருந்தது. நடந்தது பின்வருமாறு:

தஞ்சாவூர் அரசியல் அதிகாரி ஒருவர் திருவாரூருக்கு விஜயம் செய்வதாகத் திட்டம் போடப்பெற்றிருந்தது. அவருக்கு விருந்து வைப்பதற்கென்று உள்ளூர் அதிகாரி பலவகைப்பட்ட உணவுப்பொருள்களை பெரிய அளவில் சேர்த்து வைத்திருந்தார். ஆனல் அந்த அதிகாரி திருவாரூருக்கு விஜயம் செய்வதை ரத்து செய்துவிட்டதாக அன்று காலையில் செய்தி வந்ததும் அந்த உள்ளூர் அதிகாரி தாம் சேமித்து வைத்திருந்த உணவுப் பொருள்களை என்ன செய்வதென்று யோசித்தார். அவற்றைத் தெய்வத்தன்மை நிறைந்த ஸாக்ஷித்ய கர்த்தாவாகிய தீக்ஷிதரிடம் சேர்ப்பிப்பது என்று முடிவு செய்து அவர் வீட்டுக்கு அனுப்பிவிட்டார். கோயிலில் ஸ்ரீ தியாகேசரைக் கசிந்துருகிப் பாடி வீடுதிரும்பிய தீக்ஷிதர் பெருமளவில் உணவுப் பொருள்கள் தம் வீட்டுக்கு வந்திருப்பதைக் கண்டு "ஸ்ரீதியாகேசப் பெருமான் என்னைக் காப்பாற்றிவிட்டார்" என்று சொல்லி, ஸாளக பைரவி

இராகத்தில் "த்யாகராஜேன ஸம்ரக்ஷிதோஹம்" என்னும் க்ருதியை இயற்றினார்.

அவ்வூர்க் கோயிலைச் சேர்ந்த தாஸிகளில் கமலமும் ஒருத்தியாவாள். கோயில் மூர்த்தியின் எதிரில் நாட்டியமாடும் மிராசு உரிமை அவளுக்கு இருந்தது. அந்த உரிமையை ஏற்றுக்கொள்ளும் பருவம் அவளுக்கு வந்துவிடவே, அதனை ஏற்கும் பொழுது ஒரு நாட்டியக்கச்சேரி (அரங்கேற்றல்) நிகழ்த்தவேண்டி இருந்தது. இந்த நாட்டியத்திற்குச் சில உருப்படிகளை இயற்றித்தருமாறு எல்லோரும் தீக்ஷிதரை வேண்டினர். அதற்கு தீக்ஷிதர் உருப்படிகளை இயற்றித்தருவதாகவும் ஆனால் அவை எல்லாம் கடவுளைப் போற்றுவனவாகவே இருக்கும் என்றும் கூறினார். அரங்கேற்றத்திற்காக அவர் இயற்றிய உருப்படிகளில் ஸ்ரீ தியாகேசரைப் பற்றிய 'ரூபமுஜூசி' என்ற தோடி இராகப் பதவர்ணமும், ஸ்ரீரஞ்சனி இராகத்தில் 'நீஸாடி தெய்வமந்துலேதனி' என்ற தருவும் நமக்குக் கிடைத்துள்ளன. தாஸி கமலத்தின் நாட்டிய அரங்கேற்றத்தைக் கண்ணுற்றவர்களில் தஞ்சை சகோதரர்களாகிய பொன்னையா, வடிவேலு முதலியவர்கள் முக்கியமானவர்கள். நாட்டியக் கச்சேரியைக் கண்டு பெரிதும் ரஸித்த அந்த சகோதரர்கள் தீக்ஷிதரிடம் சென்று வணங்கித் தங்களை அவருடைய சிஷ்யர்களாக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார்கள். அதோடு தஞ்சையிலேயே வந்து வாசம்செய்து தங்களுக்கு ஸங்கீ

தம் கற்றுக்கொடுக்கும் படியும் கேட்டுக்கொண்டனர். தீக்ஷிதரும் சிறிது காலம் கழித்துத் தஞ்சை வருவதாக வாக்குறுதி கொடுத்தார்.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமி கோயிலில் ஸ்வாமி கைங்கர்யம் செய்து வந்தவர்களில் தம்பியப்பன் என்பவரும் ஒருவர். அவர் சுத்த மத்தளம் வாசிப்பதில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். அவர் தீக்ஷிதருடைய உண்மையான சிஷ்யர். தம்பியப்பனுக்கு ஒரு முறை திடீரென்று வயிற்றுவலி வந்துவிட்டது. அந்த வயிற்றுவலியைப் போக்க மருத்துவர்கள் பலர் முயன்றனர். எத்தனை முயன்றும் அந்த வயிற்றுவலி நீங்கவில்லை. முத்துஸ்வாமி தீக்ஷிதர் சோதிட சாஸ்திரத்தில் வல்லவர். அவர் தம்பியப்பனின் ஜாதகத்தை வரவழைத்து ஆராய்ந்து பார்த்தார். குரு பெயர்ச்சியால் தம்பியப்பனுக்கு இவ்வாறு நோய் வந்தது என்று உணர்ந்தார். ஆகவே அவர் க்ரஹத்தைத் திருப்திப் படுத்த வேண்டும் என்று முடிவு செய்தார். வேத மந்திரங்களைச் சொல்லுவதனால் அப்பொழுது பயன் கிடைக்காது என்பதையும் அவர் தெரிந்து கொண்டார். அந்த நேரத்தில் குரு பகவானைப் புகழ்ந்து பாடுதல் ஒன்றே பயன் பெறுவதற்கு வழி என்பது அவருக்குப் புலப்பட்டது. இன்னும் நன்கு யோசித்ததில் எல்லா க்ரஹங்களைப் பற்றியும் பாடல்களை இயற்றுவதால் மக்கள் இனத்திற்கே நன்மை கிடைக்கும் என்ற எண்ணம் உதித்தது.

எனவே அவர் 'நவக்ரஹ க்ருதிகளை' இயற்றினார். அவை பின் வருமாறு:

1. ஸூர்யமூர்த்தே – ஸூர்யன் – ஸௌராஷ்ட்ர இராகம்.
2. சந்த்ரம்பஜ சந்திரன் – அஸாவேரி – இராகம்.
3. அங்காரகம் – செவ்வாய் – ஸுரடி இராகம்.
4. புதமாச்ரயாமி – புதன் – நாடகுரஞ்சி இராகம்.
5. ப்ருஹஸ்பதே – குரு – வியாழன் அடாணு இராகம்.
6. ஸ்ரீ சுக்ரபகவந்தம் – சுக்ரன் – பரஜு இராகம்.
7. திவாகரதனுஜம் – சனி – யதுகுல காம்போதி இராகம்.
8. ஸ்மராம்யஹம் – ராகு ராமமனோஹரி – இராகம்.
9. மஹாஸுரம் – கேது – சாமரம் இராகம்.

தம்பியப்பன் "ப்ருஹஸ்பதே" என்று தொடங்கும் குரு பகவானைப்ரீதிசெய்யும் க்ருதியை மனப்பாடம் செய்து நாள்தோறும் பாடி வந்தார் என்றும், நாளா வட்டத்தில் அவருடைய வயிற்றுவலி நீங்கிச் சுகம் அடைந்தார் என்றும் சொல்லப் படுகிறது. முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றியுள்ள இந்த நவக்ரஹ கீர்த்தனைகள் மிகப் பிரபலமானவை. ஸம்ஸ்க்ருத ஆராய்ச்சி நூல்கள் நவக்ரஹப்ரீதி செய்வது பற்றி விரிவாகக் கூறுகின்றன. அவற்றில் கூறப்பெற்றுள்ள கருத்துக்களைத் தெளிவாகப் புலப்படுத்தும் தீக்ஷிதரின் ஆழ்ந்த சோதிட அறிவை இந்த க்ருதிகள் நன்கு வெளிப் படுத்துகின்றன. அது மட்டுமின்றி இந்த

க்ருதிகளின் ஸங்கீத அமைப்பும் ஸாஹித்திய அமைப்பும் மிக உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை. இந்த க்ருதிகளின் இராக ஸஞ்சாரங்கள் மிக உயர்ந்தமுறையில் அமைந்திருப்பதோடு, தாள அமைப்பிலும் மிகச் சிறந்து விளங்குகின்றன. சூளாதி ஸப்த தாளங்களையும் இந்த க்ருதிகளில் தீக்ஷிதர் கையாண்டிருக்கிறார். த்ருவ, மட்ய, ரூபக, ஜம்ப, த்ரிபுட, அட, ஏக என்னும் ஏழு தாளங்கள் கர்னாடக ஸங்கீதத்தில் உள்ளன. இந்த ஏழு தாளங்களின் அடிப்படையில் தான் கர்னாடக ஸங்கீதத்தின் முறை அமைந்துள்ளது. இந்த ஏழு தாளங்களையும் வரிசையாக நவக்ரஹ கீர்த்தனை களின் முதல் ஏழு கீர்த்தனைகளையும் அமைத் துள்ளார். இது எல்லோரும் வியந்து பாராட்டுதற் குரியது.

1817-ம் வருஷம் திருவாரூரில் தீக்ஷிதர் குடும்பத் தில் ஒரு பெருமாறுதல் ஏற்பட்டது. அந்த ஆண் டின் தொடக்கத்தில் தீக்ஷிதருடைய தாயும் தந்தை யும் இறைவன் திருவடி நீழலைச் சேர்ந்தனர். அத ஞல் அந்தக் குடும்பத்தில் பெரும் துக்கம் உண்டா யிற்று. பெற்றோர்கள் இல்லாத குடும்பம் சூன்ய மாகத் தோற்றம் அளித்தது. அப்பொழுது மதுரையிலிருந்த பெரிய மனிதர்கள் சிலர் திருவாரூ ருக்கு வந்து, தம்மோடு மதுரைக்கு வரும்படியாக வும், மீனாக்ஷியம்மையையும் சுந்தரேச்வரரையும் புகழ்ந்து க்ருதிகள் இயற்றுமாறும் அழைத்தனர். மதுரையில் வந்து தங்குவதற்குத் தமக்கு விருப்ப

மிருப்பதாகவும் ஆனால் சிறிது காலம் கழித்து அப்படியே செய்வதாகவும் அவர்களிடம் கூறிவிட்டார். எனினும் அந்தப் பெரிய மனிதர்கள் தீக்ஷிதரின் சகோதரர்களாகிய சின்னஸ்வாமியையும் பாலுஸ்வாமியையும் ஆகிலும் தங்களோடு மதுரைக்கு அனுப்பி, தங்களுக்கு தீக்ஷிதர் க்ருதிகளைக் கற்றுக்கொடுக்கச் செய்ய வேண்டுமென்று வேண்டினர். தீக்ஷிதர் இந்த வேண்டுகோளுக்கு இசைந்தார். சகோதரர்களும் மதுரை செல்ல ஒப்புக் கொண்டனர். தீக்ஷிதர் தம் சகோதரர்களை மதுரை செல்ல விடை கொடுத்தார். அவர்கள் சென்ற பிறகு தீக்ஷிதர் தனியாக வாழ நேர்ந்தது. அந்தத் தனிமை அவரை மிகவும் வாட்டியது. இந்த நேரத்தில் தஞ்சை சகோதரர்களாகிய பொன்னையா வடிவேலு ஆகிய இருவரின் அழைப்பு நினைவுக்கு வந்தது. ஆகவே முத்துஸ்வாமி தீக்ஷிதர் தஞ்சைக்குச் செல்ல முடிவு செய்தார்.

# 5

# தஞ்சாவூர்

தஞ்சாவூர் சகோதரர்களாகிய பொன்னையா, சின்னையா, சிவானந்தம், வடிவேலு ஆகிய நால்வரும் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் தஞ்சை வருகையை அறிந்ததும் பெருமகிழ்ச்சி அடைந்தனர். அவர் சௌக்கியமாகத் தங்குவதற்கு ஏற்ற வசதிகளை எல்லாம் செய்ய முனைந்தனர். தஞ்சாவூரில் மேல இராஜ வீதியில் பொன்னையா சகோதரர்கள் வீட்டுக்கு எதிரில் ஒரு பெரிய கட்டிடம் உள்ளது. அதில் இப்பொழுது சங்கர மடம் இருக்கிறது. அது எல்லா வசதிகளும் நிறைந்த விசாலமான கட்டிடம். அங்குத் தீக்ஷிதர் தம் குடும்பத்தோடு தங்குவதற்கு எல்லா விதமான வசதிகளும் செய்யப் பெற்றன. தீக்ஷிதர் தம் குடும்பத்தாருடன் தஞ்சை வந்து சேர்ந்தார். இயற்கையிலேயே ஸங்கீத ஆர்வம் நிறைந்த தஞ்சைப் பகுதி மக்கள் தீக்ஷிதருடைய வருகையை அறிந்து குதூஹலம் அடைந்தனர். உள்ளூர் மிராசுதார்களும், சாஸ்திர விற்பன்னர்களும், ஸங்கீத வித்வான்களும் திரள் திரளாக வந்து தீக்ஷிதரைத் தெரிசித்து தங்களுடைய மரியாதைகளைச் செலுத்தினர். அவ்வாறு வந்து வரவேற்பு அளித்தவர்களுள் விசேஷமாகக் குறிப்பிடவேண்டியவர் மிகப் பெரிய ஸாஹித்ய கர்த்தாவாகிய சியாமா சாஸ்திரிகள்

ஆவார். தஞ்சை மேல இராஜ வீதியின் வட கோடியிலுள்ள காமாக்ஷியம்மன் கோயிலுக்குப் பின்புறம், காமாக்ஷியம்மன் கோயில் அக்ரஹாரத்தில் சியாமா சாஸ்திரிகள் வாழ்ந்து வந்தார். சியாமா சாஸ்திரிகளும் முத்துஸ்வாமி தீக்ஷிதரும் பழைய நண்பர்கள். அதோடு அவர்கள் இருவரும் தேவி வழிபாடு செய்பவர்கள். தஞ்சாவூரில் அவ்விருவரும் அடிக்கடி சந்திப்பார்கள்.

அவர்கள் சந்திக்கும் பொழுதெல்லாம் நுட்பமான தந்த்ரீகக் கோட்பாடுகளைப் பற்றி விவாதிப்பது வழக்கம். ஸங்கீதத்திலோ அவ்விருவரும் வெவ்வேறான மார்க்கங்களைப் பின்பற்றியவர்கள். சியாமா சாஸ்திரிகள் தாளத்திற்குப் பிராதான்யம் கொடுத்திருந்தார். முத்துஸ்வாமி தீக்ஷிதரோ இராகத்திற்கே முதலிடம் கொடுத்திருந்தார். சியாமா சாஸ்திரிகளின் க்ருதிகள் பெரும்பாலும் பிரசித்தமான இராகங்களிலேயே அமைந்திருக்கும். ஆனால் தீக்ஷிதரின் க்ருதிகளோ பிரபல இராகங்களன்றி, மிக்க அபூர்வமான இராகங்களிலும் அமைந்திருக்கும். மேலும் அவருடைய க்ருதிகளில் இராகங்களின் முழு ஸ்வரூபமும் அமைந்து இருக்கும். அதனால் தான் சில அபூர்வ இராகங்களை அவரது க்ருதிகளைக் கொண்டே நாம் அறிந்து கொள்ள முடிகிறது. இப்படி சியாமா சாஸ்திரிகளும், முத்துஸ்வாமி தீக்ஷிதரும் வெவ்வேறான மார்க்கங்களைப் பின்பற்றி இருந்தாலும் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளை சியாமா

சாஸ்திரிகள் மிகவும் விரும்பினர். சியாமா சாஸ்திரிகள் தம்முடைய சொந்தமகன் சுப்பராய சாஸ்திரியையே முத்துஸ்வாமி தீக்ஷிதரிடம் ஸங்கீதப் பயிற்சிபெற ஏற்பாடு செய்தார் என்றல், அவருக்கு தீக்ஷிதர் ஸங்கீதத்திலிருந்த பற்றுக்கு வேறு சான்று வேண்டுமோ? பிற்காலத்தில் சுப்பராய சாஸ்திரிகள் சிறந்த ஸங்கீத ஸாஹித்ய கர்த்தாவாக விளங்கினர். சுப்பராய சாஸ்திரிகளின் க்ருதிகள் தனிப் பொலிவுடன் விளங்குகின்றன என்று சொல்லவேண்டும். காரணம், அவருடைய க்ருதிகளில் சியாமா சாஸ்திரிகளுடைய க்ருதிகளில் காணும் விசேஷமான தாள அம்சங்களும், முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய க்ருதிகளில் காணும் இராகங்களும் ஒருங்கே அமைந்துள்ளதுதான். இந்தக் காலத்தில் மதுரையில் தங்கிஇருந்த தீக்ஷிதரின் சகோதரர்களாகிய சின்னஸ்வாமியும் பாலுஸ்வாமியும் அவ்வப்பொழுது தஞ்சை வருவது வழக்கம். அப்பொழுதெல்லாம் தீக்ஷிதரும் அவருடைய சகோதரர்களும் சியாமா சாஸ்திரிகளோடு அளவளாவுதல் உண்டு. அவ்வாறு நேர்ந்த போதெல்லாம் அவர்கள் எல்லாரும் சேர்ந்து பாடுவதில் ஈடுபடுவது வழக்கம். இவ்வாறு அவர்கள் ஒன்ருகக் கூடியிருந்த பொழுது நடந்த சுவையான நிகழ்ச்சி ஒன்று உள்ளது. இராமஸ்வாமி தீக்ஷிதர் சௌக வர்ணம் ஒன்று இயற்றியுள்ளார். அது ஸ்ரீரஞ்சனி இராகத்தில் "ஸாமி நின்னே கோரி" என்று தொடங்குவதாகும். அந்த வர்ணத்தின் சரண ஸ்வரங்களில் ஒன்றைத்

தவிர மற்றவை கிடைக்காமற் போயிருந்தன. தீக்ஷிதருக்கோ அவருடைய சகோதரர்களுக்கோ மறைந்து போன அந்த ஸ்வரங்கள் நினைவுக்கு வரவில்லை. இவ்வளவு சிறந்த சௌகவர்ணம் அரைகுறையாக இருப்பது சரியன்று என சியாமா சாஸ்திரிகள் எண்ணினர். ஆகவே அவர் இரண்டாவது ஸ்வரத்தைத் தாமே இயற்றினர். எஞ்சியிருந்த பகுதியை முத்துஸ்வாமி தீக்ஷிதரையும் சின்னஸ்வாமியையும் கொண்டு வர்ணத்தை, பூர்த்தி செய்யும்படி கோரினர். அதற்கிணங்க அந்த வர்ணத்தின் மூன்றாவது ஸ்வரத்தை சின்னஸ்வாமி தீக்ஷிதரும் கடைசிப் பகுதியாகிய நான்காவது ஸ்வரத்தை முத்துஸ்வாமி தீக்ஷிதரும் இயற்றிப் பூர்த்தி செய்தனர். * தென்னிந்தியாவின் ஸங்கீத வரலாற்று ஏடுகளில், தஞ்சாவூரில் சியாமா சாஸ்திரிகளும், முத்துஸ்வாமி தீக்ஷிதரும் சந்தித்த நிகழ்ச்சிகள் எல்லாம் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய பெருமை உடையன.

தஞ்சாவூரில் பல கோயில்கள் உள்ளன. அவற்றுள் மிகப்பிரசித்தி பெற்றது சிவபெருமானுக்கு உரிய பிருகதீச்வரர் ஆலயம் ஆகும். அங்குள்ள தேவியின் பெயர் பிருஹந்நாயகி அம்மை. இடைக்காலச் சோழப் பேரரசர்களால் அக்கோயில்

* சென்னை ஸங்கீத வித்வத்ஸபை வெளியிட்டுள்ள ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினி என்ற நூலினுடைய தமிழ்ப் பதிப்பின் 504-ம் பக்கத்தின் கீழே அமைந்துள்ள குறிப்பினைக் காண்க.

எழுப்பப் பெற்றது. அக்கோயிலைக் கட்டிய பொழுது அந்தச் சோழ மன்னர்கள் உன்னதமான நிலையில் இருந்தனர். பிருஹதீச்வரர் கோயில் மிகவும் பிரம்மாண்டமான அமைப்பினை யுடையது. கட்டிடக் கலை, சிற்பக்கலை ஆகியவற்றின் நுணுக்கங்களை எல்லாம் அக்கோயில் கொண்டு விளங்குகிறது. முத்துஸ்வாமி தீக்ஷிதர் இந்தப் பெரிய கோயிலுக்கும், தஞ்சையிலுள்ள ஏனைய கோயில்களுக்கும் சென்று ஆங்காங்கு உள்ள மூர்த்திகளின் பேரில் எல்லாம் கணக்கில்லாத க்ருதிகளை இயற்றியுள்ளார். அவற்றுள் பெரும் பாலானவை பிருஹதீச்வரர் பேரிலும், பிருஹந் நாயகி அம்மை பேரிலும் அமைந்துள்ளன. இந்த க்ருதிகளில் சில பிரசித்தமான இராகங்களில் அமைந்துள்ளன என்றாலும் பலக்ருதிகள் வேங்கட மகியின் விவாதி மேள இராகங்களில் அமைந் துள்ளன. இதைப்பற்றி ஒரு விளக்கம் அவசிய மாகிறது.

கர்நாடக ஸங்கீதத்தில் 72 மேள ராகவரிசையை வகுத்தவர் வேங்கடமகியாவர். உண்மையைக் கூறினால், அந்தக்காலம் வரையில் ஸங்கீத வித் வான்கள் கூட 72 மேளங்களைப் பற்றித்தெரிந்து கொள்ளாமல் இருந்தனர். ஸங்கீத சாஸ்திர நுட் பங்களை அறிந்தவர்கள் தவிர, ஏனையோர் 72 மேள கர்த்தாக்களைப் பற்றிச் சிந்திக்கவும் இல்லை. வேங்கடமகியின் காலத்திற்கு முன்பாக பழக்கத் திலிருந்த இராகங்களின் எண்ணிக்கை 150க்கும்

குறைவாகவே இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. அவற்றுள் மேளகர்த்தா இராகங்கள் எனப் படுபவை 15 லிருந்து 19க்குள்தான் என்று பல ஆராய்ச்சியாளர்கள் கருத்துக் கொண்டிருந்தார்கள். மேலும் அடிப்படையில் வேறுபாடு கொண்ட பல இராகங்களை எல்லாம் ஒரே மேளகர்த்தாவைச் சேர்ந்த ஜன்ய இராகங்கள் என்று வகைப்படுத்தி இருந்தனர். இந்த நேரத்தில்தான் வேங்கடமகியின் மேள ஆராய்ச்சி நடந்தது. ஸங்கீத உலகத்திற்கே முதன் முதலாக மேளகர்த்தாக்களையும், அவற்றின் ஜன்ய இராகங்களையும் வகைப்படுத்தி உணர்த்தியவர் வேங்கடமகியே ஆவார். அவர், அந்தந்த இராகங்கள் எடுத்துக்கொள்ளும் ஸ்வரங்களின் அடிப்படையிலேயே மேளகர்த்தாக்களையும் ஜன்ய இராகங்களையும் வகைப்படுத்தவேண்டும் என்னும் கொள்கையைத் தோற்றுவித்தார். இத்தகைய கொள்கையை அடிப்படையாகக்கொண்டு தான் அவர் 72 மேளகர்த்தா முறையினை வகுத்தார். அவர் வகைப்படுத்திய மேளங்களில் பல அன்று பழக்கத்தில் இல்லை. அவை யாவும் வேங்கடமகியால் தோற்றுவிக்கப்பெற்று, பிறர் அறியாமல் இருந்தன. ஆகவே சுமார் 1735-ம் ஆண்டில் தஞ்சை மன்னர் துளஜா என்பவர் தம்முடைய 'ஸங்கீதஸாராம்ருதம்' என்னும் ஆராய்ச்சி நூலில் "வேங்கடமகியின் மேளங்கள் பிராபல்யம் அடையவில்லை. இன்று வழங்கும் இராகங்களுக்கு 21 மேளங்களே போதுமானவை" என்று எழுதியதில் வியப்பில்லை. ஆகவே துளஜா மன்னர் அன்று

வழங்கிய இராகங்களுக்கு உரிய லக்ஷணங்களைக் கூறினர். அதன் பின் இந்த நிலையில் ஒருமாறுதல் நாளாவட்டத்தில் உண்டாகியது. வேங்கடமகியின் மேளகர்த்தா முறை எங்கும் பரவ ஆரம்பித்து அவருடைய 72 மேளகர்த்தா முறையைப் பலரும் பின்பற்றினர். வேங்கடமகியே புதிய மேளங்களுக்கு லக்ஷண கீதங்கள் இயற்றி இருக்கிறர். அந்தந்த இராகங்களின் சாயைகளுக்கெல்லாம் இந்த லக்ஷண கீதங்கள் வழிகாட்டிகளாக உதவுகின்றன. ஸ்ரீ தியாகையரும் தீக்ஷிதரும் வாழ்ந்த காலத்தில் இருந்த ஸங்கீதத்தின் நிலை இதுவாம். ஸ்ரீ தியாகையரின் குருவாகிய ஸொன்டி வெங்கடரமணய்யா வேங்கடமகியின் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவர். முத்துஸ்வாமி தீக்ஷிதரோ வேங்கடமகியின் மேளகர்த்தா முறையில் மட்டுமில்லாமல், வேங்கடமகி இயற்றிய மேளகர்த்தா லக்ஷணகீதங்களிலும் பயிற்சி பெற்றவர். இவ்வாருக வேங்கடமகியின் மேளகர்த்தா முறையை நாட்டில் பரப்பும் பொறுப்பு ஸ்ரீ தியாகையருக்கும் முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கும் வந்து சேர்ந்தது. அவர்களும் அந்தப் பொறுப்பினை வெற்றிகரமாக நிறைவேற்றினர்.

தஞ்சைச் சகோதரர்கள் குடும்பம் பரத நாட்டியக் கலையில் பெயர் பெற்றிருந்தது. அவர்கள் சாஸ்த்ரீய ஸங்கீதத்தை நன்கு கற்றுக்கொள்ளவேண்டும் என்று ஆசை கொண்டனர். அதற்காக அவர்கள் வேங்கடமகியின் 72 மேளங்களையும் முறைப்படி

கற்றுக்கொள்ள விரும்பினர். இத்தகைய நோக்கத்துடன் தான் அவர்கள் தீக்ஷிதரை தஞ்சாவூருக்கு வந்து தங்களைச் சிஷ்யர்களாக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினர். தீக்ஷிதர் தஞ்சாவூருக்குக் குடி ஏறியபின்பு தஞ்சாவூர் சகோதரர்களுக்கு சாஸ்த்ரீய ஸங்கீதத்தைக் கற்பிக்கத் தொடங்கினார். பொன்னையா சகோதரர்களுக்கு அவர் வேங்கடமகியின் 72 மேள அமைப்புக்களையும் அந்த மேளங்களில் அமைந்த லக்ஷண கீதங்களையும் தீக்ஷிதர் கற்பித்தார். அவற்றைத் தஞ்சைச் சகோதரர்கள் எளிதிலே கற்றுக்கொள்ளுவதற்கு உதவியாக அவர் விவாதி மேளங்களில் பல க்ருதிகளை இயற்றி அவற்றையும் அவர்களுக்குக் கற்பித்தார். இந்த க்ருதிகள் எல்லாம் தஞ்சாவூரில் கோயில் கொண்டிருக்கும் கடவுள்கள் மீது அமைந்திருந்தது இயற்கைதானே! இவ்வாறு ப்ருஹதீச்வரர், ப்ருஹந்நாயகி பேரில் பாடப்பெற்ற க்ருதிகள் பெரும்பாலானவை வேங்கடமகியின் விவாதிமேள அமைப்பிலேயே இருந்தன.* அவைகள் எல்லாம் சிறிய க்ருதிகள், கீதங்களைப்போலவே அவை அமைந்துள்ளன. பொன்னையா சகோதரர்களுக்கு இந்த மேளங்களில் நல்ல பயிற்சி கொடுப்பதற்காகவே இவை இயற்றப்பெற்றன. தஞ்சாவூர் சகோதரர்கள் நால்வரில் இருவர் கர்நாடக ஸங்கீதத்தில் பிரசித்திபெற்றனர் என்பதையும்

* உதாரணமாக 3, 4, 30, 34, 40, 41, 42, 44, 48, 49 ஆகிய விவாதி மேளங்களில் இயற்றப் பெற்ற க்ருதிகள் உள்ளன. இந்தப் பட்டியல் பூர்த்தியாகவில்லை.

இங்குக் குறிப்பிடவேண்டும். தஞ்சாவூர் அரண்மனையில் பொன்னையா சமஸ்தான வித்வான் ஆனார். அதோடு அவர் குறிப்பிடத்தக்க பல க்ருதிகளையும் இயற்றியிருக்கிறார். தம்முடைய ஆசிரியராகிய 'குருகுஹ'வுக்கு மரியாதை செலுத்தும் வகையில் ஒன்பது பாடல்களை இயற்றி இருப்பது குறிப்பிடத்தக்கது. வேங்கடமகியின் 9-வது மேளமாகிய பின்னஷட்ஜ இராகத்தில் பாடியுள்ள பாடலில் பொன்னையா அவர்கள் "நான் குருகுஹனின் சிஷ்யன்" என்று சொல்லுகிறார்.† வேங்கடமகியின் முப்பத்தைந்தாவது மேளமாகிய சைலதேசாக்ஷி என்ற இராகத்தில் அமைந்துள்ள ஒரு பாடலில் அவர் விவாதி மேளங்களைக் கையாளுவதில் உள்ள தமது திறமையை வியக்கத்தக்க முறையில் வெளிப்படுத்தியுள்ளார். தஞ்சாவூர் சகோதரர்களில் மற்றொருவராகிய வடிவேலுவோ நாட்டியக்கலையில் சிறந்து விளங்கினார். அவர் திருவாங்கூர் மஹாராஜாவின் சமஸ்தான வித்வானாக ஆனார். அவருடைய சாதனைகளை எல்லோரும் நன்கு அறிவர்.

ஸ்ரீ தியாகையரும் முத்துஸ்வாமி தீக்ஷிதரும் எப்பொழுதாவது சந்தித்தது உண்டா என்று ஸங்கீத ஆராய்ச்சியாளர்கள் அடிக்கடி கேட்கிறார்கள். இதைப்பற்றி உண்மையான சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் அவ்விருவரும் திருவையாற்றில் சந்தித்து இருக்கக்கூடும். தஞ்சாவூரில் இருக்கும்பொழுது தீக்ஷிதர் பக்கத்

† ஸ்ரீ குருகுஹமூர்த்திகி சிஷ்யுடையுன்னானா (பல்லவி)

திலுள்ள பல பிரசித்தமான கோயில்களுக்குச் சென்றதுண்டு. திருவையாறும் அவற்றுள் ஒன்று ரும். திருவையாற்றில் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள பிரணதார்த்திஹரர் பேரிலும், தர்ம ஸம்வர்த்தனிபேரிலும் அவர் க்ருதிகள் இயற்றியிருக்கிறார். தீக்ஷிதர் திருவையாற்றிலுள்ள க்ஷேத்ர பாலரைப் பற்றியும் பாடியுள்ளார். (நாயகி இராகத்தில் 'பிரணதார்த்திஹரம்'; மத்யமாவதி இராகத்தில் 'தர்மஸம்வர்த்தனி'; நாமதேசி இராகத்தில் 'நர்மதா', தேவக்ரிய இராகத்தில் 'ஸ்ரீ வடுகநாதா' ஆகிய க்ருதிகள் சில தீக்ஷிதரால் இயற்றப் பெற்றன) எனவே தீக்ஷிதர் கட்டாயமாகத் திருவையாற்றிற்குச் சென்றிருக்கத்தான் வேண்டும். அவர் ஸ்ரீ தியாகையரைச் சந்தித்திருக்கவும் கூடும். அவ்விருவருடைய சந்திப்பைப் பற்றி ஒரு சுவையான நிகழ்ச்சிக் குறிப்பு நமக்குக்கிடைத்திருக்கிறது. திருவையாற்றிலுள்ள கோயிலுக்கு முத்துஸ்வாமி தீக்ஷிதர் தெரிசனத்திற்காகச் சென்றார். அவர் அங்கு தேவி தர்மஸம்வர்த்தனியின் சந்நிதியில் அமர்ந்து அந்த அம்பிகையின் மீது தாம் புனைந்த மத்யமாவதி இராகக் கீர்த்தனையைப் பாடிக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் தியாகையரின் சிஷ்யர்களில் ஒருவர் அங்கு தற்செயலாக வந்தவர், தீக்ஷிதரின் பாட்டைக்கேட்டு அதிசயமுற்று, உடனே சென்று தமது குருவினிடம் தீக்ஷிதரைப்பற்றிக் குறிப்பிட்டார். அவ்வளவில் தியாகையர் முத்துஸ்வாமி தீக்ஷிதரைத் தமது வீட்

டிற்கு வரவேற்று அழைத்து வரும்படி அந்தச் சிஷ்யரை அனுப்பினார். தீக்ஷிதரும் அந்த அழைப்பினை ஏற்று, வந்த சிஷ்யருடன் தியாகை யர் வீட்டுக்குச் சென்றார். முத்துஸ்வாமி தீக்ஷிதர் தியாகையர் வீட்டை அடைந்தபொழுது அங்கு பெரிய உற்சவம் நடந்துகொண்டிருந்தது. தியா கையரோ நாள்தோறும் இராமாயண பாராயணம் செய்பவர். தீக்ஷிதர் அவருடைய வீட்டிற்குச் சென்ற சமயம் இராமபட்டாபிஷேக கட்டத்தில் தியாகையர் இருந்தார். தீக்ஷிதர் தமது சிஷ்யர் களுடன் அங்கு நுழைந்தபொழுது பஜனையில் ஈடு பட்டிருந்த அனைவரும் மரியாதையோடு எழுந்து நின்று அவரை வரவேற்றனர். தியாகையரும் தீக்ஷிதரை வரவேற்று அஞ்சலி செலுத்தினார். அதன்பின் தியாகையரும் அவரது சிஷ்யர்களும் அந்தச் சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமாக 'கொலு வையுன்னாடே' என்ற பைரவி இராகக்கீர்த்தனை யைப் பாடினார்கள். அதன் பிறகு தியாகையரின் வேண்டுகோளுக்கு இணங்கி முத்துஸ்வாமி தீக்ஷி தரும் அவரது சிஷ்யர்களும் "மாமவபட்டாபி ராம" என்ற மணிரங்கு இராகக் கீர்த்தனையைப் பாடினார்கள். அந்த ஸங்கீதத்தைக்கேட்ட எல் லோரும் மெய் சிலிர்த்தனர். ஸங்கீத மும்மூர்த்தி களில் இருவர் ஒரே இடத்தில், ஒரே நிகழ்ச்சியில் பாடுதலைக்கேட்கும் வாய்ப்புக்கிடைப்பது அபூர்வ மில்லையா? முடிவில் ஸமாராதனை நடந்தது. அதன் பின்னர் தீக்ஷிதர் தியாகையரிடம்

விடை பெற்றுச்சென்றுர்.* இந்த நிகழ்ச்சி நடந்திருக்குமா என்று நாம் சந்தேகப்படத் தேவையே இல்லை. இதைப் பற்றித்தக்க சான்றுகள் கிடைக்கவில்லை ஆயினும் இது நடந்திருக்கக் கூடும் என்றே நாம் யூகிக்கலாம்.

மற்ருெரு நிகழ்ச்சிக்குறிப்பு தீக்ஷிதரின் குடும்பத்தில் வழங்கும் கர்ணபரம்பரைச் செய்தியினின்று கிடைக்கிறது. 1844-ஆம் ஆண்டளவில் சுப்பராம தீக்ஷிதர் ஏழுவயதுப் பையனுக இருந்தபொழுது அவருடைய உறவினர்களுடன் திருவையாற்றிற்குச் செல்ல நேர்ந்தது. அங்கு, சிறுவனுன சுப்பராம தீக்ஷிதர் தியாகையரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுர். அப்பொழுது தியாகையர் 1834-ம் ஆண்டில் காலமான முத்துஸ்வாமி தீக்ஷிதரைப் பற்றிக் குறிப்பிட்டுக் கண்ணீர் சிந்தியவாறே அவருடைய பெருமைகளை எடுத்துக் கூறினுர். பிறகு தியாகையர் அந்தச் சிறுவனை வாழ்த்தி, கற்கண்டு பிரசாதம் கொடுத்தார்.

இந்தக் காலத்தில் தஞ்சையை ஆண்டு வந்தவர் சரபோஜிமன்னர் ஆவார். அவர் சிறந்த ஸங்கீத ரஸிகர். கலைகளை நன்கு ஆதரித்தவர். அந்த அரசருடைய அத்யந்த நண்பர் சியாமாசாஸ்திரிகள். சியாமாசாஸ்திரிகள் வசித்து வந்த காமாக்ஷியம்மன் கோயில் அக்ரஹாரத்திலுள்ள வீட்டிற்கு சரபோஜிமன்னர் சென்று, சியாமா

* இந்தச் சுவையான நிகழ்ச்சியை, காலஞ்சென்ற ஸி. ஆர். ஸ்ரீனிவாச அய்யங்கார் அவரது நூலில் குறிப்பிட்டிருக்கிறுர்.

சாஸ்திரிகளுக்கு மரியாதை செலுத்துவது உண்டு என்று சொல்லப்படுகிறது. இந்த நாளில் தீக்ஷிதருடைய மனைவி, சியாமா சாஸ்திரிகளின் மனைவியை அடிக்கடி சென்று காண்பது உண்டு என்றும் சொல்லப்படுகிறது. இவ்வாறு ஒரு முறை சந்தித்தபொழுது, தீக்ஷிதரின் மனைவியாரிடம், சியாமா சாஸ்திரிகளின் மனைவி "தஞ்சை மன்னர் உன் கணவருடைய பாட்டைப் புகழ்ந்து ரஸிக்கிறார் என்றும், உன் கணவர் அரசரை நேரிற் சென்று பார்த்தால் அரசர் அவருக்கு, கனகாபிஷேகம் செய்து மரியாதை செலுத்துவார் என்றும் என் கணவர் கூறுகிறார்" என்று கூறினாள். இதைக்கேட்ட தீக்ஷிதரின் மனைவியார் மனமகிழ்ச்சியுற்று வீட்டுக்குத் திரும்பியவுடன் தன் கணவரிடம் "இந்த ஊர் மன்னர் தங்களுடைய ஸங்கீதத்தைப் பெரிதும் விரும்புகிறார் என்றும், உங்களுக்கு மரியாதை செய்ய ஆசைப்படுகிறார் என்றும் எல்லாரும் சொல்லுகிறார்கள். நீங்கள் ஏன் மன்னரைச் சென்று பார்க்கக்கூடாது? நீங்கள் அவரைப் பார்த்தால் அவர் உங்களுக்கு சால்வைகளும், பட்டாடைகளும், தங்க நகைகளும், வெள்ளிப் பாத்திரங்களும், பணமும் ஏராளமாகக் கொடுப்பார். அவற்றைப்பெற்று நாம் வாழ்நாள் முழுவதும் வளமாக வாழலாம்" என்றாள். அவ்வுரைகேட்ட தீக்ஷிதர் "உண்மை அறியாதவளே! அரசனைப் பார்ப்பதென்றால் என்ன அர்த்தம் தெரியுமா? அவர் மீது அவரைப் புகழ்ந்து ஒரு பாட்டு இயற்றிக்கொண்டுதான் அவரிடம் செல்ல

வேண்டும் என்பது பொருள். மனிதனைப் புகழ்ந்து நான்பாடவேண்டும் என நீ விரும்புகிருயா?" எனக்கேட்டார். அதற்கு அவர் மனைவியார்—

"அரசனைப் பாடுவதில் என்ன தவறு? உங்கள் தந்தையார் பாடவில்லையா" என்ருர். உடனே தீக்ஷிதர் "அதை நான் செய்யமாட்டேன். எனக்குச் செல்வம் வேண்டுமாஞல் மனிதனைக் கேட்க மாட்டேன்; லக்ஷ்மி தேவியையே பிரார்த்திப்பேன். அவ்வாறு பிரார்த்தித்தால் அந்த தேவி எனக்கு, அழிந்து போகக்கூடிய இந்த உலகத்துச் செல்வமல்லாமல், அழியாத செல்வமாகிய பேரின்பச் செல்வத்தையும் அருளுவாள். இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய செல்வத்தை லக்ஷ்மி தேவி தம் பக்தர்களுக்குத் தருவாள்" என்று சொல்லிவிட்டார். இந்தப் பதிலைக் கேட்ட தீக்ஷிதரின் மனைவியாருக்குத் திருப்தி உண்டாகவில்லை. மிக்க அதிருப்தியுடன் அப்பாற் சென்றுவிட்டாள். ஆனல் தன் மனைவி இவ்வாறு நடந்துகொண்டதைக் கண்ட தீக்ஷிதர் உணர்ச்சி வசப்பட்டார். அந்த அம்மையார் அதுவரை அப்படி நடந்து கொண்டதே இல்லை. அந்நிலையில் தீக்ஷிதர் லக்ஷ்மி தேவியின் பேரருளை விரும்பி "ஹிரண்மயீம் லக்ஷ்மீம்" என்னும் லலிதா இராக க்ருதியை ஸ்ரீ ஸூக்த முறையில் இயற்றிப் பாடினுர். அந்த க்ருதியில் அவர் "நான் எப்பொழுதும் லக்ஷ்மி தேவியையே பிரார்த்திப்பேன். எளிய மனிதர்களிடம் நான் செல்லமாட்டேன். அந்த லக்ஷ்மிதேவி எனக்கு

அழியாத பெருஞ் செல்வத்தை அருள்வாள்”* என்று சொல்லி இருக்கிறார்.

இவ்வாறு பாடிய பிறகு, தீக்ஷிதர், பக்கத்திலுள்ள ஸ்ரீ ராஜகோபாலஸ்வாமி கோயிலுக்குச் சென்று அந்த க்ருதியை மஹாலக்ஷ்மி தேவியின் சந்நிதியில் பாடினார். அன்றைய இரவு அவர் ஒரு கனவு கண்டார். அக்கனவில் லக்ஷ்மிதேவி ஸர்வாபரண பூஷிதையாய்க் காட்சி கொடுத்து, “உனக்கு வறுமையே இல்லை” என்று கூறி மறைந்தார். விழித்தெழுந்த தீக்ஷிதர் இந்தக் கனு நிகழ்ச்சியைத் தன் மனைவியிடம் சொன்னார். அந்த அம்மையார் அதற்குள் சாந்தமடைந்து தன் செயலுக்கு வெட்கி, தன்னுடைய அறியாமையால் பேசியவற்றைப் பொறுத்து மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டாள். அப்பொழுது தீக்ஷிதர் தன்யாசி இராகத்தில் ‘மங்கள தேவதாயா’ என்னும் க்ருதியை இயற்றினார். அதில் அவர் ‘‘ஹே லக்ஷ்மிதேவியே! வறுமை முதலிய தீமைகளை எல்லாம் போக்குபவளே! நீ குருகுஹ பக்தர்களிடம் பேரருள் காட்டுகிறாய். உன்னால் நான் பெருமதிப்பைப் பெற்றேன்” என்று குறிப்பிட்டிருக்கிறார்.†

* ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஸதாபஜாமி
ஹீனமான வாச்ரயம் த்யஜாமி
ஸ்திரதர ஸம்பத் ப்ரதம்

† மங்களதேவதயா த்வயா மானிதோஹம்
ஹரித்ராகுங்கும வஸ்த்ராலங் க்ருதவிக்ரஹயா
தாரித்ரிய துக்காதிமூர்த்தன் யாசிவநிக்ரஹயா

இங்கே மேற்கோள் காட்டப்பெற்றுள்ள இரண்டு க்ருதிகளும், முத்துஸ்வாமி தீக்ஷிதரின் குடும்பத்தில் நடந்த இந்த நிகழ்ச்சிக்குச் சான்று பகரும். மனிதனைப் பாடமறுத்த குளிக்கரை நிகழ்ச்சியும், அரசனைப் புகழ்ந்து பாடமறுத்த இந்த நிகழ்ச்சியும் ஒத்துவிளங்குவதைக் காண்கிறோம்.

---

வரலக்ஷ்மியா ஹரிஹரய குருகுஹ
பக்தானு க்ரஹயா.

[இங்கு குறிப்பிடப்பெற்றுள்ள 'குருகுஹ பக்தா' என்னும் தொடர் உன்னுடைய பக்தனாகிய குருகுஹன் என்ற பொருளும் தரும்.]

# 6

## மதுரையும் எட்டையபுரமும்

நாலைந்து ஆண்டுகள் தஞ்சாவூரில் தங்கிய பிறகு முத்துஸ்வாமி தீக்ஷிதர் திருவாரூருக்குத் திரும்பிச் சென்றார். அவருடைய வருகை திருவாரூரில் பல ஸங்கீத வித்வான்களையும் பல அறிஞர்களையும் கவர்ந்தது. அவர்கள் அடிக்கடி தீக்ஷிதரின் இல்லத்திற்கு வரத் தொடங்கினர். நாலைந்து வருஷங்களுக்குப் பிறகு அவருடைய திருவாரூர் வீட்டில் ஸங்கீத ஒலியும், வேதபாராயண ஒலியும் நிறைந்தொலித்தன. இவ்வாறு இருந்தாலும் தீக்ஷிதருடைய மனத்தினுள் ஒரு கவலை இருந்து வந்தது. அது அவருடைய சகோதரர்களின் க்ஷேமத்தைப் பற்றியதாகும். சகோதரர்களை அவர் பார்த்துச் சில வருஷங்கள் ஆகிவிட்டன. அவர்களோடு தொடர்பே நின்று போயிருந்தது. அவர்களுடைய க்ஷேமலாபங்களை அறிவதற்காகப் பல விதங்களில் விசாரித்துப் பார்த்தார். சிறிது காலத்திற்குப் பிறகு அவருடைய சகோதரர்களில் ஒருவராகிய சின்னஸ்வாமி இறந்துபோன செய்தி அவருக்குக் கிடைத்தது. அதனால் பெருந்துயரமுற்ற தீக்ஷிதர் உடனே மதுரைக்குச் சென்று தன்னுடைய மற்றொரு சகோதரர் பாலுஸ்வாமியைக் காண விரும்பினார். ஆகவே தம்முடைய சிஷ்யர்களில்

ஒருவராகிய சுப்ரமணிய அய்யருடன் மதுரைக்குப் பயணமானார்.

முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய கற்பனையில் மதுரைமா நகரம் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. நம் நாட்டிலுள்ள புராதனமான நகரங்களுள் மதுரையும் ஒன்று. ஹாலாஸ்ய க்ஷேத்திரம் என்ற பெயரில் அது புண்ணிய ஸ்தலமாகக் கருதப் பெறுகிறது. அவ்வூரில் உள்ள கோயிலில் சுந்தரேசப் பெருமானும், மீனாக்ஷியம்மையும் எழுந்தருளியுள்ளார்கள். மதுரைமா நகரை ஆண்ட பாண்டிய மன்னர்களின் வீரச் செயல்களும் சாதனைகளும் அவர்களுக்கு அகில இந்தியப் புகழை தேடித் தந்துள்ளன.* அத்தகைய பாண்டியர்களின் தலைநகரமாக மதுரை விளங்கியது. பாரத நாட்டின் புராதனப் பண்பாட்டின் நிலைக்களமாக விளங்கியது அந்நகரம். பாண்டிய மன்னர்களின் காவல் தெய்வமாகப் போற்றப்பெறும் அகஸ்திய முனிவரால் அந்நகரம் தூய்மை பெற்றது. நெடுங்காலமாக மதுரைக்குச் செல்லவேண்டும் என்னும் ஆர்வம் தீக்ஷிதருக்கு இருந்தது. தம்முடைய சகோதரர்களை முன்னேற்பாடாகத் தான் மதுரைக்கு அனுப்பினார். ஆனால் இப்பொழுது மதுரைக்குச் செல்லும் சூழ்நிலை துயரம் நிறைந்ததாக இருந்தது. எனினும் மதுரையிலுள்ள கோயில்களுக்குச் சென்று ஆங்கு கோயில்

* காளிதாஸன் புனைந்துள்ள ரகுவம்சத்தின் 4, 6 காண்டங்களைக் காண்க.

கொண்டுள்ள மூர்த்திகளைப் புகழ்ந்து பாடவேண்டும் என்ற ஆர்வம் அவர் மனத்தைவிட்டு அகலவில்லை.

மதுரையை நெருங்கிய தீக்ஷிதர் "வைகை" என்று பிரபலமாக வழங்கப்பெறும் வேகவதி ஆற்றின் கரையில் ஒரு கோயிலைப் பார்த்தார். உடனே அவர் அங்கு கோயில் கொண்டுள்ள விநாயகரைப் புகழ்ந்து பிலஹரி இராகத்தில் 'ஏகதந்தம் பஜேஹம்' என்ற க்ருதியைப் பாடினார். இந்த க்ருதியில் அவர் விநாயகரை ஹாலாஸ்ய க்ஷேத்திரத்தில் உள்ள வேகவதியாற்றின் கரையைப் பொலியச் செய்பவர் * என்று வர்ணித்துள்ளார். அதன்பிறகு தீக்ஷிதர் மதுரை மீனாக்ஷியம்மன் கோயிலுக்குச் சென்று தெரிசித்தபின்னர் அந்த அம்பிகையைப் புகழ்ந்து பல க்ருதிகளைப் பாடினார். அவ்வாறு பாடிய க்ருதிகளில் கடைசி க்ருதி வராளி இராகத்தில் அமைந்த 'மாமவ மீனாக்ஷி' என்ற க்ருதியாகும். இவ்வாறு தீக்ஷிதர் பாடிக்கொண்டிருக்கும்போது கோயில் அர்ச்சகர்களும் பக்தர்களும் ஒவ்வொருவராக அங்கு வந்து கூடினர். அப்பொழுது அங்கு வந்திருந்த அர்ச்சகர்களில் ஒருவர் தீக்ஷிதரைப் பார்த்து "ஸ்வாமி! இந்த க்ருதிகளை திருவாரூரிலிருந்து வந்திருந்த இரண்டு ஸங்கீத வித்வான்கள் பாட நாங்கள் முன்பு கேட்டிருக்கிறோம். அவையாவும் தீக்ஷிதர் க்ருதிகள். தாங்களும் திருவாரூரிலிருந்துதான்

---

* ஹாலாஸ்ய க்ஷேத்ர வேகவதீதடவிஹாரம்.

வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டார். அவ்வுரை கேட்ட தீக்ஷிதரின் சிஷ்யர் "இவர்தான் எனது குரு. இந்தக் கீர்த்தனைகளை எல்லாம் இயற்றிய ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரும் இவரே" என்றார். அதைக் கேட்டவுடனே அர்ச்சகர்களும் பக்தர்களும் சேர்ந்து சாஷ்டாங்கமாக தீக்ஷிதரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அப்பொழுது தீக்ஷிதர் திருவாரூரிலிருந்து வந்து தம் கீர்த்தனைகளைப் பாடிய இரண்டு வித்வான்களையும் பற்றி விசாரித்தார். அந்த இருவரில் ஒருவராகிய சின்னஸ்வாமி இறந்துவிட்டார் என்றும், மற்றொருவரான பாலுஸ்வாமி தம் சகோதரர் இறந்த துயரம் தாங்கமாட்டாமல் இராமேச்வரத்திற்கு யாத்திரை சென்றுவிட்டார் என்றும், அங்கு யாத்திரை முடிந்ததும் திரும்பவும் மதுரைக்கு வருவதாக அவர் சொல்லிச் சென்றிருக்கிறார் என்றும் அங்குள்ளவர்கள் தீக்ஷிதருக்குச் சொன்னார்கள். இவ்வாறு சொல்லிய எல்லோரும் தீக்ஷிதரை மதுரையிலேயே தங்கி இருக்குமாறு கட்டாயப்படுத்தினார்கள். அவரும் தம் தம்பியாகிய பாலுஸ்வாமி திரும்பி வரும்வரையில் மதுரையில் இருக்கச் சம்மதித்தார்.

மதுரையில் தங்கி இருந்த காலத்தில், தீக்ஷிதர் ஸ்ரீ மீனாக்ஷியம்மன் கோயிலுக்குத் தினமும் செல்லுவது வழக்கம். அக்கோயிலில் உள்ள மூர்த்திகள் பேரில் அவர் பல க்ருதிகளை இயற்றியிருக்கிறார். ஸ்ரீ மீனாக்ஷி அம்மனைப்பற்றி எட்டு விபக்திகளில்

எட்டு க்ருதிகளை அவர் இயற்றியுள்ளார். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை "மதுராம்பாஸம்ரக்ஷது" என்னும் தேவக்ரிய இராகக்ருதி; "மதுராம்பிகாயா" என்னும் அடாணு இராகக்ருதி; "ஸ்ரீ மீனும்பிகாயா" என்னும் தேவகாந்தாரி இராக க்ருதி; "ஸ்ரீ மதுராம்பிகாயாஸ்தவ" என்னும் பேகட இராகக்ருதி ஆகியவை ஆகும். "மதுராம் பாம் பஜரே" என்ற அவருடைய க்ருதி 'ஸ்தவ ராஜா' என்னும் அபூர்வ இராகத்தில் அமைந்துள்ளது.

மேலே குறிப்பிடப்பெற்ற எட்டு க்ருதிகளைத் தவிர ஸ்ரீ மீனுக்ஷியம்மன்மீது வேறுபல க்ருதிகளையும் முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றியுள்ளார். அவற்றுள் மிகப்பிரசித்தமானவை கமகக்ரிய இராகத்தில் அமைந்துள்ள 'மீனுக்ஷி மேமுதம் தேஹி' என்னும் க்ருதியும் வராளி இராகத்தில் 'மாமவமீனுக்ஷி'; மோஹன இராகத்தில் 'காதம்பரிப்ரிய'; கௌரி இராகத்தில் 'ஸ்ரீ மீனுக்ஷி கௌரி' என்பவையும் ஆகும்.

ஸ்ரீ சுந்தரேச்வரரைப்பற்றி தீக்ஷிதர் இயற்றியுள்ள க்ருதிகள் பல. அவற்றுள் சுத்தவஸந்த இராகத்தில் அமைந்த 'ஸோமசுந்தரேச்வரம்' என்னும் க்ருதியும், கன்னட இராகத்தில் அமைந்த 'பாலயமாம் பார்வதீச' என்னும் க்ருதியும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. சுத்தவஸந்த என்பது ஒரு அபூர்வ இராகம். அந்த இராகத்தில் அமைந்த க்ருதி இது ஒன்றுதான். கன்னட இராக

மும் சுத்த வஸந்த இராகமும் பெரும்பாலும் ஒன்று போல் ஒலிப்பவை. ஸங்கீதத்தில் நுட்பமான புலமை பெற்றவர்களால்தான் இவ்விரண்டு இராகங்களையும் வேறுபாடு உணர்ந்து கையாள முடியும். இந்த இரண்டு இராகங்களின் வேறு பாடுகளைத் தெளிவாகக் காண்பித்துக் கையாள் வதற்கு நுட்பமான ஸங்கீதத் திறமை வேண்டும். இவ்விரண்டு க்ருதிகளும் அந்த இரண்டு இராகங் களின் தனித்தன்மைகளை எல்லாம் வேறுபடுத்திக் காட்டும்வகையில் அமைக்கப் பெற்று உள்ளன. சுந்தரேச்வரரைப் பற்றிய க்ருதிகளில் இந்த இரண்டு இராகங்களின் லக்ஷணங்களை நன்கு விளக்கவேண்டும் என்பதற்காகவே இந்த க்ருதி களை தீக்ஷிதர் இயற்றியிருக்கிறார்.

இந்த இடத்தில் தீக்ஷிதர் கையாண்டுள்ள மற்றொரு அபூர்வ இராகமாகிய 'சௌவீரம்' என்பதையும் குறிப்பிடவேண்டும். மதுரைக்கு அருகில் புஷ்பவனேச்வரம் என்றொரு க்ஷேத்திரம் உண்டு. அந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யுள்ள ஈச்வரனைப்பற்றி தீக்ஷிதர் 'ஸரஸஸௌவீர' என்னும் க்ருதியை இயற்றி இருக்கிறார். அந்த க்ருதி அபூர்வ இராகமாகிய சௌவீரத்தில் அமைந் துள்ளது. இவற்றோடு பிரபலமான இராகங்களிலும் தீக்ஷிதர் மதுரையில் பலக்ருதிகளை இயற்றி இருக் கிறார். சங்கராபரண இராகத்தில் 'ஸுந்தரேச் வராய' என்னும் க்ருதியும், தர்பார் இராகத்தில் 'ஹாலாஸ்யநாதம்' என்னும் க்ருதியும் மதுரை யில் இயற்றப்பெற்றவை ஆகும்.

இவ்வாறு சிலமாதங்கள் மதுரையில் தங்கிய பிறகு தீக்ஷிதர் இராமேச்வரத்திற்கு யாத்திரை செல்ல முடிவுசெய்தார். தம்முடைய தம்பியாகிய பாலுஸ்வாமியைப்பற்றி ஏதேனும் செய்தி கிடைக்கக் கூடும் என்ற எண்ணமும் அவருக்கு இருந்தது. எனவே அவர் முதலில் மதுரையிலிருந்து அழகர் கோயில் சென்றார். அந்த ஸ்தலத்தில் பிரசித்தி பெற்ற விஷ்ணு கோயில் ஒன்று உள்ளது. அங்குள்ள பெருமாள் பெயர் சுந்தரராஜர். அழகர் கோயில் சுந்தரராஜப் பெருமாளைப்பற்றிப் புகழ்ந்து தீக்ஷிதர் இயற்றியுள்ள 'ஸ்ரீ ஸௌந்தரராஜம்' என்னும் க்ருதி அவருடைய ஸங்கீத மேதா விலாசத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாய் அமைந்துள்ளது. அது இப்பொழுது காமவர்த்தனி என வழங்கும் 'ராமக்ரிய' இராகத்தில் அமைந்தது. அந்த இராகத்தின் முழு ரூபத்துடன் அந்த க்ருதி விளங்குகிறது. அந்த க்ருதியில் அழகர் கோயில் மலையில் விழும் அருவியைப்பற்றிய குறிப்பு உள்ளது. அந்த மலையின்மீதுள்ள கோயிலுக்குப் பக்கத்தில் வீழும் அந்த அருவிக்கு 'நூபுரகங்கை' எனப் பெயர். இத்துடன் அந்த மலையில் தவம் செய்த மண்டுக முனிவரைப்பற்றியும் அவருக்கு இறைவன் அருள்புரிந்ததுபற்றியும் இந்த க்ருதியில் கூறப்பெற்றுள்ளது. தென்னாட்டிலுள்ள சில கோயில்களைப்பற்றி கர்ணபரம்பரைக் கதைகளோ, புராணக் கதைகளோ இல்லை. அப்படி இருந்தாலும் தீக்ஷிதர் தம்முடைய க்ருதிகளில் இப்படிப்

பட்ட கதைகளைக் குறிப்பிட்டிருக்கிறார். அதனால் மக்கள் அந்த க்ருதிகளை விரும்பிப்பாடினர். எனவே தீக்ஷிதரின் க்ருதிகள் எல்லாம் 'யாத்ரீகர்களின் பைபிள் நூல்' என்று சொல்லுவது பொருந்தும். மேலும் அவை ஆராய்ச்சி செய்வோருக்கு விலைமதிப்பற்ற செய்திகளை வழங்கும் சுரங்கங்கள் என்னலாம்.

பிறகு தீக்ஷிதர் இராமேச்வரத்திற்குப் பயணமானார். அங்கு அவர் பாடிய க்ருதிகளில் மிகவும் பிரசித்தி பெற்றது ராமக்ரிய இராகத்தில் அமைந்த 'ராம நாதம் பஜேஹம்' என்ற க்ருதியாகும். தர்ப்பசயனத்தில் அவர் புகழ் பெற்ற க்ருதியாகிய 'ஸ்ரீராமம் ரவிகுலாப்தி ஸோமம்' என்ற க்ருதியைப் பாடினார். இந்தக் கீர்த்தனை அபூர்வ இராகமாகிய நாராயண கௌளையில் அமைந்துள்ளது. அந்த இராகத்தில் அமைந்துள்ள மிகச் சிறந்த க்ருதி இதுதான் என்று சொல்லி விடலாம். அவர் இராமேச்வரத்தில் இருக்கும் பொழுது யாரோ ஒரு ஸங்கீத வித்வான் திருவாரூரிலிருந்து அங்கு வந்திருந்ததாகவும், அவருடைய ஸங்கீதத்தை அந்த தற்செயலாக யாத்திரை வந்திருந்த எட்டையபுர மஹாராஜா கேட்டுப் பெரிதும் ரசித்ததுடன் அவரைத் தம்மோடு அழைத்துச் சென்று தமது சமஸ்தானத்தின் ஸங்கீத வித்வானாக அமைத்துக் கொண்டதாகவும் தீக்ஷிதர் கேள்விப்பட்டார். இதைக் கேள்வியுற்ற உடனே அந்த வித்வான் தமது சகோதரன் பாலுஸ்வாமியாகத்தான் இருக்கவேண்டும் என முடிவு செய்து,

தம்பியைக் காணவேண்டும் என்ற ஆர்வத்துடன் எட்டையபுரம் நோக்கிப் பயணம் தொடங்கினர்.

அவர் செல்லும் வழியில் சாத்தூர் என்னும் ஊரினை அடைந்தார். முத்துஸ்வாமி தீக்ஷிதர் அந்த ஊர்க்கோயிலில் எழுந்தருளிய வெங்கடேசப் பெருமானை தெரிசிக்கும் பொழுது அக்கோயிலின் வைஷ்ணவ அர்ச்சகர்கள் கிருஷ்ண பரமாத்மாவைப் பற்றிய தமிழ்ப் பிரபந்தங்களைப் பாராயணம் செய்யக் கேட்டார். அது அவருடைய உள்ளத்தில் ஆழ்ந்த சிந்தனையை உண்டாக்கியது. அவர் பக்கத்திலுள்ள சத்திரத்திற்குச் சென்று ஓய்வு கொண்டார். அங்கு அர்ச்சகர்கள் பலர் கூடி ஏதோ ஒரு திட்டத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். ஏதோ ஒரு பெரிய இடத்துத் திருமணத்துக்குச் செல்லுவது பற்றிய திட்டமாக அது இருந்தது. யாருடைய திருமணம் நடக்கப் போகின்றது என்று தீக்ஷிதர் அவர்களைக் கேட்டார். அதற்கு அவர்கள் "ஸ்வாமி! அது உங்களுக்குத் தெரியாதா? எட்டையபுர மஹாராஜா தமது சமஸ்தான ஸங்கீத வித்வானின் திருமணத்தை நாளைக்கு மறு நாள் கோலாஹலமாக நடத்தி வைக்கப் போகிருர். நாங்கள் எல்லோரும் அங்கு செல்லப் போகிறோம். அங்கு எங்களுக்கு உயர்ந்த பூரி தக்ஷிணை கிடைக்கும்" என்று மிக உற்சாகமாகச் சொன்னார்கள். உடனே தீக்ஷிதர் 'அந்த ஸங்கீத வித்வான் பெயர் என்ன' என்று கேட்டார். அதற்கு அவர்கள் 'அவர் யாரோ

திருவாரூரிலிருந்து வந்த தீக்ஷிதர். அவ்வளவு தான் எங்களுக்குத் தெரியும்' என்றனர். தீக்ஷிதர் உடனே விரைந்து 'அவர் பெயர் பாலுஸ்வாமி தீக்ஷிதரோ' என்று ஆர்வத்துடன் கேட்டார். அதற்கு 'ஆம்' என்று கூறிய அர்ச்சகர்களில் ஒருவர் 'அந்தப் பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும்' என்று வினவினர். முத்துஸ்வாமி தீக்ஷிதர் அதற்கு 'ஸ்வாமி! அவனுடைய மூத்த சகோதரன் நான். நானும் எட்டையபுரம் தான் போக விரும்புகிறேன்' என்றார். தீக்ஷிதர் யார் என்பதை உணர்ந்து கொண்ட அர்ச்சகர்கள் பெருமகிழ்ச்சியுடன் அவரையும் தங்களுடன் அழைத்துச் செல்ல இசைந்தனர். தொடர்ச்சியாக நிகழ்ச்சிகள் மகிழ்ச்சி தரும் வகையில் நடந்து வருவதைக் கண்ட தீக்ஷிதர் அவையாவும் அவ்வூர் வெங்கடேச்வரரின் அருளினாலேயே என முடிவு செய்தார். அதன் பிறகு அவர் மேக ரஞ்சனி இராகத்தில் அந்தப் பெருமாளைப் புகழ்ந்து "வேங்கடச்வர யாதவ பூபதீம் ஆச்ரயேஹம்" என்னும் க்ருதியைப் பாடினார். அதன்பிறகு அர்ச்சகர்களுடன் எட்டையபுரம் நோக்கிப் பயணமானார்.

அது நல்ல கோடை காலம். சூரிய வெப்பம் தாங்க முடியாததாக இருந்தது. எட்டையபுரத்திற்குச் செல்லும் வழியோ சூரிய வெப்பத்தினால் பூமி எல்லாம் காய்ந்து கருகி, வெடிப்புற்றிருந்தது. அந்த வழியில் பயணம் செய்வது தீக்ஷிதருக்கு மிகவும் சிரமமாக இருந்தது. வழியில் அவருக்கு

ஒரு முறை மிகுந்த தாகம் ஏற்பட்டது. உடனே அவர் பக்கத்திலுள்ள ஒரு கிராமத்தின் எல்லையில் சற்றுத் தங்கும்படியாக மற்றவர்களைக் கேட்டுக் கொண்டார். அவர்களும் அதற்கிசைந்து அங்கிருந்த ஒரு தோப்பில் தங்கினர். தீக்ஷிதர் அங்கிருந்த மர நிழலில் அமர்ந்தார். அந்தத் தோப்பு, கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெரிய மனிதருக்குச் சொந்தமானது. தெய்வாம்சம் கொண்ட ஒரு ஸங்கீத வித்வான் தம்முடைய தோப்பில் தங்குவதை அந்தத் தனவந்தர் பெரும் பாக்கியமாகக் கருதினர். ஆகவே அவர் தோப்புக்கு விரைந்து வந்து தீக்ஷிதருக்கு மரியாதை செலுத்தி குடிநீர் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்தார். நீர் வேட்கை தணிந்த தீக்ஷிதர் அந்தப் பெரிய மனிதரை நோக்கி "இந்தப் பக்கத்தில் ஏன் இவ்வளவு வறட்சி? தண்ணீர் கிடைப்பது ஏன் இவ்வளவு அரிதாக இருக்கிறது?" என்று கேட்டார். அதற்கு அந்தச் செல்வர் பல வருஷங்களாக மழையே பெய்யவில்லை என்றும், அதனால் எல்லா இடங்களும் வற்றி வறண்டு போய் விட்டன என்றும், அப்பகுதி மக்கள் படும் தொல்லைக்கு எல்லையே இல்லை எனவும் கூறினர். இதைக் கேட்ட தீக்ஷிதர் வெகுவாக மனமுருகினர். அவர் உடனே அங்கு அருகில் இருந்த ஒரு கோயிலுக்குச் சென்று விசேஷ பூஜை செய்து, தேவியை ப்ரீதி செய்வதற்காக 'ஆனந்தாம்ருதகர்ஷணி' என்னும் பிரபலமான க்ருதியைப் பாடினர். அந்த க்ருதியில்

அவர் "தேவியே! நீ அருளின் இருப்பிடம். இந்தப் பகுதியில் மக்களுக்கு மழை பொழிய வேண்டும் என்பதற்காக உன்னை வேண்டுகிறேன். உடனே இங்கு மழை பொழியச்செய்! மழை பொழியச் செய்!! மழை பொழியச் செய்"!!!* என்று வேண்டியிருக்கிறார். இந்தப் பாடலை முடித்தவுடனே என்ன ஆச்சரியம்! நீல வானத்தில் எங்கிருந்தோ கருமேகங்கள் வந்து கூடின. மிகப் பெருமழையும் பெய்தது. அந்தப் பகுதி மக்கள் பாத்திராத அளவு பெரிய மழை அப்பொழுது பொழிந்தது ‡

மேலே குறிப்பிடப்பெற்ற க்ருதி அம்ருதவர்ஷிணி இராகத்தில் அமைந்துள்ளது. இந்தப் புதிய இராகத்தைத் தோற்றுவித்துப் பிரபலமடையச் செய்தவர் முத்துஸ்வாமி தீக்ஷிதரே ஆவர். இவருக்கு முன்பு இந்த இராகத்தில் யாரும் க்ருதிகளை இயற்றியதாகவோ, இதன் லக்ஷணங்களை வெளியிட்டதாகவோ தெரியவில்லை. பிற்காலத்தில் இந்த இராகம் பெரிதும் பிரபலமாகியது. முத்தையா பாகவதர் இந்த இராகத்தில் இயற்றி

---

* ஆனந்தாம்ருதாகர்ஷிணி அம்ருதவர்ஷிணி ஹராதி பூஜிதே சிவே பவானி * * *

ஸானந்தஹ்ருதய நிலயே ஸதயே—ஸத்ய: ஸுவ்ருஷ்டி ஹேதவேத்வாம் ஸந்ததம் சிந்தயே அம்ருதேச்வரி ஸலிலம் வர்ஷய வர்ஷய

‡ இந்த நிகழ்ச்சி பற்றி அந்த கிராமத்தில் கர்ண பரம்பரைச் செய்தி இன்றும் வழங்கி வருகிறது; மேலும் தீக்ஷிதர் குடும்பத்தினரும் இதைப் பற்றிச் சொல்லுகின்றனர். (எட்டையபுரத்தில் 1904ஆம் ஆண்டு தெலுங்கு மொழியில் வெளியிடப்பெற்ற ஸங்கீதஸம்ப்ரதாய ப்ரதர்சினி என்னும் நூலின் இரண்டாம் பாகத்தில் 1223ஆம் பக்கத்தை நோக்குக.)

யுள்ள 'ஸுதாமயீ' என்னும் கீர்த்தனையோடு வேறு பல பாடல்களும் பிற்காலத்தில் தோன்றி யுள்ளன. ஹம்ஸத்வனி இராகத்தைத் தோற்று வித்தவர் இராமஸ்வாமி தீக்ஷிதர் என்பதைப் போலவே, அம்ருதவர்ஷணி இராகத்தை முத்துஸ் வாமி தீக்ஷிதர் தோற்றுவித்தார் என்று பொருத்த மாகச் சொல்லலாம்.

மழை நின்ற பிறகு தீக்ஷிதர் மற்றையோருடன் எட்டையபுரப் பயணத்தைத் தொடர்ந்தார். அதற் குள்ளாக அர்ச்சகர்கள் சிலர் முன்னதாகவே விரைந்து சென்று தீக்ஷிதருடைய வருகையை எட்டையபுரத்திற்கு அறிவித்தனர். அச்செய்தியை அறிந்த பாலுஸ்வாமி தீக்ஷிதரும் எட்டையபுர மன்னரும் பேரின்பமும் பெருமகிழ்ச்சியும் அடைந் தனர். தீக்ஷிதரை வரவேற்பதற்கு மஹாராஜா, ஏற்பாடுகளைச் செய்துவிட்டு பாலுஸ்வாமி தீக்ஷித ரோடு எட்டையபுர நகர வாயிலில் தீக்ஷிதர் வருகையை எதிர்நோக்கி இருந்தனர். தீக்ஷிதர் அங்கு வந்தவுடனே மஹாராஜா அவரைப் பூர்ண கும்பத்துடன் வரவேற்றார். அதன் பிறகு சகோ தரர்கள் இருவரும் தமக்கென்று ஏற்பாடு செய்யப் பெற்றிருந்த வீட்டுக்குச் சென்றனர். அவர்களு டைய சந்திப்பு உள்ளத்தை உருக்கும் காக்ஷியாக இருந்தது. நெடுங்காலம் கழித்து எதிர்பாராமல் சந்திக்கக் கிடைத்தது பற்றிப் பெருமகிழ்ச்சி கொண்டனர். அதே நேரத்தில் சகோதரராகிய சின்னஸ்வாமியின் மறைவு அவர்களுக்குப் பெரும்

துயரத்தையும் அளித்தது. தம் சகோதரராகிய பாலுஸ்வாமிக்குத் திருமணம் நடக்க இருப்பதைக் கண்டு தீக்ஷிதர் மிகவும் குதூஹலமடைந்து மனமார அவரை ஆசீர்வதித்தார். அதன்பின் பாலுஸ்வாமி முத்துஸ்வாமி தீக்ஷிதரைப் பார்த்து "அண்ணு! எட்டையபுர மஹாராஜா ஸ்ரீ முருகக் கடவுளின் ஆழ்ந்த பக்தர், அவர் புலமைமிக்க இளவரசர், ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு ஆகிய மொழிகளில் மிக்க வல்லவர். கலைகளைப்பெரிதும் போற்றி ஆதரிப்பவர். சிறப்பாக, ஸங்கீதவித்வான் களை அவர் மிக விரும்பிப் போற்றுவார். அவரே சாஸ்த்ரீய ஸங்கீதத்தில் உருப்படிகளை இயற்ற வல்ல ஸாஹித்தியகர்த்தா. இவற்ருேடு தங்களுடைய க்ருதிகளில் தனிப்ரேமை உடையவர்" என்று மன்னரின் குணுதிசயங்களைத் தெரிவித்தார்.

திருமண நிகழ்ச்சிகள் எல்லாம் கோலாஹலமாக முடிந்த பிறகு, மஹாராஜா முத்துஸ்வாமி தீக்ஷிதரை எட்டையபுரத்திலேயே ஸ்திரமாகத் தங்கி, தமக்குக் குருவாகவும் இருந்து அருள் செய்யுமாறு வேண்டினர். முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு இந்த உலகத்தில் அப்பொழுது உறவினர்கள் என்று இருந்தவர்கள் அவருடைய ஒரே புத்திரியும், ஒரே தம்பியும் ஆவர். மகளோ திருச்சியில் தன் கணவரோடு குடும்பம் நடத்திக்கொண்டிருந்தாள். தம்பியாகிய பாலுஸ்வாமியோ திருமணம் செய்து கொண்டு எட்டையபுரத்தில் ஸ்திரவாழ்க்கையை

மேற்கொண்டு விட்டார். இந்த நிலையில் எட்டையபுரத்தில் தம்முடைய எஞ்சிய நாட்களைக் கழிப்பது தான் உசிதமென்று தீக்ஷிதர் முடிவு செய்தார். அதோடு அந்தப் பகுதியிலிருந்த க்ஷேத்திரங்களை எல்லாம் தெரிசிக்க வேண்டுமென்ற ஆசையும் அவருக்கு இருந்தது. ஆகவே அவர் தாம் எட்டையபுரத்திலேயே ஸ்திரமாக வாழ்வதாகவும், அதற்கு முன்பாக ஒருமுறை திருவாரூருக்குச் சென்று தம் குடும்பத்தைக் கலைத்து விட்டு வர விரும்புவதாகவும் மஹாராஜாவிடம் கூறினார். மஹாராஜாவும் மகிழ்ச்சியோடு அதற்கிசைந்து தீக்ஷிதர் திருவாரூர் சென்று திரும்புவதற்கான ஏற்பாடுகளைச்செய்தார். பிறகு தீக்ஷிதர் திருவாரூர் சென்றார்; சில நாட்கள் தங்கினார்; பழைய நண்பர்களையும் உறவினர்களையும் கண்டு அளவளாவி பிரியாவிடை பெற்றார். பிறகு எட்டையபுரம் திரும்பி தம்முடைய எஞ்சிய காலத்தைக் கழித்தார்.

இவ்வாறு எட்டையபுரத்தில் தங்கிய காலத்தில், அவர், தென்னாட்டுக் கோடியிலுள்ள பிரசித்தி பெற்ற கோயில்களுக்குச் சென்று ஆங்காங்கு உள்ள மூர்த்திகள் பேரில் க்ருதிகள் இயற்றினார். எட்டையபுரத்திற்கு 40 மைல் தூரத்தில், கடற்கரையில் திருச்செந்தூர் என்னும் பிரசித்திபெற்ற சுப்ரமணியஸ்வாமி கோயில் இருக்கிறது. அந்தக் கோயில் முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளில் ஒன்று. ஸ்ரீசங்கராசாரியாரும் அந்த ஸ்தலத்திற்

குச் சென்று 'மயூராதிருதாம்' என்னும் தம்முடைய பிரசித்திபெற்ற கவிதையை ஸ்ரீ ஸுப்ரமணிய மூர்த்தியைப் புகழ்ந்து பாடியுள்ளார். இந்த ஸ்தலத்தில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய க்ருதிகளில் தோடி இராகத்தில் அமைந்த "ஸ்ரீ ஸுப்ரமண்யோமாம் ரக்ஷது" என்னும் க்ருதி எல்லோருக்கும் தெரிந்ததே. பக்தர்களுக்கு, திருச்செந்தூர் கோயிலில் விபூதி பிரசாதத்தை உலர்ந்த இலைச்சருகுகளில் வைத்துக்கொடுப்பது வழக்கம். இந்த வழக்கத்தை தீக்ஷிதர் தம்முடைய இந்த க்ருதியில் குறிப்பிட்டிருக்கிறார்.*

அந்தப் பகுதியில் கழுகுமலை என்று வழங்கப் பெறும் கங்கசைலம் எனும் பிரசித்திபெற்ற மற்றொரு சுப்ரமணிய க்ஷேத்திரம் உள்ளது. அந்த ஸ்தலம் எட்டையபுரத்திற்கு மேற்கே 25 மைல் தூரத்தில் உள்ளது. இங்குள்ள மூர்த்தியைத் தெரிசித்த தீக்ஷிதர் அந்த மூர்த்தியைப் புகழ்ந்து "ஸுப்ரமண்யேன ரக்ஷிதோஹம்" என்ற சுத்த தன்யாஸி இராக க்ருதியைப் பாடினார்.

திருநெல்வேலியில் தாம்ரவர்ணீ ஆறு ஓடுகிறது. அந்த ஆற்றின் கரையில் புகழ்பெற்ற புராதனமான சிவன்கோயில் ஒன்று உள்ளது. அந்தக் கோயிலில் உள்ள மூர்த்தியின் பெயர் 'சாலிவதீச்வரர்'. தேவியின் பெயர் 'காந்திமதி அம்மை'. இந்த இரண்டு தெய்வங்களைப்பற்றி தீக்ஷிதர் இயற்றியுள்ள க்ருதிகளில் ஸிம்ஹாரவ இராகத்தில்

* பத்ர விபூதி ப்ரதான நிபுண :

அமைந்த 'ஸ்ரீ காந்திமதீம்' என்ற க்ருதியும், தேவ காந்தாரி இராகத்தில் அமைந்த 'சாலிவதீச்வரம்' என்னும் க்ருதியும் குறிப்பிடத்தக்கவை. தேவியைப் பற்றிய பாடலில் சுத்த தாம்ரவர்ணீ * ஆற்றின் கரையில் இருக்கும் தேவி என்று பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. தாம்ரவர்ணீ ஆற்றின் நீர் ஸ்படிகம்போல் தெளிந்து இருக்கும். இதனை நினைவிற்கொண்டுதான் தீக்ஷிதர் சுத்த தாம்ரவர்ணீ என்று குறிப்பிட்டிருக்கிறார். தாம்ர வர்ணீ ஆற்றின் நீருக்கு மணமோ, நிறமோ, சுவையோ இவை ஒன்றும் கிடையாது என்பது கவனிக்கத்தக்கது. பிறகு தீக்ஷிதர் கல்லிடைக்குறிச்சி சென்று அங்குள்ள லக்ஷ்மீ வராஹப் பெருமாளைப் போற்றி 'ஸ்ரீ லக்ஷ்மீ வராஹம்' என்னும் க்ருதியை இயற்றினார். அந்த க்ருதியில் "இந்தப் பெருமாள் தாம்ரவர்ணீயின் கரையில் அமர்ந்திருக்கிறார். தாம்ரவர்ணீ ஆறோ மக்களின் உடம்பிலுள்ள நோய்களை எல்லாம் அகற்றிச் செல்லுகிறது † என்று வர்ணித்துள்ளார். இந்த க்ருதியிலும் குறிப்பிடத்தக்க செய்தி ஒன்று இருக்கிறது. தாம்ரவர்ணீ ஆற்று நீரில் தாமிரச் சத்து சேர்ந்துள்ளது என்று சொல்லப்படுகிறது. அதோடு அந்த நீருக்கு நோய்களைத் தீர்க்கும் மருந்து சக்தியும் கலந்துள்ளதெனவும் சொல்லப் படுகிறது. இந்தக் கருத்தினை தீக்ஷிதர் மேற்கூறிய

* சுத்ததாம்ரபர்ணீ தடஸ்திதாம்

† பங்கஹர தாம்ரபர்ணீ தீரஸ்தம்

க்ருதியில் குறிப்பிட்டிருக்கிருர். அதோடு அந்த க்ருதியில் 'பங்கா' என்னும் சொல் அமைந் திருப்பது நன்கு நோக்குதற்குரியது. அந்தச் சொல் வைத்திய சாஸ்திரத்தில் பயன்படுத்தப் பெறும் சொல். பாரிசவாயு போன்ற வியாதிகளை அச்சொல் குறிப்பிடும். தீக்ஷிதருக்கு வைத்திய சாஸ்திரமும் நன்ருகத்தெரியும் என்று அக்குடும் பத்தினர் கூறுகின்றனர். தீக்ஷிதர் இந்த க்ருதியில் 'பங்கா' என்ற சொல்லை உபயோகப்படுத்தி இருப் பதிலிருந்து அவர் வைத்திய சாஸ்திரத்திலும் வல்லவர் என்பது புலப்படுகிறது.

மேற்குத் தொடர்ச்சி மலையில் சபரிமலை என்ற ஒரு பகுதி உள்ளது. அதனை 'சௌரிமலை' எனப் பெரும்பாலும் கூறுவர். அங்கு ஸ்ரீ ஹரிஹர புத்தி ரர்க்கு உரிய கோயில் உள்ளது. அந்த மூர்த்தியை 'சாஸ்தா' என்றும், 'ஐயப்பன்' என்றும் எல்லோ ரும் வழங்குவர். மஹாவிஷ்ணுவும் சிவபெரு மானும் சேர்ந்த சேர்க்கையால் அந்த மூர்த்தி தோன்றினுர் என்று கதை வழங்குகிறது. இந்தக் கலியுகத்தில் சக்தி வாய்ந்த தெய்வமாகப் போற் றப் பெறுகிருர். தீக்ஷிதர் இந்தக் கோயிலுக்கும் சென்று வஸந்தா இராகத்தில் 'ஹரிஹரபுத்ரம்' என்னும் க்ருதியைப் பாடினுர். அந்த க்ருதியில் அவர் அந்த மூர்த்தியை பாண்டிய நாட்டிற்கும்* கேரள நாட்டிற்கும் ஒளி தருகின்ற மூர்த்தி என்று வர்ணித்திருக்கிருர். தென்னுட்டில் சாஸ்தா

* பாண்ட்ய கேரளாதி தேசப்ரபாகரம்.

வழிபாடு பிரபலமாக நடந்து வருவதை இந்த க்ருதி குறிப்பிடுகிறது. இந்த க்ருதியின் ஸங்கீதப் பண்பை நோக்கினுல் அதிலும் சிறந்ததாக உள்ளது. இந்த க்ருதி அமைந்துள்ள வஸந்தா இராகம் மிக அழகான முறையில் கையாளப் பெற்றுள்ளது. மேலும் தீக்ஷிதர் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப்பற்றி "ஸ்ரீ க்ருஷ்ணம் பஜமானஸ" என்னும் தோடி இராக க்ருதியை இயற்றியுள்ளார். இதில் அவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானை 'குருபாவன புரத்தின் பிரபு' என்று வர்ணித்துள்ளார். இந்தத் தொடர் குருவாயூரையே குறிக்கும். ஆகவே தீக்ஷிதர் குருவாயூரப்பனையும் தெரிசித்திருக்க வேண்டும். தென்னுட்டில் கோயில் கொண்டிருக்கும் பல தெய்வங்களைப் பற்றியும் தீக்ஷிதர் இயற்றியுள்ள க்ருதிகள் அனேகம் உள்ளன. அவற்றை எல்லாம் விரிவாகத் தொகுத்து அட்டவணைப் படுத்திக் காட்டுவது அவசியமில்லை. தென்னுட்டில் உள்ள திருச்செந்தூர், சபரிமலை முதலிய க்ஷேத்திரங்களிலிருந்து இந்தியாவின் வடகோடியிலுள்ள காட்மாண்டு, பத்ரிநாத் முதலிய ஸ்தலங்கள் வரை தீக்ஷிதர் யாத்திரை செய்திருக்கிருர் என்றும், இத்தகைய ஸ்தல யாத்திரையால் தெய்வத் தன்மை வாய்ந்த ஸாஹித்ய கர்த்தாக்களில் அவருக்கு முக்கியமான இடம் உண்டு என்றும் குறிப்பிடுவதே போதுமானது.

இனி முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கடைசி யாத்திரையைப்பற்றிக் குறிப்பிடுவது ஒன்றுதான் எஞ்சி

யுள்ளது. இந்த இறுதி யாத்திரை 1834-ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் தீபாவளிக்குமுன் தினமாகிய சதுர்தசி யன்று நிகழ்ந்தது. அன்று தீக்ஷிதர் விடியற்காலேயில் மிக சீக்கிரமாக வழக்கம் போல் எழுந்துவிட்டார். யோகப் பயிற்சிகள் செய்த பிறகு அவர் நீராட முற்பட்டார். அப்பொழுது அவருக்கு ஸ்ரீ காசி அன்னபூரணியின் திவ்ய ரூபம் காக்ஷி தந்தது. தீக்ஷிதர் பிரமிப்புடன் அந்தக் காக்ஷியை உற்று நோக்கிக் கொண்டிருக்கும் பொழுதே மறைந்துவிட்டது. அந்நிலேயில் அவருக்கு அவருடைய குருவாகிய சிதம்பர நாத யோகியார் காசியில் அன்னபூரணியின் சந்நிதியில் "இந்த அன்னபூரணி உனக்கு இவ்வுலக வாழ்க்கைக்குத் தேவையான உணவு மட்டுமில்லாமல் பிறகு மோக்ஷத்தையும் அருளுவாள்" என்று கூறிய சொற்கள் நினைவுக்கு வந்தன. அவர் தமக்கு இறுதி நேரம் நெருங்கிவிட்டது என்பதை உணர்ந்தார். உடனே அவர் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு தேவியின் நவாவரண பூஜையைச் செய்துவிட்டு "ஏஹி அன்னபூர்ணே"* என்னும் புன்னுகவராளி இராக க்ருதியை தேவியின் சந்நிதியில் பாடினுர்.

பூஜை முடிந்தவுடன் முத்துஸ்வாமி தீக்ஷிதர் தம்முடைய முன் அறைக்குச் சென்ருர். அப்

---

* பல்லவி: ஏஹி அன்னபூர்ணே ஸந்நிதேஹி
ஸதாபூர்ணே ஸ்வர்ணே

அநுபல்லவி: பாஹி பஞ்சாசத்வர்ணே ச்ரியம்
தேஹி ரக்தவர்ணே அபர்ணே

பொழுது ஒரு பெரிய மனிதர் மிக விரைவாக அவரைப் பார்க்க வந்தார். என்ன வியப்பு! அவர் எட்டையபுர மன்னர். அந்த நேரத்தில் மஹாராஜா அங்கு வருவது வழக்கமில்லை. மேலும் அவர் மிகவும் பதற்றத்துடன் இருந்தார். அவருடைய பதற்றத்திற்குக் காரணம் இருந்தது. அவருடைய 'காங்கேயன்' என்னும் பட்டத்து யானைக்கு திடீரென மதம் பிடித்துவிட்டது. அதில் தான் மஹாராஜா பவனி வருவது வழக்கம். மதம்பிடித்த யானையோ சங்கிலியை அறுத்துக்கொண்டு அந்த ஊர் சுடுகாட்டுக்கு ஓடிச் சென்று அங்கேயே நின்றுவிட்டது. எவ்வளவு முயற்சி செய்தும் அந்த யானையை யாராலும் அடக்க முடியவில்லை. இந்தச் செய்தி மஹாராஜாவுக்குக் கிடைத்தவுடன், அவர் திடுக்கிட்டு ஏதோ தனக்கு ஒரு பெரிய தீங்கு வருவதற்குரிய அறிகுறியே என்று நினைத்துக் கலங்கிவிட்டார். எனவேதான் மஹாராஜா முத்துஸ்வாமி தீக்ஷிதரைக் காண அத்தனை வேகமாக வந்தார். அவருடைய ஆசீர்வாதத்தை உடனே பெறவேண்டுமென்பது அவர் நோக்கம். இந்த நிகழ்ச்சியை மஹாராஜா முத்துஸ்வாமி தீக்ஷிதரிடம் விளக்கிச் சொல்லிவிட்டு,

---

சரணம் : காசிக்ஷேத்ர நிவாஸினி
கமலலோசன விசாலினி
விச்வேச மனோல்லாஸினி
ஜகதீச குருகுஹ பாலினி
பித்ருமபாசினி புன்னாகவராளி ப்ரகாசினி
ஷட்த்ரிம்சத்தத்வ விகாசினி ஸுவாஸினி
பக்த விச்வாஸினி சிதானந்த விலாஸினி

"ஸ்வாமி! தாங்கள் என்னுடைய குருநாதர். இன்றைய இந்த நிகழ்ச்சியால் என் மனம் பெரிதும் கலக்க மடைந்திருக்கிறது. எனக்கு ஏதாவது தீங்கு வந்துவிடுமா? தயவுசெய்து சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

தீக்ஷிதர் சிறிது நேரம் தியானத்தில் இருந்துவிட்டு மன்னரை நோக்கி "மஹாராஜா! உங்களுக்கு எத்தகைய தீங்கும் வராது. நான் உறுதி கூறுகிறேன்" என்றார்.

'அப்படியானால் மிக மகிழ்ச்சி' என்று சொல்லிய மன்னர் "என்னுடைய இராஜ்யத்திற்கு ஏதேனும் தீங்கு வந்துவிடுமோ" என வினவினார்.

"தங்களுடைய இராஜ்யத்திற்கும் ஒரு தீங்கும் வராது" என்று உறுதியாகக் கூறினார் தீக்ஷிதர். மிகமிக மகிழ்ச்சி என்று கூறிய மஹாராஜா எல்லாம் குருநாதராகிய தங்களுடைய அருள்தான் என்று சொல்லிக்கொண்டே சென்று விட்டார்.

மன்னர் சென்றபின் சிறிது நேரம் கழித்து தீக்ஷிதரின் சிஷ்யர்கள் வந்து அவருடைய க்ருதிகளைப் பாடத் தொடங்கினர். அவர்களைப் பார்த்து "இன்று சதுர்தசி. இது அம்பிகைக்கு உகந்த புண்ணிய தினம். ஆகவே தேவியின் கீர்த்தனைகளைப் பாடுங்கள்" என்றார். சிஷ்யர்களும் உடனே கமகக்ரிய இராகத்தில் அமைந்த "மீனாக்ஷி மேமுதம் தேஹி" என்னும் கீர்த்தனையைப் பாடினார்கள். இந்தப் பாட்டு முடிந்தவுடன் தீக்ஷிதர் "இப்பொழுது தேவி என்னுடைய உலக பந்தங்

களை எல்லாம் அகற்றிவிடப் போகிருள் எனத் தோற்றுகிறது"* எனச் சொல்லி இதே கீர்த்தனையை மற்றுமொரு முறை பாடுங்கள் எனப் பணித்தார்.

சிஷ்யர்களும் அவ்வாறே அந்த க்ருதியை மறு படியும் பாடினர். அந்த க்ருதியின் அநுபல்லவி யில் அமைந்துள்ள 'மீனலோசனி பாசமோசனி' என்னும் சொற்களை அவர்கள் பாடும்பொழுது முத்துஸ்வாமி தீக்ஷிதர் இந்தப் பூத உடலை நீத்து அம்பிகையின் திருவடித் தாமரையைச் சேர்ந்து விட்டார். இது நடந்த சிறிது நேரத்திற்குள் மஹா ராஜாவின் பட்டத்து யானையாகிய காங்கேயனும் மதம் நீங்கித் தன் இயல்பான தன்மையை அடைந்து சுடுகாட்டிலிருந்து தானகத் திரும்பி வந்து யானைக் கூடத்தைச் சேர்ந்தது.

தீக்ஷிதருடைய மறைவைக் கேள்வியுற்ற எட்டையபுர மக்கள் எல்லாரும் மிகுந்த துயரத்தில் ஆழ்ந்தனர். இந்தச் செய்தியைக் கேட்ட மஹாராஜா அதிர்ச்சி அடைந்தார். உடனே அவர் தீக்ஷிதரைக் கடைசியாகத் தெரிசிப்பதற்கு விரைந்துவந்து "ஸ்வாமி! நான் இன்று விடியற் காலையில் தங்களைப்பார்த்தேன். அப்பொழுது உங்கள் முகத்தில் தெய்வீக ஒளி பிரகாசித்தது.

---

* உப நிஷதத்திலுள்ள ஒரு பகுதியின் ஸாரம் இந்தக் க்ருதியில் அமைந்துள்ளது.

பித்யதே ஹ்ருதய க்ரந்திஹி—சித்யந்தே ஸர்வ ஸம்சயாஹா
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி—தஸ்மின் த்ருஷ்டே பராவரே

நான் என்னுடைய நன்மையைப்பற்றியே சிந்தித்து அதைப்பற்றியே தங்களைக் கேட்டுக் கொண்டிருந்தேன். தாங்கள் சொன்ன வாக்குறுதியைக் கேட்டு மன அமைதிபெற்றேன். எனக்கோ, என் இராஜ்யத்திற்கோ எத்தகைய தீங்கும் வராது என்ற தங்கள் வாய்மொழியைக் கேட்டு நான் ஆறுதல் பெற்றேன். ஆனால் தங்களுடைய மறைவினால் எனக்கு வந்த நஷ்டம், எனது இராஜ்யத்தை இழப்பதனால் ஏற்படும் நஷ்டத்தைவிடப் பெரிது. தாங்கள் ஸ்ரீ கார்த்தி கேயனின் அவதாரம். ஸ்கந்தசஷ்டியின் ஆரம் பத்தில் தாங்கள் தங்களுக்குரிய ஸ்தானத்திற்குத் திரும்பிச் சென்றுவிட்டீர்கள்'' என்று சொல்லிக் கதறினர். பிறகு மஹாராஜாவின் கட்டளைப்படி தேர்ந்தெடுக்கப்பெற்ற ஒரு இடத்தில் தீக்ஷிதரின் பூத உடல் தகனம் செய்யப்பெற்றது. அந்த இடத்தில் பின்னர் ஒரு சமாதியும் எழுப்பப்பெற்றது. இப்பொழுது அந்த சமாதி கலா ரசிகர்களுக்கும் சமயச்சார்பு உடையவர்களுக்கும் யாத்ரா ஸ்தலமாக விளங்குகிறது.

# 7

# இசைவளம்

இனி நாம் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ருதிகளில் அமைந்துள்ள இசை அம்சங்கள்பற்றி ஆராய்வோம். அவர் ஏராளமான க்ருதிகளும் ஏனைய உருப்படி வகைகளும் இயற்றியுள்ளார். அவற்ருேடு சுமார் ஐந்து இராகமாலிகைகள், ஒரு பதவர்ணம், ஒரு தரு ஆகியவை கிடைத்துள்ளன என்பதுபற்றி முன்பே குறிப்பிட்டோம். அவருடைய ஸாஹித்தியங்களில் மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது அவற்றுள் அமைந்துள்ள இராக பாவ வளமே ஆகும். இந்த அம்சத்தை நன்ருகப் புரிந்துகொண்டு ரஸிப்பதற்கு நாம் இராகங்களின் அமைப்பினை ஓரளவாவது உணர்ந்துகொள்ளுதல் நலம். இந்திய சாஸ்த்ரீய ஸங்கீதத்தின் அடிப்படையே இராக அமைப்புத்தான். அந்த இராக அமைப்பே மேனுட்டு ஸங்கீதத்திலிருந்து இந்திய ஸங்கீதத்தை வேறுபடுத்திக் காண்பிக்கிறது. இனி, இராகம் என்ருல் என்ன என்பதைப் பார்ப்போம். நன்ருக வரையறுக்கப்பெற்ற ஒலி அசைகளை (ஸ்வரஸஞ்சாரங்களை) க்கொண்டு அமைந்த இன்னிசைதான் இராகம். வெவ்வேறு வகைப்பட்ட ஸ்வர ஒலிகளைக் கொண்டே இராக வேறுபாடுகளை உணரமுடிகிறது. இவ்வாருக ஒவ்வொரு இராகமும் பிற இராகங்களிலிருந்து வேறு

பட்ட தனித்தனிப் பண்புகளைக்கொண்டு அமைந் துள்ளது. மேலும் இராகங்கள் தெய்வாம்சம் உடையனவாகவும் கருதப்படுகின்றன. இந்த நேரத்தில் நம் நாட்டு தெய்வங்கள் எல்லாம் ஒலி உருவத்தில் (நாதஸ்வரூபத்தில்) உள்ளன என்று கூறப்பெறுவது சிந்தனைக்குரியது. ஸ்ரீ தியாகையர் 'நாததனும் அனிசம்' என்னும் க்ருதியில் நாத ரூபமாக இருக்கின்ற சங்கரனைத் தாம் வணங்கு வதாகக் கூறுகிருர்.* முத்துஸ்வாமி தீக்ஷிதரும் தேவியை நாதஸ்வரூபி என்று பல இடங்களில் வர்ணித்து இருக்கிருர். அவர் வம்சாவதி இராகத் தில் இயற்றியுள்ள "வம்சாவதி சிவயுவதி" என்னும் க்ருதியில் ஸ்வரங்களும் 22 ச்ருதிகளும் ஒன்றுகூடிய சேர்க்கையே தேவியின் திரு உருவம் என்கிருர்.†

இன்று நமது ஸங்கீதத்தில் இராக ஆலாபனை மிகவும் முக்கியமான உயர்ந்த அம்சமாகக் கருதப் பட்டு வருகிறது. இராக ஆலாபனை என்பது இராகத்தின் பல விசேஷ அம்சங்களையும் சாயை களையும் தொடர்புடன் புலப்படுத்துவதுதான். பக்தர்கள் தேவதையை பாதாதி கேசம் வர்ணிக் கிருர்கள். அதாவது திருவடியில் தொடங்கி திருமுடிவரை ஒவ்வொரு அங்கமாகப் போற்றி வர்ணிக்கிருர்கள். அதுபோலவே ஸங்கீத வித்வான்களும் ஒவ்வொரு இராகத்தையும் மந்த

---

* நாததனுமனிசம் சங்கரம் நமாமி

† த்வாவிம்சச்ருதி ஸ்வரஸ்வரூபிணி

ரஸ்தாயி முதல் தார ஸ்தாயிவரையில் பொருத்த மான ஸஞ்சாரங்களைக் காட்டி அந்தந்த இராகத் தின் முழு உருவங்களையும் ஒலி ரூபமாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்கள். இவ்விதமான இராக ஆலாபனைப் பத்ததி ஒன்று நம் நாட்டு ஸங்கீதத் தில் அமைந்துள்ளது. இராகங்களின் நுட்பமான ஸஞ்சார க்ரமங்களைக் காட்டுவதற்காகவே 'பிரபந்தங்கள்' என்னும் உருப்படி வகைகளை பெரியோர்கள் நமக்கு இயற்றித் தந்துள்ளார்கள். இராகங்களின் அம்சங்களை ஒலி ஓவியமாகச் சித்தரித்துக் காட்டும்பொழுது அங்கு ஸாஹித்தி யத்திற்கு (சொற்களுக்கு) இடமில்லை. அதனால் தான் இராக ஆலாபனையானது வெறும் அகார ஒலிகளைக்கொண்டே இசைக்கப்பெறுகிறது. சில சமயங்களில் இராக ஆலாபனைகளில் த. ர. ன. என்னும் எழுத்துக்கள் (அசைகள்) ஒலிக்கப் பெறுகின்றன. சில ஒலி அசைகளை எளிதாக வெளிப்படுத்திக் காட்டுவதற்காகவே அந்த எழுத் துக்கள் பயன்படுத்தப்பெறுகின்றன. எனினும் அவை முக்கிய இடம் பெறுவதில்லை. இங்குதான் இராகங்களுக்கும் பாட்டுக்களுக்கும் உள்ள நுட்ப மான அடிப்படை வேறுபாடு அறிந்துகொள்ளக் கிடக்கிறது. இராகங்கள் ஒலி ஓவியங்களாக (நாத ரூபங்களாக) அமைந்துள்ளன. ஆனால் பாட்டுக் களோ சொற்களின் (ஸாஹித்தியங்களின்) கட்டுக் கோப்பினால் அமைந்தவை. மேனாட்டு ஸங்கீதம் உயர்ந்த தரமான சாஸ்த்ரீயப் பாடல்களைத் தன் னிடத்தே கொண்டுள்ளது என்பது உண்மை

தான். அதில் ஸ்வர ஸ்தானங்களைக் குறிக்கும் குறிகளும் உள்ளன. ஆனால் அந்த ஸங்கீதத்தில் நாம் குறிப்பிடுவது போன்ற இராகங்கள் என்ற அம்சங்கள் இல்லை.

"சொற்கள் கலவாதவை இராகங்கள் என்று சொல்லப்படுகிறதே, அப்படி என்றால் பாட்டுக்களில் இராக பாவங்களைப்பற்றிய கேள்வி எப்படி வந்தது? பொருத்தமான ஸாஹித்தியங்கள் மூலமாக பக்தி ரஸத்தை ஊட்டுவதுதானே பாட்டு. அதற்காகத்தானே ஸங்கீத மும்மூர்த்திகளின் க்ருதிகள் அமைந்துள்ளன" என்று சில கேள்விகள் எழுதல் இயற்கையே. இந்தக் கேள்விகளுக்குத் தக்க விடை சொல்லுவதற்குமுன் தென்னிந்திய ஸங்கீதத்தில் அமைந்துள்ள க்ருதிகளின் வரலாற்றினை ஓரளவு குறிப்பிடுதல் வேண்டும். இராக ஆலாபனைகளை முக்கியமாகக் கொண்ட சாஸ்த்ரீய ஸங்கீதத்தோடு நெடுங்காலமாக இசையோடு கூடிய பக்திப் பாடல்களும் கணக்கில்லாமல் தோன்றிவந்துள்ளன. அத்தகைய பக்திப் பாடல்களை பஜனை ஸங்கீதம் என்கிறோம். நாடோடிப் பாடல்களைப்போல் அல்லாமல், பஜனைப் பாடல்கள் சாஸ்த்ரீய ஸங்கீத முறையைச் சேர்ந்த இராகங்களையும் தாளங்களையும் அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை. ஆகவே அவை சாஸ்த்ரீய ஸங்கீதத்தோடு இணைந்துவிட்டன. ஆனால் பஜனைப் பாடல்களின் நோக்கம் பக்தியைத் தூண்டுவதே அல்லவா?

பக்தியைத் தூண்டுவதற்கு சொற்களும் அவற்றின் பொருள்களும் அவசியம்தானே. ரஸ உணர்ச்சியைத் தூண்டிவிடுவதற்கு ஒரு சாதனமாகவே சாஸ்த்ரீய ஸங்கீதமுறை பஜனைப் பாடல்களில் கையாளப்பெற்றது. சுருங்கக் கூறினால் பஜனைப் பாடல்களில் ஸாஹித்தியங்களுக்கே பிரதான இடம் என்றும், ஸங்கீதத்திற்கு இரண்டாவது இடம் என்றும் சொல்லலாம். இதனைக் கருத்தில் கொண்டே பஜனைப் பாடல்கள் இனிய எளிய இராகங்களில் அமைந்து உள்ளன. அந்த இராகங்களும் பக்திச் சுவைக்கு ஏற்றனவாக உள்ளன. பக்திப் பாடல்களைப் பாடும்பொழுது, அப் பாடல்களில் அமைந்துள்ள இராகச் சுவையில் பக்தர் ஈடுபட்டு, பக்தியை மறந்துவிடக்கூடாது என்பதற்காகத்தான் எளிய இராகங்கள் கையாளப் பெற்றுள்ளன. இல்லை என்றால் பஜனைப் பாடல்களைக் கேட்பவர்கள், ஸங்கீத ரஸிகர்களாக மாறி, பக்தியை மறந்துவிடுவார்கள். ஆகவே சாஸ்த்ரீய ஸங்கீதம், பஜனைப் பாட்டு ஆகிய இரண்டும் வெவ்வேறான தன்மை உடையவை என்பதையும் அவற்றின் நோக்கங்கள் வெவ்வேறானவை என்பதையும் அவற்றின் முறையில் பல வேறுபாடுகள் உண்டு என்பதையும் நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

18-ம் நூற்றாண்டு வரையில் தென்னிந்தியாவில் ஸங்கீதத்தின் நிலை இதுவாகும். அந்த நிலையில் தென்னாட்டின் ஸங்கீத உலகில் பெரிய புரட்சி

நிகழ்ந்தது எனலாம். இன்று நாம் வழங்கும் க்ருதி களின் தோற்றத்தினுல்தான் அத்தகைய ஸங்கீ தப் புரட்சி தோன்றியது. இத்தகைய ஸங்கீதப் புரட்சிக்கு அடிக்கல் நாட்டியவர் புரந்தரதாஸர் என்னலாம். அவருடைய கீதங்கள் எல்லாம் சாஸ்த்ரீய ஸங்கீத முறையில் அமைந்த ஸாஹித் தியங்கள். சாஸ்த்ரீய ஸங்கீதத்தைக் கற்கும் மாணவர்களுக்கு இராகங்களின் லக்ஷணங்களைக் கற்றுக் கொடுக்கும் நோக்கத்துடனேயே புரந்தர தாஸர் கீதங்களை இயற்றினுர். ஆகவே, அவர் தம்முடைய கீதங்களில் பலவகைப்பட்ட ஸஞ்சார க்ரமங்களைக் கையாண்டிருக்கிறுர். அதே நேரத் தில் அந்த ஸ்வரப்பிரஸ்தாரங்களோடு கடவுளைப் புகழும் ஸாஹித்தியங்களையும் அமைத்திருக்கிறுர். அதனுடைய நோக்கம் கீதங்களிலுள்ள ஸ்வர அம்சங்களை மாணவர்கள் எளிதில் கற்றுக்கொள்ளு வதற்கே ஆகும். இனி நாம் வேங்கடமகியின் ஸங்கீதத் தொண்டினைப் பார்ப்போம். லக்ஷண கீதங்கள் கணக்கில்லாதவற்றை வேங்கடமகி இயற்றியிருக்கிறுர். அவை ஒவ்வொன்றும் விஸ் தாரமானதும் கூட. இவருடைய லக்ஷண கீதங் களிலும் ஸ்வர ஸஞ்சாரங்களுக்கே முக்கியத்துவம் கொடுக்கப் பெற்றுள்ளது. ஆனுலும் அவற்றின் ஸாஹித்தியங்கள் எல்லாம் கடவுளின் புகழைப் பற்றியவையே. இதிலிருந்துதான் க்ருதிகள் இயற் கையான எளிய முறையில் உருவாகி வெளி வந்தன. கடவுளைப் பற்றிய ஸாஹித்தியங்களை மட்டும் வைத்துக்கொண்டு ஸ்வர ஸஞ்சாரங்களை

அகற்றிக்கொண்ட நிலையில் அது கீதம் எனப் பெற்றது. அவ்வாறு முன்பு கீதம் என்று வழங்கப் பெற்றது புத்துருவம் பெற்று க்ருதி என்று வழங்கப் படுகிறது. இவ்வகையான ஸாஹித்தியங்கள் 18ஆம் நூற்றாண்டில் வழக்கத்திற்கு வந்தன. இத்தகையான உருப்படி வகையை ஸங்கீத மும்மூர்த்திகள் தூய்மைப்படுத்திச் செப்பனிட்டனர். ஸங்கீத மும்மூர்த்திகளால் செப்பனிடப்பெற்ற காரணத்தினால் அவை லக்ஷண கீதங்களின் இசையம்சத்தையும், பஜனைப் பாடல்களின் பக்தி அம்சத்தையும் ஒருங்கே கொண்டு விளங்குகின்றன. இசைக் கர்த்தாக்களின் இயல்புக்கும் உணர்ச்சிக்கும் ஏற்றவாறு அவர்களுடைய ஒவ்வொரு பாட்டிலும் மேற்கூறிய இரண்டு அம்சங்களும் தக்கமுறையில் அமைந்துள்ளன.

மேலே கூறப் பெற்றுள்ளவற்றைக் கருத்திற் கொண்டு இனி தீக்ஷிதரின் க்ருதிகளை ஆராய்வோம். அவருடைய க்ருதிகள் எல்லாம் தெய்வங்களின் புகழினைக் கூறுவனவாகவே அமைந்துள்ளன. ஆகவே அவற்றில் பக்தி முக்கியமான இடம் பெற்றிருப்பது புலப்படும். அவர் அத்வைத வேதாந்தி என்று முன்பே விளக்கினோம். கடவுளுடைய பலவகை ரூபங்களெல்லாம் ஒரே பரப்ரம்மத்தைச் சார்ந்தது என்பது அவரது அடிப்படை நம்பிக்கை. பல வகைப்பட்ட தெய்வங்களைப் பல பெயர்கள் கொண்டழைத்து, பல வகைப்பட்ட முறைகளில் வழிபட்டாலும் அவை

யாவும் முடிவில் பரப்ரம்மத்தை உண்மையாக உணர்ந்து கொள்ளுவதற்குரிய வழிகள் என்றே அவர் கருதினார். 'ஸகுணோபாஸனா'வின் நோக்கமே பரப்ரம்மத்தை உணர்வதுதான் என்று அவர் திடநம்பிக்கை கொண்டிருந்தார். இவ்வாறாக ஞானத்தில் பக்தியை அடக்கி, தம் க்ருதிகளை இயற்றினார். தீக்ஷிதர் க்ருதிகளில் இது நன்கு விளங்கக் காணலாம். ஒரு ஸாஹித்ய கர்த்தா மன எழுச்சி கொண்டு பாட்டுக்களை இயற்றத் தொடங்கும்பொழுது தம் உணர்ச்சிக்குப் பொருத்தமான இராகங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவது இயற்கையே ஆகும். அதோடு ஸாஹித்தியங்களில் அமைந்த சொற்களுக்குப் பொருந்தும் விதத்தில் இராக ஸஞ்சாரங்களை அமைப்பதும் வழக்கமாகும். அதாவது உணர்ச்சிக்கு அடங்கியதுதான் இசையமைப்பு. இராக வர்ணனை தானாக உதிப்பது. ஆனால் ஞானம் தலை தூக்கும்பொழுது உணர்ச்சி அடங்கிவிடும். தீக்ஷிதருக்கும் அப்படித்தான். அவர் உணர்ச்சி வசப்பட்டு இராகங்களைத் தேர்ந்தெடுக்கவில்லை. இராக வர்ணனைகளும் அவருடைய உணர்ச்சி மிகுதியால் அமையவில்லை. ஒரு ஸாஹித்ய கர்த்தா சந்தர்ப்பத்திற்கு ஏற்ற இராகத்தைத் தேர்ந்து எடுப்பார். அவர் பாடலை இயற்றும் சூழ்நிலையைப் பொறுத்து அந்த இராகம் அமையும். அந்த இராகத்தை விவரிக்கும்பொழுது அந்த இராகத்தின் ஸஞ்சாரங்களை எல்லாம் நினைவிற் கொண்டு அவற்றிற்கு அவர் முழு உருவம் கொடுப்

பார். அப்பபடிப்பட்ட சமயங்களில் இராக வர்ணனையே அவரது குறிக்கோளாக இருக்கும். இதைத் தான் நாம் தீக்ஷிதருடைய க்ருதிகளில் காண்கிறோம். ஸங்கீத சாஸ்திரத்தில் வரையறை செய்யப்பட்டுள்ள ஆலாபனை பத்ததியில் கைதேர்ந்தவர் தீக்ஷிதர். ஆகவே அவர் தம்முடைய க்ருதிகளில் அந்தப் பத்ததியைப் பின்பற்றி இராக ஆலாபனையின் ஆக்ஷிப்திகா, இராக வர்த்தனி, விதாரி (மகரிணி) ஆகிய அம்சங்களை எல்லாம் அமைத்தார். இந்த க்ருதிகளில் அவர் கையாண்டுள்ள இராகங்கள் தெளிவாகவும், சுருக்கமாகவும், முழுமையாகவும் அமைந்துள்ளன. அவற்றுள் அமைந்துள்ள ஸஞ்சாரங்கள் அந்தந்த இராகத்தின் முக்கியமான அம்சங்களை எல்லாம் வெளிப்படுத்தும். அவற்றில் மந்தர ஸ்தாயியிலிருந்து தாரஸ்தாயி வரை ஸஞ்சாரம் செய்யப்பெற்றிருப்பதோடு இராகத்தின் முழு ஸ்வரூபமும் நன்கு அமைந்திருக்கும். ஒரு க்ருதியை ஸாஹித்தியங்களை விலக்கிவிட்டு அகாரமாகவே பாடிப் பார்த்தால் அதை அந்த இராகத்தின் ஆலாபனையாகவே யாரும் கருதுவார்கள். ஆகவே இராக ஆலாபனைக்கு, தாளங்களை அமைத்து, ஸாஹித்திய மென்ற ஆடையை உடுத்தினால் அதுவே க்ருதியாகும் என்று வர்ணிப்பது பொருத்தமாகும். தீக்ஷிதருடைய க்ருதிகளின் இத்தகைய அமைப்பே எல்லோரையும் கவருகிறது என்னலாம்.

ஸ்ரீ தியாகையாரைப் போலவே தீக்ஷிதரும் கணக்கிட இயலாத இராகங்களைக் கையாண்டிருக்கிறார். அவற்றில் அபூர்வ இராகங்களும், பிரபலமான இராகங்களும் உள்ளன. எல்லோருக்கும் தெரிந்த பிரபலமான இராகங்களில் தீக்ஷிதர் இயற்றிய பல க்ருதிகள் இராகத்தின் எல்லா வகையான இயல்புகளையும் கொண்டு அமைந்துள்ளன. உதாரணமாக ஸ்ரீ தியாகையர் தோடி இராகத்தில் சுமார் 20 கீர்த்தனைகள் இயற்றி இருக்கிறார். அது ஒரு கனராகம். இந்த இராகத்தில் தீக்ஷிதரும் அந்த இராகத்தின் எல்லா அம்சங்களும் வெளிப்படுமாறு பல க்ருதிகளை இயற்றியிருக்கிறார். அவற்றில் அமைந்துள்ள குறிப்பிடத்தக்க அம்சம் என்னவென்றால் அவை அந்த இராகத்தின் எடுப்புக்களைப் (ஆக்ஷிப்திகா) பல ஸ்வரங்களில் அமைத்து ஒலி ஓவியங்களாக தீட்டிக் காட்டியிருப்பது தான். பின் வரும் தோடி இராக க்ருதிகள் அவற்றின் பல்லவி அமைந்துள்ள எடுப்பு ஸ்வரங்களைக் காட்டும்.

| | |
|---|---|
| தாக்ஷாயணி | தைவதம் (மந்தரஸ்தாயி) |
| ஸ்ரீ ஸுப்ரமண்யோ | காந்தாரம் (மத்யஸ்தாயி) |
| மஹாகணபதிம் | மத்யமம் ,, |
| பாலயமாம் | பஞ்சமம் ,, |
| ராமச்சந்த்ராய | தைவதம் ,, |
| கமலாம்பிகே | நிஷாதம் ,, |

இந்த க்ருதிகள் இராகத்தின் வடிவத்தைப் பல கோணங்களில் நமக்குக் காட்டுகின்றன. அதே

நேரத்தில் அந்த இராகம் முழுமையானதாகவும் உள்ளது. ஒரு மனிதனைப் பல வகைப்பட்ட நிலைகளில் படம் எடுத்துக் காட்டுவதுபோல் அந்த இராகமும் காட்டப் பெற்றுள்ளது. இதே விதத்தில் தீக்ஷிதர் பைரவி, காம்போதி, சங்கராபரணம், கல்யாணி ஆகிய இராகங்களில் பல க்ருதிகளை இயற்றியிருக்கிறார். மேலும் ஸாவேரி, ஸஹானா, அடாணா, ராமக்ரிய (பந்துவராளி), கமகக்ரிய (பூர்வி கல்யாணி), ஸாரங்க போன்ற பிரபலமான இராகங்களிலும் பல க்ருதிகளைப் புனைந்திருக்கிறார். தீக்ஷிதர் மங்கள கைசிகி, கண்டா, கோபிகா வஸந்தம், நாராயண கௌள போன்ற பழைய இராகங்கள் பலவற்றையும் கையாண்டிருக்கிறார். இந்த இராகங்களின் லக்ஷணங்களைத் தெரிந்து கொள்ளுவதற்கு தீக்ஷிதர் அந்தந்த இராகங்களில் இயற்றியுள்ள கீர்த்தனைகளைக் கொண்டுதான் நாம் தெரிந்துகொள்ள முடியும். தீக்ஷிதர் மட்டுமே கையாண்டுள்ள பல இராகங்களும் உள்ளன. அவை: சாரங்க நாட, சாயா கௌள, பூர்வி பாடி, மாஹுரி, சுத்த வஸந்தா, குமுதக்ரிய, அம்ருத வர்ஷிணி போன்றவையாகும். த்விஜாவந்தி இராகத்தில் அமைந்த 'சேத ஸ்ரீ பாலகிருஷ்ணம்' என்ற க்ருதி தனிப்பட்ட பொலிவுடன் ஜ்வலிக்கிறது.

தீக்ஷிதர் விவாதி மேளங்களைக் கையாண்டுள்ள விதத்தைப் பற்றிச் சிறப்பாக நாம் குறிப்பிட வேண்டும். வேங்கடமகியின் 72 மேளராக முறை,

இராகாங்க இராகங்கள் ஒவ்வொன்றும் ஆரோகண அவரோகணங்களில் ஏழு ஸ்வரங்களையும் பூரண மாகக் கொண்டிருக்க வேண்டும் என்ற நியதியுடன் உருவாகியது. இராகாங்க இராகங்கள் என்பவை தற்காலம் மேள கர்த்தா என வழங்கப் பெறுகின்றன. விக்ருதி ஸ்வரங்களாகிய ரிஷபம், காந்தாரம், மத்யமம், தைவதம், நிஷாதம் ஆகிய ஐந்து ஸ்வரங்களின் பேதங்களை ஆதாரமாகக் கொண்டு 72 மேளங்களைக் கணக்கிட்டார் வேங்கடமகி. அவற்றையே அவர் இராகாங்க இராகங்கள் எனக் குறிப்பிட்டார். இந்த மேள அமைப்பில் ஒரே ஸ்வரத்தின் கோமள தீவ்ர வகைகள் வருவதை எடுத்துக் கொண்டார். ஆனால் பக்கத்தில் உள்ளதை விட்டு விட்டார். அந்த இராகங்களை அவர் மேள ராகங்கள் என்றே கருதி ஸ்வரத்தின் இரண்டு பேதங்களில் ஒன்றைக் கொடுத்து, பக்கத்து ஸ்வரத்தின் பெயரையும் அளித்து விட்டார். இவ்வாறாக ஒரு இராகத்தில் கோமள தீவ்ர ரிஷபங்கள் அமைந்து காந்தாரம் இல்லாமலிருந்தால் தீவ்ர ரிஷபத்தை சுத்த காந்தாரம் என்றார். அவ்வாறே காந்தாரத்தின் சாதாரண அந்தரம் ஆகிய இரண்டு வகைகளையும் எடுத்துக் கொண்டு ரிஷபம் இல்லாமலிருக்கும் பொழுது சாதாரண காந்தாரத்தை அவர் ஷட்ச்ருதி ரிஷபம் என்று அழைத்தார். இப்படியே ஸப்தஸ்வரங்களின் உத்தராங்கத்தில் ஒரு இராகத்தில் தைவதத்தின் இரண்டு வகைகளும் வந்திருந்து, நிஷாதம் வராமலிருந்தால் சதுச்ருதிதைவதத்தை சுத்த

நிஷாதம் என்றும், இருவகை நிஷாதங்களும் (கைசிகி--காகலி) அமைந்து தைவதம் ஒலிக்காமல் இருந்தால் கைசிகி நிஷாதத்தை ஷட்ச்ருதி தைவதம் என்றும் அழைத்தார். இத்தகைய விதத்தில் வகுக்கப் பெற்ற மேளங்கள் விவாதி மேளங்கள் என அழைக்கப் பெற்றன. அடுத்தடுத்த ஒலிகளைப் பெற்ற இரண்டு ஸ்வரங்கள் சேர்ந்து வரும்போது அவை இனிமை பயக்காததே இவ்வாறு விவாதி மேளங்கள் என அழைக்கப் பெற்றதற்குக் காரணம்.

வேங்கடமகியின் இந்த 72 மேள ராக முறையைப் பலர் குறை கூறினர். ஒரே ஸ்வரத்திற்கு இருவகைப்பட்ட பெயர்கள் கொடுப்பது ஒழுங்காகாது எனக் கூறினர். ஆனால் உண்மை என்னவெனில் இது வேங்கடமகியின் சொந்த அமைப்பன்று. அவருக்கு 300 வருஷங்களுக்கு முன்னதாகவே 'நாட' இராகம் ஷட்ச்ருதி ரிஷபத்தோடு ஒலிக்கும் ஒரு மேளமென்றும், வராளி இராகம் சுத்த காந்தாரத்தோடு அமைந்த ஒரு மேளமென்றும் வகுக்கப்பெற்றிருந்தன. இவை மிகப் பழைய இராகங்களன்றி கர்நாடக ஸங்கீதத்தில் 'கனராகங்கள்' என அழைக்கப்பெற்றுத் தனிப் பெருமையும் பெற்று விளங்குகின்றன. இவ்வாறு தர்க்க முறைப்படி அமைந்த முடிவினை வேங்கடமகி எடுத்துக்கொண்டார். மேலும் அவர் காலம் வரையில் அவை அவ்வாறே வழங்கப்பெற்று வந்தன. அதே நேரத்தில் ஒரு இராகம் கேட்ப

தற்கு இனிமையாகவும் சுகமாகவும் ஒலிக்க வேண்டும் என்னும் கொள்கையை நிலைவிற் கொண்டு வேங்கடமகி அவர்கள் மேள ராகங்களை அமைத்தார் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. அதற்கேற்ப அவர் சுகம் தராத பிரயோகங்களை எல்லாம் விலக்கிவிட்டு மேள ராகங்களை அமைத்தார். 'ஜாரு' போன்ற கமகங்களுடன் ஒலிக்கக் கூடிய நிலையில்தான் இராகங்கள் ஸம்பூர்ண நிலையை அடையும். இல்லை என்றால் வெவ்வேறு பட்ட ஸ்வரங்கள் வக்ர ஸஞ்சாரங்களைக்கொண்டு தான் இராகம் அமையும். உதாரணமாக முதல் மேளமாகிய கனகாம்பரியில் வேங்கடமகி. ஸரி மகரிஸ–பதஸ்நிதப என்னும் இரண்டு பிரயோகங் களைப் பயன்படுத்தி, ஸரிகமகரிஸ–பதநிஸ்நிதப –போன்றவற்றை விட்டுவிட்டார். வேங்கடமகி யின் காலத்திற்குப்பின் வந்த சாஸ்திர வல்லுனர் ஒருவர் விவாதி மேளங்களைக் கூட க்ரமஸம்பூர்ண மாக அமைக்கும் முறையை அறிமுகப்படுத்தி ராகங்களுக்கும் மேளங்களுக்கும் உள்ள பேதத் தைப் புரியாமற் செய்துவிட்டார். வேங்கடமகியோ சிறந்த வைணீக வித்வானாக இருந்த காரணத் தால் இத்தகைய குறைகள் வராமல் இருப்பதற்கு வழிகோலிக்கொண்டார். விவாதி மேளங்களில் புதியதொரு அமைப்பினைத் தோற்றுவிக்கும் பொழுதுகூட அவர், அவற்றின் உண்மை இயல் புகள் மறையாமல் பாதுகாக்கப்படும் விதத்தில் மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டு இராகங் களுக்கும் மேளங்களுக்கும் உள்ள வேறுபாட்டினை

நிலைநாட்டினார். முத்துஸ்வாமி தீக்ஷிதர் விவாதி மேளங்கள் உள்பட 72 மேளங்களிலும் க்ருதிகள் இயற்றி இருக்கிறார். வேங்கட மகியின் 72-வது மேளமாகிய 'ரஸமஞ்சரி' இராகத்தில் அமைத்துள்ள 'ச்ருங்கார ரஸமஞ்சரீம்' என்ற க்ருதியில் அவர் தேவியை '72 ராகாங்க ராகங்களில் இன்பம் காணுபவள்' என்று வர்ணித்திருக்கிறார்.* விவாதி மேளங்களைக் கையாளும்பொழுது தீக்ஷிதர் வேங்கடமகி காட்டிய வழியைச் சிறிதும் பிறழாமல் பின்பற்றி இன்னிசை தராத பிரயோகங்களை எல்லாம் விலக்கிவிட்டார். இதற்கு, கனகாம்பரி இராகத்தில் அமைந்த கனகாம்பரி காருண்யாம்ருதலஹரி (முதல் மேளம்); பேனத்யுதி இராகத்தில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திம் (2-வது மேளம்); கலாவதி இராகத்தில் அமைந்த 'கலாவதி கமலானயுவதி' (31-ஆம் மேளம்); வம்சாவதி இராகத்தில் அமைந்த 'பக்தவத்ஸலம்' (54-ஆம் மேளம்); ஆகியவற்றை உதாரணங்களாகக் கொள்ளலாம்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் வீணையுடன் இணைந்து தான் பாடுவது வழக்கம். அவர் வைணிகராகவும், வாய்ப் பாட்டு வித்வானாகவும் விளங்கினார். இதனை அவர் பைரவி இராகத்தில் இயற்றியுள்ள 'பால

---

* ச்ருங்கார ரஸ மஞ்சரீம் ஸ்ரீ காமாக்ஷீம் கௌரீம்
ச்ருதஜன கல்பவல்லரீம் சிந்தயேஹம்
த்விஸப்ததி ராகாங்கராக மோதினீம்.

வேங்கடமகி அவர்கள் தாம் வகுத்த மேளங்களை எல்லாம் ராகாங்க ராகங்கள் என்று அழைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

கோபால' என்னும் க்ருதியில் குறிப்பிட்டிருக்கிறார். அதில் வைணிக காயக வித்வானாகிய குருகுஹனால் புகழப்பெற்ற கடவுள் என்று கூறுகிறார். "வைணிக காயக குருகுஹநுத" என்பது அவர் அந்த க்ருதியில் அமைத்துள்ள சொற்றொடர். இவ்வாறு வீணையிலும் வாய்ப் பாட்டிலும் ஒருங்கே கொண்டிருந்த அவருடைய புலமையால் அவரது ஸங்கீதத்தில் தனிப்பட்ட விசேஷ அம்சங்கள் காண்கின்றன. அவருடைய கீர்த்தனைகள் விளம்ப காலத்தில் அமைந்து முடிவில் சில மத்யம கால ஸாஹித்தியங்களைக் கொண்டிருக்கும். வாய்ப் பாட்டு வித்வான்களுக்கு ஒருவகைப் பட்ட வேகத்தை கையாளுவது எளிது. அதே வேகத்தை ஒரு வாத்திய வித்வான் பின்பற்றுவது அத்தனை எளிதன்று. ஆனால் ஒரு இராகத்தின் அழகான அம்சங்களை விளம்ப காலத்தில்தான் நன்றாக விளக்கமுடியும் என்பதை மறுக்கமுடியாது. விளம்ப காலத்தில்தான் ஒரு இராகத்தின் எல்லா சாயைகளையும் அழகாகவும் பரிபூர்ணமாகவும் வெளிப்படுத்த முடியும். வேகமாகப் பாடினால் இராகங்களின் நுட்பமான சாயைகள் விடுபட்டுப் போகக்கூடும். அவ்வாறு பாடும் போது, அந்த இராகத்தைப் பற்றிய பொதுவான ரூபம்தான் வெளிப்படும். ஆனால் விளம்ப காலத்தில் பாடினால் இராகங்களின் உண்மையான முழு இயல்புகளையும் வெளிப்படுத்துவது சாத்தியமாகும். இந்தக் காரணத்தினால்தான் ஸங்கீத வித்வான்கள் பொதுவாக விளம்ப காலத்தையே,

இராக விளக்கத்திற்குப் பொருத்தமானதாகக் கருதி, இராக ஆலாபனைக்கு முக்கியத்துவம் கொடுத்தனர். விளம்ப காலத்தை மேற்கொண்டதால்தான் வீணையில் தீக்ஷிதர் சிறந்த தேர்ச்சி பெறமுடிந்தது. அதனுலேயே அவருடைய க்ருதிகளில் இராகபாவ வளம் நிறைந்துள்ளது.

தீக்ஷிதருடைய க்ருதிகளில் குறிப்பிடத் தக்க விசேஷமான மற்ருெரு அம்சம் அவற்றிலுள்ள கமகச் செறிவே ஆகும். பாட்டுக்களுக்கு கமகங்கள் அழகையும் பொலிவையும் தருகின்றன. கமகங்கள் பத்து முதல் பதினைந்து வகைப்படும் என்று சொல்லப்படுகிறது. அவை எல்லாவற்றையும் வீணையில்தான் எளிதாகக் கையாளமுடியும். உண்மையாகக் கூறினுல் வீணையில் கையாளுவதற்கென்றே பல கமகங்கள் தோற்றுவிக்கப் பெற்றுள்ளன. வீணையின் மூலமாகத்தான் சில இராகங்களின் நுட்பமான சாயைகளை நன்ருக வெளிப்படுத்த இயலும். வீணையில் வல்லவராக இருந்த காரணத்தினுல் தீக்ஷிதர் எல்லா வகைப்பட்ட கமகங்களையும் எளிதாகக் கையாளுவதில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். எனவே அவர் தம்முடைய க்ருதிகளில் அமைத்துள்ள கமகச் செல்வத்தினை, ஏனைய கர்நாடக ஸங்கீத ஸாஹித்தியக் கர்த்தாக்களின் படைப்புகள் எதிலும் நாம் காண இயலாது என்பதை யாரும் ஆக்ஷேபிக்க முடியாது.

பாட்டுக்களில் ஸங்கீதமும் ஸாஹித்தியமும் ஒரு

சேர ஒற்றுமையாக அமைந்திருக்கவேண்டும் என்பதில் தீக்ஷிதர் நோக்கம் கொண்டவராக இருந்தார். சில சமயங்களில், சில பாட்டுக்களைப் பாடும்பொழுது, அவற்றில் அமைந்துள்ள சொற்களின் உருவமே சிதைந்து ஒலிப்பதைக் காண்கிறோம். அவ்வாறு பாடும்பொழுது சிதைந்த சொற்களின் பொருள் வெளிப்படாமல் போய்விடுவது இயற்கை. அதாவது ஸங்கீதமும் ஸாஹித்தியமும் அந்தப் பாட்டில் சரியாகப் பொருந்தவில்லை என்பது கருத்து. ஆனால் தீக்ஷிதருடைய க்ருதிகளில் இந்த நிலையைக் காணமுடியாது. அவருடைய க்ருதிகளைப் பாடும்பொழுது சொற்கள் தெளிவாக முழு உருவங்களில் ஒலிக்கும். அதாவது அவருடைய க்ருதிகளில் ஸங்கீதம் ஸாஹித்தியத்தைச் சிதைத்து அவற்றின் அழகைக் கெடுப்பதில்லை. காளிதாஸ மஹா கவி தமது புகழ்பெற்ற சுலோகங்கள் ஒன்றில் பார்வதியும் பரமேச்வரனும் சொல்லையும் அதன் பொருளையும் போல ஐக்கியப்பட்டிருக்கிறார்கள் என்று கூறியுள்ளார்.* இந்தக் கருத்தினை உள்ளடக்கிக்கொண்டு தீக்ஷிதர் ஸாஹித்தியத்தையும் ஸங்கீதத்தையும் ஐக்கியப் படுத்தி க்ருதிகளை இயற்றியுள்ளார் என்றே சொல்லலாம். அவருடைய க்ருதிகளில் பார்வதி

* (ரகுவம்சம்) 1-17

வாகர்த்தா விவஸம்ப்ருக்தௌ
வாகர்த்த ப்ரதிபத்தயே
ஜகதஹ பிதரௌவந்தே
பார்வதீ பரமேச்வரௌ

யையும் பரமேச்வரனையும்போல சொற்களும் இசையும் இணைந்துள்ளன என்னலாம்.

காசியில் வசித்து வந்தபொழுது ஹிந்துஸ்தானி ஸங்கீதத்தில் தீக்ஷிதர் சிறந்த தேர்ச்சி பெற்றார் என்று முன்பே சொல்லப்பெற்றது. அதனால் ஹிந்துஸ்தானி ஸங்கீதத்திலிருந்து பல இராகங்களை கர்னாடக ஸங்கீதத்தோடு ஐக்கியப்படுத்தினார். அவ்வாறு ஐக்கியப் படுத்தும்போது அவற்றின் இயல்பும் சாயையும் மாருமல் இருக்கவும் செய்தார். இச்செயலுக்காக நாம் தீக்ஷிதருக்குப் பெரிதும் கடமைப்பட்டவர்கள் ஆவோம். இவை மட்டுமின்றி இராகங்களைக் கையாளுவதில் கூட ஹிந்துஸ்தானி ஸங்கீதத்தின் பிரதானமான சாயல் படிந்திருப்பதையும் நாம் நன்கு காணலாம். ஹிந்துஸ்தானி ஸங்கீதத்திற்கும் கர்னாடக ஸங்கீதத்திற்கும் கமகங்கள் பொதுவானவை. என்றாலும் ஹிந்துஸ்தானி ஸங்கீதம் 'ஜாரு' போன்ற கமகங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளது. தீக்ஷிதர் க்ருதிகளிலும் இவ்வகை கமகத்திற்கு முக்கியமான இடம் கொடுக்கப் பெற்றுள்ளது. விளம்பகால ஸங்கீதத்திற்குச் சில கமகங்கள் மிகப் பொருத்தமானவை என்று பொதுவாகச் சொல்லலாம். ஆகவே அத்தகைய விளம்பகால சங்கதிகளை ஹிந்துஸ்தானி ஸங்கீத இராக ஆலாபனையிலும், தீக்ஷிதரின் க்ருதிகளிலும் பெரிதும் இடம் பெற்றிருக்கும் என்று எதிர்பார்க்கலாம். ஹிந்துஸ்தானி ஸங்கீதத்தில் மிகுதியாக உள்ள

இதுபோன்ற கமகங்களை தீக்ஷிதர் விரும்பித் தமது க்ருதிகளில் அமைத்துக் கொண்டார்.

இனி தாளங்களைப்பற்றிச் சிறிது பார்ப்போம். இராகத்தைப் போலவே தாளமும் இந்திய ஸங்கீதத்திற்கு அடிப்படையானதும், விசேஷமானதுமாகும். "எவனொருவன் வீணை வாசிக்கக் கற்று ச்ருதிகளையும் தாளங்களையும் ஜதிகளையும் தெரிந்து கொண்டிருக்கிறானோ அவன் மோக்ஷப் பாதையில் செல்லுகின்றான்" என்று யாக்ஞவால்க்யர் என்ற மஹரிஷி கூறுகிறார். இக்கருத்து எல்லோரும் ஏற்றுக்கொண்ட ஒன்றாகும். ஹிந்துஸ்தானி, கர்னாடக ஸங்கீதங்களில் தாளம் முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது. கர்னாடக ஸங்கீதத்திலுள்ள தாள முறையின் நுட்பங்களை எல்லாம் இங்கு விளக்கத் தேவை இல்லை. பெரிய ஸாஹித்திய கர்த்தாக்கள் எல்லோருமே தம்முடைய க்ருதிகளில் தாளத்திற்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள் என்று கூறுவதே போதுமானது. தீக்ஷிதர் சூளாதி ஸப்த தாளங்களின் அடிப்படையில் நவக்ரஹ க்ருதிகளை இயற்றியுள்ளார். இதைப் பற்றி முன்பே குறிப்பிடப் பெற்றுள்ளது.

## 8

# ஸாஹித்தியமும் அதன் உள்ளுறைகளும்

தீக்ஷிதரின் க்ருதிகளில் பெரும்பாலானவை ஸம்ஸ்க்ருதத்தில் அமைந்தவை. சில க்ருதிகள் தமிழும் ஸம்ஸ்க்ருதமும் ஏனைய மொழிகளும் கலந்த மணிப்ரவாள நடையில் உள்ளன. காவியங்கள், அலங்காரங்கள், வியாகர்ணம் ஆகியவற்றை யெல்லாம் கற்று ஸம்ஸ்க்ருதத்தில் தீக்ஷிதர் பெரும் புலமை பெற்றவர். அவருக்கு நல்ல தெலுங்கு மொழிப் பயிற்சியும் இருந்தது. தம்முடைய கர்நாடக சாஸ்த்ரீய ஸங்கீத உருப்படிகளில் அவர் தெலுங்குச் சொற்களை தாராளமாகக் கையாண்டிருக்கிறார். அவருடைய தாய் மொழி தமிழ். எனவே தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்க்ருதம் ஆகிய இந்த மொழிகளை எல்லாம் தம்முடைய ஸாஹித்தியங்களில் பயன்படுத்தி இருக்கிறார். ஆனால் அவருடைய க்ருதிகளில் பிரதான இடம் பெற்றிருப்பது ஸம்ஸ்க்ருதமே ஆகும். இதற்குப் பல காரணங்கள் உள்ளன. ஒவ்வொரு மொழிக்கும் தனிப்பட்ட சில இயல்புகள் உண்டு. தமிழுக்கு, தன்னுடைய உணர்ச்சிகளை எல்லாம் கட்டுத் தடங்கல் இல்லாமல் வெளிப்படுத்துவதற்கு, தமிழைக் காட்டிலும் வேறு மொழி இருக்க முடியாது. தெலுங்கு மொழி மிக மென்மையும் இனிமையும் வாய்ந்தது. அதனால் அந்த மொழி

"கிழக்கு நாடுகளின் இதாலிய மொழி" என்று பொருத்தமாகக் கூறப்படுகிறது. அதனால் தான் கர்னாடக ஸங்கீதத்தில் தெலுங்கு மொழி பெருமள வில் கையாளப் பெற்றுள்ளது. ஸம்ஸ்க்ருதமோ ஒலி நுட்பச் செறிவு அமைந்தது. கணீரென ஒலிப்பதிலும் கம்பீரத்திலும் பெயர் பெற்றது ஸம்ஸ்க்ருத மொழி. தீக்ஷிதருடைய க்ருதிகளில் உணர்ச்சிகளைக் காட்டிலும் இராக ஸஞ்சாரங் களின் நுட்பமான அழகே முதலிடம் பெற்றுள்ளது. அதனால் தான் தீக்ஷிதர் ஸங்கீதத்தின் விசேஷ அம்சங்களைப் புலப்படுத்தும் சாதனமாக ஸம்ஸ் க்ருதத்தைப் பயன்படுத்தினர் எனக் கூறுவது பொருத்தமாகும். தீக்ஷிதர் க்ருதிகளின் இராக அமைப்பு தெளிவாகவும் அழகாகவும் கவர்ச்சிகர மாகவும் அமைந்துள்ளன என்றால் அதற்குக் காரணம், அந்தந்த இராகங்களில் அமைந்த ஸாஹித்தியங்களில் கணீரென ஒலிக்கும் பல சொற்களைப் பயன்படுத்தி இருப்பதேயாகும்.

தீக்ஷிதர் தம்முடைய ஸாஹித்தியங்களை ஸம்ஸ் க்ருதத்தில் அமைத்ததற்கு மற்றொரு காரணமும் உண்டு. அவருடைய பாட்டுக்களெல்லாம் தேவ தைகளைப் பற்றியே அமைந்துள்ளன. அவை நாமா வளிகளாகவும், ஸ்தோத்திரங்களாகவும் அமைந்து ஸாஹித்திய அமைப்பிற்கு ஏற்ற சொற்களாகவும் அமைந்திருந்தன. நாமாவளிகளும் ஸ்தோத்தி ரங்களும் ஸம்ஸ்க்ருத மொழியிலேயே உள்ள காரணத்தால் தீக்ஷிதர் அவற்றைத் தாராளமாகக்

கையாண்டார். இதற்குச் சில உதாரணங்கள் காட்டுவோம். 'கஞ்சதளாயதாக்ஷி' என்ற க்ருதி யில் 'ஏகானேகாக்ஷரி' என்ற சொல் 'ஏகானேகா க்ஷரக்ரிதி' என்னும் த்ருசதி அர்ச்சனையிலிருந்து எடுக்கப் பெற்றது. 'காதம்பரிப்ரியாயை' என்ற க்ருதியில் வரும் 'ஷடாக்ஷரப்ரவர்த்திகாயை' என்னும் வர்ணனை ஸஹஸ்ர நாமத்திலிருந்து சிறிதும் மாற்றமில்லாமல் எடுத்துக்கொள்ளப் பெற்றது. 'வீணா புஸ்தகதாரிணீம்' என்ற க்ருதி யில் 'ஜடா ஜூட மகுடம்' என்னும் தொடரும், 'மகிஷாஸுர மர்த்தனீம்' என்னும் க்ருதியி லுள்ள 'ப்ரணதஜன ஸௌபாக்ய ஜனனீம்' என்னும் தொடரும், ஆனந்த லஹரியிலிருந்து எடுத்துக் கொள்ளப் பெற்றவை. கௌரி இராகத் திலுள்ள 'கௌரி கிரி ராஜகுமாரி' என்னும் க்ருதி யில் அமைந்த மத்யமகால ஸாஹித்தியம் ஆனந்த லஹரியிலுள்ள 'ஸுதாஸிந்தோர் மத்யை' என் னும் சுலோகத்தின் பிரதி ஒலியே ஆகும்.

தீக்ஷிதர் அத்வைத வேதாந்தியாக விளங்கினார் என்று முன்பே சொல்லப் பெற்றது. எனவே அவருடைய கோட்பாட்டில் கடவுளைப் பற்றிய ஸகுண-நிர்க்குணக் கொள்கைகள் இரண்டுக்கும் இடமிருந்தது. கடவுளைப் பலவிதமான உருவங் களில் பற்பல பெயர்களை அமைத்து வழிபடு வதற்கு முக்கியத்துவம் கொடுத்திருந்ததோடு தீக்ஷிதர் அவையாவும் பரப்ரம்மத்தின் தோற்றங் களே என்று திட்டவட்டமாகக் கூறியுள்ளார்.

பெயர்களுக்கும் உருவங்களுக்கும் அப்பாற்பட்ட ஒன்றே பரப்ரம்மம் என்பது அவருடைய கருத்து. ஸ்தோத்திர இலக்கியத்திலிருந்து ஸகுண வர்ணனைகளை அவர் பெரும்பாலும் எடுத்துக் கொண்டிருந்தாலும் அத்வைதத்தின் தத்துவக் கொள்கைகளை வெளிப்படுத்துவதற்கு அவர் வேதாந்த இலக்கியத்தையே பின்பற்றினர். அவ ருடைய க்ருதிகளிலிருந்து வேதாந்த இலக்கியத் தில் அவருக்கு இருந்த ஆழ்ந்த அறிவு நன்கு புலப்படும். 'த்யாகராஜா தன்யம்' என்ற க்ருதி யில் அமைந்துள்ள கடவுள் வர்ணனைகள் யாவும் பரமாத்மாவைப் பற்றியதே. "பரமாத்மா மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டவர். ஸத்ய, ஞான, ஆனந்த ரூபத்துடன் அவர் விளங்குகிறர். மக்களின் மனத்திலுள்ள த்வைத, அத்வைத கொள்கைகளின் மாறுபாடுகளை எல்லாம் மாற்று பவர்"* என்று அந்த க்ருதியில் தீக்ஷிதர் குறிப் பிட்டுள்ளார். தீக்ஷிதர் தம்முடைய குருகுஹக் கீர்த்தனை ஒன்றில், கடவுளை, ஜீவனின் ஒருமை யைத் தன்னிடத்தே கொண்டு விளங்குபவர் என்று வர்ணிக்கிறர். மேலும் அவர் 'ஜஹத ஜகலக்ஷணை' என்பதை அடிப்படையாகவும் காண்பிக்கிறர். † வேதாந்த மீமாம்சங்களில்

* ஸத்வ ரஜஸ்தமோ குணாதீத
ஸத்யக்ஞானாநந்த ரூபிணீ
த்வித்வாதி பேதவர்த்தன-பர
மாத்வைத ஸ்வாத்மானந்தரூபிணி

† ஜஹத ஜகலக்ஷணயா ஜீவப்பரமாத்மன ஹ

இவருக்கிருந்த மிக உயர்ந்த புலமையை இதிலிருந்து நாம் நன்கு அறியலாம்.

தந்த்ர முறைப்படி தேவியை வழிபாடு செய்தல் இவருடைய க்ருதிகளில் சிறந்த இடம் பெற்றுள்ளது. நவாவரணக் கீர்த்தனைகள் அவ்வாறு தோன்றியவையே. தந்த்ரங்கள் எல்லாம் ஸம்ஸ்க்ருதத்திலேயே இருக்கின்ற காரணத்தால், அவற்றைக் கொண்ட ஸாஹித்தியங்களும் ஸம்ஸ்க்ருதத்தில் அமைந்திருப்பதுதானே பொருத்தமாகும். இதனால் தீக்ஷிதர் ஸம்ஸ்க்ருதத்திற்கு பிராதான்யம் கொடுத்திருப்பதற்குக் காரணம் நன்கு விளங்கும். தீக்ஷிதர், மக்கள் எல்லாரும் ஸங்கீதத்தை அனுபவிக்கவேண்டும் என்றும், அதே சமயத்தில் அவற்றின் உள்ளுறை ஸ்தோத்திரங்களாகவும் வேதாந்தக் கருத்துக்களாகவும் அமைய வேண்டும் என்றும் விரும்பினர். ஆகவேதான் அவர் ஸம்ஸ்க்ருதத்திலுள்ள ஸ்தோத்திரங்களும், வேதாந்தங்களும், தந்த்ரங்களும் அமைந்திருந்த ஸம்ஸ்க்ருதத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தார்.

தீக்ஷிதருடைய க்ருதிகளில் கவிதைச் சிறப்பு இல்லை என்று சிலர் குறைகூறுவதுண்டு. செய்யுட்களின் நோக்கத்தையும், ஸங்கீதத்தின் நோக்கத்தையும் தவருகப் புரிந்துகொண்டதனுலேயே இவ்வாறு கூறுகிருர்கள். மனிதனைப்பற்றியும், உலகச் சூழ்நிலைபற்றியும், உலகத்தில் நடக்கும் நிகழ்ச்சிகள்பற்றியும் படம்பிடித்துக் காட்டுவது

தான் செய்யுட்களின் நோக்கம். பொருட்சுவை மிகுந்த சொற்களைக் கொண்டு அவ்வாறு படம் பிடித்துக் காட்டிவிடலாம். ஆகவே செய்யுளில் பொருள்தான் முக்கியமானது. சாஸ்த்ரீய ஸங்கீதத்தின் ஒலிச் சிறப்பினைப் புலப்படுத்துவதற்காகவே சொற்கள் பயன்படுத்தப்பெறுகின்றன. ஸங்கீதத்திற்குப் பொருத்தமில்லாத, ஆனால் நல்ல செய்யுட்கள் உள்ளன. அதேபோல நல்ல செய்யுட்களுக்குப் பொருந்தாத ஸங்கீதமும் உண்டு. ஸங்கீத ஸாஹித்திய கர்த்தா சிறந்த கவிஞராகவும் விளங்கினால் அவருடைய ஸாஹித்தியங்களில் ஸங்கீத அம்சமும், கவிதையம்சமும் நன்கு பொருந்தி இருக்கும். ஆனால் சிறந்த செய்யுளாக இல்லாத காரணத்தினால் ஒரு ஸாஹித்தியம் தன்னுடைய இசையழகையும், இசைப் பண்பினையும் இழந்துவிடுவது இல்லை.

தீக்ஷிதருடைய ஸாஹித்தியங்களில் இலக்கண தோஷங்கள் உள்ளன என்று ஒரு சாரார் கூறுகின்றனர். ஸாஹித்தியங்களில் சொற்களின் ஒலிக்கும் அவற்றை அமைக்கவேண்டிய இலக்கணத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்கவேண்டும் என்பதை நாம் நினைவிற்கொள்ளுவது நல்லதுதான். ஆனாலும் ஸங்கீதத்தின் இன்னிசை அமைப்புக்கு ஏற்றவாறு இலக்கணங்களை ஓரளவு தளர்த்திக்கொள்ளும் உரிமை ஸாஹித்திய கர்த்தாக்களுக்கு உண்டு. பெரிய ஸங்கீத கர்த்தாக்கள் ஸங்கீத அமைப்புக்காக இலக்கண வரம்பை ஆங்

காங்கு மீறியிருக்கின்றனர். முத்துஸ்வாமி தீக்ஷிதர் வியாகரண இலக்கணமாகிய கௌமுதியைப் படித்திருக்கிறார். அவருடைய விபக்தி க்ருதிகள் அவருக்கு ஸம்ஸ்க்ருதத்திலிருந்த பூரண பாண்டித்தியத்தை நன்கு புலப்படுத்தும். ஆனாலும் ஏனைய ஸங்கீத ஸாஹித்திய கர்த்தாக்களைப் போலவே தேவையானபொழுது தீக்ஷிதர் இலக்கண வரம்பை மீறியிருக்கிறார். என்றாலும் இவ்வாறு மீறி உள்ள இடங்கள் மிகச்சிலவே ஆகும். இதனை நாம் பெரிய குற்றமாகப் பாராட்டுவது கூடாது. தீக்ஷிதர் க்ருதிகளின் ஒலிச் சிறப்பிற்கு எத்தனை முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார் என்பது அவரது க்ருதிகளில் உபயோகித்துள்ள பலவித அலங்காரங்களிலிருந்து நன்கு தெரியும். சாஸ்த்ரீய ஸாஹித்திய கர்த்தாக்கள் எல்லோரும் ப்ராஸம் அநுப்ராஸம் ஆகியவற்றைப் பயன்படுத்துவது வழக்கம். அவற்றையும் பயன்படுத்தி உள்ளதோடு தீக்ஷிதர் 'கோபுச்ச-ஸ்ரோதோவஹ' என்னும் அலங்காரங்களை விசேஷமாகக் கையாண்டிருக்கிறார். இவ்வகை அலங்காரங்களை ஸாஹித்தியங்களில் கையாண்டிருப்பவர் தீக்ஷிதர் ஒருவரே ஆவர். கோபுச்ச யதியில் அசைகள் சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டேவரும். ஸ்ரோதோவஹ யதியிலோ சொற்கள் சிறிது சிறிதாகக் கூடிக்கொண்டேவரும். 'த்யாகராஜயோக வைபவம்' என்னும் ஆனந்தபைரவி இராக க்ருதியில் இந்த இரண்டு அலங்காரங்களையும் காணலாம்.

க்ருதியின் பல்லவி பின்வருமாறு அமைந்துள்ளது:

த்யாகராஜயோக வைபவம் — அகராஜயோக வைபவம் — ராஜயோக வைபவம் — யோக வைபவம் — வைபவம் — பவம் — வம்.

இதுவே கோபுச்ச அலங்காரம். இதே க்ருதியின் சரணத்தில் பின்வருமாறு ச்ரோதோவஹ அலங்காரம் அமைந்துள்ளது:

சம் — ப்ரகாசம் — ஸ்வரூப ப்ரகாசம் — தத்வ ஸ்வரூப ப்ரகாசம் — ஸகல தத்வஸ்வரூபப்ரகாசம் — சிவசக்த்யாதி ஸகல தத்வஸ்வரூபப்ரகாசம்.

இந்த அலங்கார அமைப்பில் கடல் அலைகள் பொங்கிவருவதும் வடிந்துசெல்லுவதும் போன்ற ஏற்ற இறக்கங்கள் உள்ளன. இதுபோன்ற அலங்காரங்கள் தீக்ஷிதரின் 'ஸ்ரீ வரலக்ஷ்மி' என்ற ஸ்ரீ ராக க்ருதியிலும், 'மாயே' என்ற தரங்கிணி இராக க்ருதியிலும் அமைந்திருப்பதைக் காணலாம்.

க்ருதிகளில் அமைந்துள்ள ஸாஹித்தியங்களைப் பற்றி முன்பே பல இடங்களில் குறிப்பிட்டிருக்கிறோம். அவருடைய க்ருதிகளைக் குறிப்பிடும் பொழுதெல்லாம் அவற்றின் ஸாஹித்தியச் சிறப்புக்களைப் பற்றியே கூறப்பெற்றுள்ளது. அவ்வாறு பல இடங்களில் கூறியவற்றின் சுருக்கம் பின்வருமாறு:

தீக்ஷிதருடைய க்ருதிகளெல்லாம் பெரும்பாலும் தெய்வங்களைப்பற்றிப் புகழ்வனவே. நமது பாரத

நாடு முழுவதிலுமுள்ள கோயில்களில் எழுந்தருளி யுள்ள எல்லா மூர்த்திகள் பேரிலும் க்ருதிகள் இயற்றியிருக்கிருர். அவற்றில் அந்தந்த ஊர்களில் வழங்கும் கர்ண பரம்பரைக் கதைகளும் நிகழ்ச்சி களும் நன்கு கூறப்பெற்றுள்ளன. தந்த்ரீக முறை யில் தேவியை வழிபடும் மார்க்கத்தை அவ ருடைய க்ருதிகளில் சில விளக்குகின்றன. குறிப் பிட்ட விசேஷ நாட்களில் பாடத் தகுந்த க்ருதி களையும் இயற்றியுள்ளார். உதாரணமாக ஷண்முக ப்ரிய என வழங்கப்பெறும் 'சாமரம்' என்னும் இராகத்தில் அமைந்துள்ள 'ஸித்தி விநாயகம்' என்ற க்ருதி விநாயக சதுர்த்தி அன்று கணேசப் பெருமானை வழிபடுவதற்காக இயற்றப்பெற்றது. சிரவண மாதத்தில் வரும் வரலக்ஷ்மி பூஜையன்று பாடுவதற்கென்றே ஸ்ரீ ராகத்தில் லக்ஷ்மி தேவி பேரில் 'ஸ்ரீ வரலக்ஷ்மி' என்ற க்ருதி இயற்றப் பெற்றுள்ளது.

ஒருவர் மோக்ஷத்தை அடைவதற்கு கர்ம, பக்தி, ஞான மார்க்கங்களை நம்முடைய சாஸ்தி ரங்கள் வகுத்துள்ளன. அந்த மூன்று மார்க்கங் களுக்கும் நம்முடைய வாழ்க்கையில் இடம் உண்டு. இது முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய வாழ்க்கையிலிருந்தே நன்கு வெளிப்படும். அவர் தமது இறுதிக் காலம் வரை தினந்தோறும் பூஜை செய்து வந்தார். இவ்வாறு செய்ததனுல் அவரு டைய மனம் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் கொண்டு கடவுளைப் பற்றியே சிந்தித்துக் கொண்

டிருந்தது. அவர் ஒரு சிறந்த பக்தர். கோயி லுக்குக் கோயில் செல்லுவதையும் ஆங்காங்கு உள்ள மூர்த்திகளைப் போற்றிப் பாடுவதையும் அவர் தம் வாழ்க்கை முழுவதும் வழக்கமாகக் கொண்டிருந்தார். இதற்காகவே அவர் ஸ்தல யாத்திரை செய்து கொண்டே இருந்தார். உப நிஷதக் கருத்துக்களுக்கு ஏற்றவாறு வாழ்ந்த வேதாந்தி அவர். உலகின் எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் பரப்ரம்மம் கலந்து இருப்பது அவரது மனக் கண்ணில் தோன்றிக் கொண்டே இருந்தது. ஸ்ரீ சங்கராசாரியாரால் பரப்பப்பெற்ற வேதாந்தக் கொள்கைகளுக்கேற்ப அவர் வாழ்ந்தார். பிரபஞ்ச முழுவதும் மாயை யின் தோற்றமே என்றும் அவர் கருதினார். பிரபஞ் சம் ஒரு கானல் நீர் என்றும் அவர் தெளிந் தார். ஒருவன் கடவுளை உணர்வதற்கு, தன்னு டைய விவேகத்தினால் மாயையை வெல்ல வேண் டும் என்பதே தீக்ஷிதரின் கருத்து. தரங்கிணி இராகத்தில் தீக்ஷிதர் தாம் புனைந்துள்ள கீர்த்தனை யில் “மாயையே! என்னை விட்டுவிடு! என்னைத் துன்புறுத்துவதற்கு நீ யார்” என்று வினவி இருக் கிறார். தீக்ஷிதர் உண்மையான உயர்ந்ததோர் ஞானி என்பதில் ஐயமில்லை.

தீக்ஷிதர் ஒரு புண்ணிய புருஷர். அவர் சிறந்த நாதோபாஸகர். இராகங்களின் நுட்பமான அழ கில் லயித்து மோக்ஷ இன்பம் கண்டார். கர்னா டக ஸங்கீத முறையிலும், ஹிந்துஸ்தானி ஸங்கீத

முறையிலும் உள்ள இராகங்களில் அமைந்துள்ள அவருடைய க்ருதிகள் தனிச் சிறப்பு உடையன. அவர் தம்முடைய க்ருதிகளை ஸம்ஸ்க்ருதத்தில் இயற்றியிருப்பதால் அகில இந்திய ஸாஹித்திய கர்த்தா என்ற புகழை எய்தியவர். ஸம்ஸ்க்ருதம் இந்தியாவின் கலாசார மொழி. ஆதலால் அந்த மொழியை தீக்ஷிதர் விசேஷமாகப் பின்பற்றினர் போலும். வருகிற 1975-ஆம் ஆண்டு, பல்குண மாதத்தில் அவருடைய 200-வது ஆண்டு பிறந்த தின விழா நடைபெற வேண்டும். அவ்விழா வினைச் சிறப்பாகக் கொண்டாடுவது நம்முடைய கடமையாகும். இந்தியப் பண்பாட்டை நன்கு எடுத்துக் காட்டியவரும், தெய்வத் தன்மை வாய்ந்த ஸங்கீத ஸாஹித்திய கர்த்தாவுமாகிய ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரைப் பெருமைப் படுத்துவது கலைஞர்களின் தலை சிறந்த கடமையாகும். அக்கடமையை அவருடைய 200-வது ஆண்டு பிறந்த தின விழாவன்று நல்ல முறையில் நிறைவேற்றுவோமாக.

## தேர்ந்தெடுக்கப்பெற்ற சில க்ருதிகள்

முத்துஸ்வாமி தீக்ஷிதர் வேதம், வேதாந்தம், யோகம், மந்த்ர சாஸ்த்ரம், ஜோஸ்யம், ஆகமம் முதலிய பல துறைகளிலும் பெற்றிருந்த ஆழ்ந்த அறிவு அவருடைய க்ருதிகளில் ப்ரதிபலிக்கக் காணலாம். இதைப் படிப்பவர்களுக்கு தீக்ஷிதர் மேற்கூறிய பல துறைகளிலும் பெற்றிருந்த பரந்த ஞானத்தை ஓரளவாவது அறிந்து கொள்ளுவதற்காக, வெவ்வேறு வகைப்பட்ட சில க்ருதிகளையும் அவற்றின் தமிழ் மொழி பெயர்ப்பும் இந்த அத்யாயத்தில் கொடுக்கப் பெற்றிருக்கிறது. இம்மொழி பெயர்ப்பின் நோக்கம் க்ருதிகளின் வார்த்தைக்கு வார்த்தை பொருள் கூறுவது அல்ல. க்ருதிகளின் உண்மையான உட்பொருளைக் கூறுவதே இதன் நோக்கம்.

### 1

கீழே காணப்பெறும் முதல் க்ருதி விக்னேச்வரராகிய கணபதியைப் போற்றுவதாக அமைந்தது. முத்துஸ்வாமி தீக்ஷிதர் கணபதி சம்பந்தமான ஆகமங்களை நன்கு அறிந்தவர். சுமார் இருபது க்ருதிகளுக்குமேல் கணபதி பேரில் தீக்ஷிதர் இயற்றி இருக்கிறார். வேதாந்தத்திலும் யோகத்திலும் தீக்ஷிதரின் ஆழ்ந்த ஞானத்தை இந்த க்ருதியில் காணலாம்.

ஸ்ரீராகம் ஆதிதாளம்

பல்லவி

ஸ்ரீ மூலாதார சக்ர விநாயக
அமூல்ய வரப்ரதாயக

அநுபல்லவி

மூலக்ஞான சோக விநாசக
மூலகந்த முக்திப்ரதாயக

சரணம்

ஸபலீக்ருத தேவாதிதேவ சபலீக்ருத
ஸர்வக்ஞஸ்வபாவ
ப்ரகடீக்ருத வைகரீஸ்வபாவ பராபவ
ப்ரஸித்த கஜக்ரீவ
விகட ஷட்சத ஸ்வாசாதிகார விசித்ராகார
பக்தோபகார
அகளங்க விபாஸ்வர விக்னேச்வர ஹரகுருகுஹ
ஸோதர லம்போதர

மொழி பெயர்ப்பு

மூலாதாரச் சக்கரத்தில் அமர்ந்திருக்கும் ஓ விநாயகரே வருக.* விலை மதிக்க வொண்ணாத

* தந்த்ர சாஸ்திரத்திற்கிணங்க, மனித சரீரத்தில் ஆறு சக்கரங்கள் உண்டு. அவை மூலாதாரம், மணிபூரகம், ச்வாதிஷ்டானம், அனாஹதம், விஷுத்தி, ஆஜ்ஞா ஆகியவை. இவற்றில் கணேசர் மூலாதார சக்கரத்தை ஆதாரமாக விமர்சிக்கப்பெறுகிறது.

வரங்களைத் தருகிறீர். இந்த ஜகத்துக்கெல்லாம் மூலகாரணமானவர் நீர். உம்மைத் துதிப்பவர்களை அரித்துத் தின்கிற அஞ்ஞானத்தையும் † அவர்களது துக்கத்தையும் அகற்றி மோக்ஷம் அளிப்பவர் நீர். எல்லாத் தெய்வங்களின் ஒருமை உருவானவர் நீர். நீர் சர்வ வியாபி. பிரத்தியக்ஷமான தெய்வம் நீர். வைகரி ‡ ஒலியில் விளங்குபவர் நீர். ஓ விகடரே! மூச்சின் எண்ணிக்கை அறுநூற்றை அடக்கி § ஆளுபவர் நீர். ஓ பிரபலமான யானைமுகக் கடவுளே! உம்முடைய ரூபம் ஆச்சரியகரமானது. உம்முடைய பக்தர்களுக்குப் பலன்களை அருள்கிறீர். ஓ விக்னேச்வரரே! தூய்மையான பிரகாசம் உடையவர் நீர். ஓ லம்போதரரே! குருகுஹனின் சகோதரர் நீர்.

## 2

திருத்தணியில் முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய குருகுஹ கீர்த்தனைகளில் ஒன்ருகவும், மிகவும் பிரபலமானதாகவும் விளங்குவது இந்த க்ருதி. இதில் பொதிந்துள்ள வேதாந்தக் கருத்துக்கள் கவனிப்பதற்கு உரியன.

---

† இது வேதாந்தத்தின் அஜ்ஞதி — அவித்யா.

‡ சப்தம் நான்குவகையாக வகுக்கப்பெற்றுள்ளது. அவை பரா, பச்யந்தி, வைகரி, மத்யம. இவற்றுள் வைகரி என்பது பேச்சோடு இணைந்த பொருளின் ஒலியாகும்.

§ மூலாதார சக்கரத்திற்குரிய மூச்சின் எண்ணிக்கை இது.

இராகம்: ஆனந்தபைரவி தாளம்: ரூபகம்

பல்லவி

மானஸ குருகுஹ ரூபம் பஜரேரே
மாயாமய ஹ்ருத்தாபம் த்யஜரேரே

அனுபல்லவி

மானவ ஜன்மனி ஸம்ப்ராப்தேஸதி
பரமாத்மனி நிரதிசய ஸுகம்வ்ரஜரேரே

சரணம்

ஸத்வகுணோபாதி ஸஹித ஸதாசிவம்
ஸ்வாவித்யா ஸமேத ஜீவோத்பவம்
தத்வம் தாமஸயுத விச்வவைபவம்
தாரகேச்வரம் ஆனந்த பைரவம்
நத்வா ஸ்ரீ குருசரணம் க்ருத்வா நாமஸ்மரணம்
ஜித்வா மோஹரி வரணம் மத்வாததேஹ சரணம்

மொழிபெயர்ப்பு

ஓ மனமே! குருகுஹனின் ரூபத்தை தியானம் செய். மாயையால் ஏற்படும் துன்பங்களைக் களைந்தெறி. மனிதப் பிறப்பு பெற்றபலனை, பரப்ரம்மத்தின் அருளால் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடையும் வழியைத்தேடு. ஸத்வ குணத்தின் * உருவ

* உலகில் உயிர்வாழும் ஜீவன்களிலெல்லாம் இயற்கையாக ஏற்பட்டுள்ள தன்மைகளே குணம் என்பதாகும். இவை ஸத்வகுணம் (பரிசுத்தமும்-நன்மையும்) ரஜோகுணம் (சக்தியும் செயலும்) தமோகுணம் (இருட்டும் சோர்வும்).

மாகிய இறைவன் ஸதாசிவனே குருகுஹன். சகல உலகங்களிலும் உயிர்வாழும் ஜீவன்களெல்லாம் அவித்யையின் மோதுதலால் வந்தவை. இந்த அண்ட சராசரங்கள் எல்லாம் தாமஸ குணத்தினல் அவனுடைய பெருமைமிக்க அவதார காரணத்தால் ஏற்பட்டவை. அவர் மோக்ஷ சாம்ராஜ்ய மளிக்கும் ஆனந்தபைரவர். அவர்முன் சாஷ்டாங்க நமஸ்காரம்செய். அவனுடைய நாமத்தையே உருப்போட்டு ஜபம் செய்துகொண்டிரு. கானல் நீர் போன்ற உலகின் மாயைகளைக் களைந்து அவனையே தஞ்சமாக அடைந்துவிடு.

3

இந்தப்பக்கத்தில் கொடுக்கப்பெற்றுள்ளது தீக்ஷிதர் இயற்றியுள்ள நவாவரணக் கீர்த்தனை களில் ஒன்று. தேவி வழிபாட்டில் தந்த்ரங்கள் முக்கியமான மார்க்கத்தைக் காட்டுவனவாகும். இந்த அடிப்படையில் தீக்ஷிதர் பதினெரு கீர்த்தனைகளை தேவி கமலாம்பாள் பேரில் இயற்றி யுள்ளார். தந்த்ர சாஸ்திரத்திலும் தீக்ஷிதர் கொண்டிருந்த விசேஷ பாண்டித்தியத்தை இந்த க்ருதியில் நன்கு காணலாம்.

இராகம்: சங்கராபரணம் தாளம்: ரூபகம்

பல்லவி

ஸ்ரீ கமலாம்பிகயா கடாக்ஷிதோஹம்
ஸச்சிதானந்த பரிபூர்ணப்ரஹ்மாஸ்மி

### அநுபல்லவி

பாக சாஸஞுதி ஸகலதேவ வதாஸேவிதயா
பங்கஜாஸஞுதி பஞ்சக்ருத்ய க்ருத்பாவிதயா
சோகஹர சதுரபதயா மூகமுக்ய வாக்ப்ரதயா
கோகனத விஜயபதயா குருகுஹ தத்வோபதயா

### சரணம்

அனங்ககுஸு மாத்யஷ்ட சக்த்யாகாரய
அருணவர்ண ஸம்க்ஷோபண சக்ராகாரய
அனந்த கோட்யண்ட நாயகசங்கர நாயிகயா
அஷ்டவர்க்காத்மக குப்ததரயா வரயா
அனங்காத்யுபாஸித அஷ்டதளாப்ஜஸ்திதயா
தனுர்பாண தரகரயா தயாஸுதா ஸாகரயா

## மொழிபெயர்ப்பு

ஸ்ரீ கமலாம்பாள் அவளது அருட்பார்வையை என்மீது வீசி இருக்கிருள். நான் பூரணமான மோக்ஷ சாம்ராஜ்யத்தைப் பெற்ற ப்ரம்மமாக விளங்குகிறேன். இந்திரனும் தேவர்களும் அம்பிகைக்கு ஏவல் புரிகின்றனர். ப்ரம்மாவும் மற்ற தேவர்களும் அவளைத் தியானம் செய்து கொண்டு பஞ்ச கிருத்தியங்களையும் * செய்கிருர் கள். மூங்கைக் கவியான மூகனுக்குப் பேசும் சக்தியை அருளிஞள். அவளுடைய பாதங்கள்

* ஆகம சாஸ்திரங்களின்படி தெய்வங்களின் தொழில்கள் ஐந்துவகைப் படும். அவை: ச்ருஷ்டி (ஆக்கல்), ஸ்திதி (ஆதரித்தல்), லயம் (அழித்தல்), திரோதானம் (நீக்குதல்), அனுக்ரஹம் (அருளுதல்)

நீலத்தாமரை போன்றவை. குருகுஹனால் போதிக்கப்பெற்ற மஹாகாவியமான 'தத்வமஸி' யின் ரூபமே அவள். அனங்ககுஸும ** முதலிய எட்டு சக்திகளும் அவளே. ஸம்க்ஷோபண சக்கரத்தில் † போற்றப்பெறுபவள் அவள். இந்த அண்ட சராசரங்களுக்கெல்லாம் தலைவனாகிய சங்கரனின் தேவி அவள். அஷ்டாக்ஷரத் தொகுப்பில் ‡ குப்த யோகினியாக பிரகாசிப்பவள் அவள். அனங்கன் § முதலியவர்களால் துதிக்கப்படுபவள் அவள். எட்டு இதழ்களோடு விளங்கும் தாமரை மலர் அவளது இருப்பிடம். கரங்களில் வில்லையும் அம்பையும் கொண்டு விளங்குபவள் அவள். கருணையாகிய அமுதக் கடலே அவள்.

---

** தந்த்ர சாஸ்திரத்தின்படி தேவி எட்டுவித சக்திகளாக விளங்குகிறாள். அவை: அனங்ககுஸும, அனங்கமேகல, அனங்கமாதன, அனங்க மதனாதுர அனங்கரேக, அனங்காங்குச, அனங்க வேஹினி, அனங்க மாலினி.

† தேவியின் அருளைப் பெற அவளை நெருங்குவதற்கு தந்த்ர சாஸ்திரத்தின்படி பக்தர்கள் ஒன்பது சக்கரங்களைக் கடக்கவேண்டும். அவை பின்வருமாறு: த்ரைலோக, மோஹன, ஸர்வஸம்க்ஷோபண, ஸர்வ ஸௌபாக்ய தாயக, ஸர்வார்த்த ஸாதக, ஸர்வரக்ஷகாரக, ஸர்வரோகஹர, ஸர்வஸித்திப்ரதாயக, ஸர்வானந்தமய.

‡ முப்பத்தெட்டு அக்ஷரங்களின் அசைகள் க-ச-ட-த-ப-ய-ஷ-ஹ என ஒவ்வொன்றும் ஆரம்பிப்பதாக உள்ளது. அவை ஒவ்வொன்றும் மேலே கூறப்பெற்றுள்ள எட்டு சக்திகளால் ஆளப்பெறுகின்றன. அவையே மொத்தமாக குப்தயோகினி என அழைக்கப்பெறுகிறது.

§ தேவி உபாஸகர்களில் பன்னிருவர் முக்கியமானவர்களாகக் கூறப் பெற்றுள்ளனர். அவர்களில் இந்த க்ருதியில் கூறப்பெறும் அனங்கன் தவிர ஏனையோர்கள்: மனு, சந்த்ரன், குபேரன், லப்பாமுத்ரா, அகஸ்தியர், அக்னி, ஸூர்யன், இந்திரன், ஸ்கந்தன், துர்வாஸர்.

## 4

இந்த க்ருதி சிவாலயங்களில் ஒன்ருகிய திருவாரூரில் கோயில்கொண்டுள்ள ஒரு மூர்த்திபேரில் இயற்றப்பெற்றது. சங்கராசார்ய ஸ்வாமிகளின் ஆழ்ந்த ஆராய்ச்சியின்படி இறைவன் ஸகுணனல்லன்; நிர்குணனே என்னும் வேதாந்த சித்தாந்தத்தைத்தழுவி அமைந்துள்ளது தீக்ஷிதரின் இந்த க்ருதி.

இராகம்: ஆனந்தபைரவி தாளம்: த்ரிபுட

பல்லவி

ஆனந்தேச்வரேண ஸம்ரக்ஷிதோஹம்
நித்யானந்தரூபோஸ்மி ப்ரஹ்மானந்தரூபோஸ்மி

அநுபல்லவி

ஞானப்ரதான குருகுஹரூப
சிதானந்த நாதஸ்வரூப ப்ரகாசேன

சரணம்

அவயவ த்ராதீதேன நித்யேன
அவஸ்தாத்ரய ஸாக்ஷிணுதி சுத்தேன
பவ பஞ்சகோச யதிரிக்தேன புத்தேன
சிவ சச்சிதானந்த ரூபேண முக்தேன
ச்ரவணக மனன நிதித்யாஸன
ஸமாதி நிஷ்டாபரோக்ஷானுபவ
ஸ்வமாத்ராவ சேக்ஷித ப்ரகாசமான மஹேச்வ
ரேண

## மொழிபெயர்ப்பு

ஆனந்தேச்வரர் ஸுப்ரமணியக் கடவுள் ரூபமாக வந்து குருமூர்த்தமாகி சிதானந்த நாதருக்கு* ஞானோபதேசம் செய்தார். அவரால் ஆட்கொள்ளப் பெற்ற நான் நிலையான பரமானந்தத்தில், ப்ரம்மானந்தத்தில் மூழ்கி இருக்கிறேன். அவன் மூன்று சரீரங்களுக்கு அப்பாற்பட்டவன்.† அவன் மூன்று நிலைகளுக்கும் சாக்ஷியாகவும் பரிசுத்தனாகவும் விளங்குகிறான். ‡ அவன் பஞ்சகோசங்களுக்கும் § அப்பாற்பட்டவனாகி அறிவூட்டுகிறான். அவனுடைய உருவம் நிரந்தரமான பேரின்பம் நிறைந்தது. அவன் சுதந்திரமானவன். நீ அவன் புகழைக் கேட்கவேண்டும். அவனையே நினைக்க வேண்டும். அவனுக்கே உன்னை அர்ப்பணம் செய்து, அவன்பால் ஏகாக்ரசித்தத்தோடு உன் மனதை நிலைக்கச் செய்தால் அவன் உன்னுள்ளேயே இருப்பதை நீ உணரலாம்.

---

* திருத்தணியில் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் அனுபவம் இங்கே கூறப் பெற்றுள்ளதைக் காண்கிறோம்.

† நம்முடைய சாஸ்திரங்களின்படி ஸ்தூலம் (மொத்தமானது), சூக்ஷ்மம் (நுட்பமானது), காரணம் (தற்செயல்) என மூன்று வகை சரீரங்கள் கூறப் பெற்றுள்ளன.

‡ மூன்று வகை நிலைகளாவன: ஜாகர்த்த (விழிப்பு), ஸ்வப்னம் (கனவு), ஸுஷுப்தி (நித்திரை).

§ மானிட ஆன்மா பஞ்ச கோசங்களால் மூடப்பெற்றிருக்கிறது. அவை: அன்னம், ப்ராணன், மனஸு, ப்ரஜ்ஞானம், ஆனந்தம். இந்தப் பஞ்ச கோசங்களிலிருந்து விடுதலை பெறும்போது ஆன்மா விமோசனம் அடைந்து விடுகிறது.

5

முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய க்ருதிகளில் பல தனிப்பட்ட தெய்வங்களை (ஸகுண வழிபாடு) போற்றுவதாக அமைந்து உள்ளன. அவை பெரும்பாலும் புராணங்களை அடிப்படையாகக் கொண்டவை. கீழே காணப்பெறும் க்ருதி பால கிருஷ்ண மூர்த்தி பேரில் பாகவத காவியத்தின் அடிப்படையில் இயற்றப் பெற்றுள்ளதைக் காண லாம்.

இராகம் : ஜயஜய வந்தி தாளம் : ரூபகம்

பல்லவி

சேத ஸ்ரீ பாலக்ருஷ்ணம் பஜரேரே
சிந்தார்த்தப்ரத சரணாரவிந்தம் முகுந்தம்

அநுபல்லவி

நூதன நீரத ஸத்ருச சரீரம் நந்தகிசோரம்
பீதவ ஸனதரம் கம்பு கந்தரம்
பூதனாதி ஸம்ஹாரம் புருஷோத்தமாவதாரம்
சீதல ஹ்ருதய விஹாரம் ஸ்ரீ ருக்மிணீ தாரம்.

சரணம்

நவநீத கந்தவாஹவதனம் ம்ருதுகதனம்
நளினபத்ர நயனம் வடபத்ரசயனம்
நவ சம்பக நாஸிகம் அதஸிஸும பாஸகம்
நதேந்த்ராதி லோக பாலகம் ம்ருகமத திலகம்
நவதுளஸீ வன மாலம் நாரதாதி முனி ஜாலம்
குவலயாதி பரிபாலம் குருகுஹ நுத கோபாலம்

## மொழிபெயர்ப்பு

ஓ மனமே! அழகிய தாமரை மலர் போன்ற பாதங்களை யுடைய பாலகிருஷ்ணனைப் பணிவாய். அவன் எல்லா வரங்களையும் தருவான். நந்த கோப்பாலன் அவன். நீலமேகச்யாமள வண்ணன். மஞ்சள் நிற அங்கி தரித்தவன். சங்கத்தை ஒத்த கழுத்துடையவன். பூதனை என்கிற அரக்கியை அழித்தவன். மந்தர பர்வதத்தைத் தூக்கியவன். ருக்மிணீ காந்தன். மஹாவிஷ்ணுவின் அவதாரமாகிய அவன் நல்லவர்கள் மனத்திலே உறைபவன். வெண்ணெய் உண்ட அடையாளத்துடன் காக்ஷி தரும் முகம். இனிமையான பேச்சு. தாமரை இதழ் போன்ற கண்கள். வட பத்ரத்தில் சயனிப்பவன். அழகிய சம்பக மலர் போன்ற நாசியும் அதசி மலரைப் போல் பிரகாசமாகவும், நெற்றியிலே கஸ்தூரி திலகத்துடனும் விளங்குபவன். இந்திரனாலும் லோகபாலர்களாலும் வணங்கப்படுகிறவன் அவன். துளஸீ மாலையும் மலர் மாலையும் அணிந்தவன். நாரதர் முதலான மஹரிஷிகளால் வணங்கப் பெறுபவன். உலகங்களை காக்கின்ற அந்த கோபாலன், குருகுஹனால் புகழப் பெற்றவன்.

### 6

லக்ஷ்மிதேவியைப் போற்றுவதாக அமைந்த க்ருதி இது. இந்த க்ருதி இயற்றப் பெற்ற சந்தர்ப்பம் முன்பே விளக்கப் பெற்றுள்ளது. ஸ்ரீ ஸூக்தம்

என்னும் வேத மந்திரத்தின் அடிப்படையிலே உருவாகியுள்ள இந்த க்ருதி யாவரும் பயன் பெறும் வகையில் அமைந்துள்ளது. இதுவே இந்த க்ருதியின் முக்கியமான அம்சம். முத்து ஸ்வாமி தீக்ஷிதர் புதையலைப் போன்ற வேதசாரங்களை ஸம்ஸ்க்ருத பாஷையில் பொது மக்களுக்கு, கீர்த்தனைகள் உருவில் தந்திருப்பது, நமது கலா சாரத்திற்குக் குறிப்பிடத் தக்க அளவில் செய்த உதவியாகும் என்றே கூறவேண்டும்.

இராகம் : லலித தாளம் : ரூபகம்

பல்லவி

ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஸதா பஜாமி
ஹீனமான வாச்ரயம் த்ய ஜாமி

அநுபல்லவி

ஸ்திரதர ஸம்பத்ப்ரதாம் க்ஷீராம்புதி தனயாம்
ஹரிவக்ஷ ஸ்தலாலயாம் ஹரிணீம் சரணகி
ஸலயாம்
கரகமலத்ருத குவலயாம் மரகதமணிவலயாம்

சரணம்

ச்வேத த்வீபவாஸினீம் ஸ்ரீ கமலாம்பிகாம்பராம்
பூதபவ்ய விலாஸினீம் பூஸுர பூஜிதாம்வராம்
மாதரம் அப்ஜமாலினீம் மாணிக்யா பரணதராம்
ஸங்கீத வாத்ய விநோதினீம் கிரிஜாப்தாம்
இந்திராம்
சீதகிரண நிபவதனாம் ச்ருத சிந்தாமணி ஸதனாம்
பீதவஸனாம் குருகுஹ மாதுலகாந்தாம் லளிதாம்.

## மொழிபெயர்ப்பு

நான் அற்பமான மனிதர்களிடம் சென்று யாசிக்காமலிருக்க எப்பொழுதும் லக்ஷ்மி தேவியை வேண்டுவேன். அவள் எப்பொழுதும் அழிவில்லாத செல்வத்தை அருள்வாள். அமுதக் கடலில் அவதரித்த அவள் திருமாலின் மார்பகத்தை இருப்பிடமாகக் கொண்டவள். அவளுடைய பாதங்கள் மெல்லிய அரும்பு மலர் போன்றவை. அவளுடைய அழகிய கரங்களில் குவலயா மலர்களை ஏந்திக்கொண்டும், மரகதக்கற்கள் பதித்தவளையல்களை அணிந்துகொண்டும் விளங்குகிறாள். ஸ்ரீ கமலாதேவி உன்னதமான ச்வேத தீபத்தில் வசிக்கிறாள். அந்தணர்களால் துதிக்கப்படும் அவளுக்கு அகில உலகங்களின் செயல்கள் எல்லாம் விளையாட்டு. தாமரை மலர்களாலான மாலையையும் நவரத்ன ஹாரமும் தரித்தவள். அவள் இந்திரை. கிரிஜா தேவியின் சிநேகிதி. அவள் முகம் சந்திரனை ஒத்தது. அவள் தன்னை வேண்டும் அடியவர்கள் விரும்பும் வரமெல்லாம் அருளும் சிந்தாமணியாய் விளங்குகிறாள். அவள் குருகுஹனின் மாமனாகிய திருமாலின் தேவி. அவள் மஞ்சள் நிற ஆடை புனைந்து அழகு திகழக் காக்ஷி தருகிறாள்.

7

முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றியுள்ள நவக்ரஹக் கீர்த்தனைகள் ஒன்பதிலிருந்தும் அவர் ஜோஸ்ய சாஸ்திரத்தில் பெற்றிருந்த தேர்ச்சி நன்கு தெரிய

வரும். கீழே காணப்பெறும் க்ருதி ப்ருஹஸ்பதி (வியாழன்) பேரில் அமைந்தது. இந்த க்ருதி இயற்றப்பட்ட சந்தர்ப்பத்தை முன்னமேயே விளக்கி உள்ளோம்.

இராகம்: அடாணு தாளம்: த்ரிபுட

பல்லவி

ப்ருஹஸ்பதே தாராபதே ப்ரஹ்ம ஜாதே
நமோஸ்துதே

அநுபல்லவி

மஹாபல விபோகீஷ்பதே மஞ்சுதனுர் மீனுதிபதே
மஹேந்த்ராத் யுபாஸிதாக்ருதே மாதவாதி விநுத
தீமதே

சரணம்

ஸுராசார்ய வர்யவஜ்ரதர சுபலக்ஷண ஜகத்
ரயகுரோ
ஜராதிவர்ஜிதாக்ரோத கசஜனகாச்ருத கல்பதரோ
புராரி குருகுஹஸம்மோதித புத்ரகாரக
தீனபந்தோ
பராதிசத்வாரி வாக்ஸ்வரூப ப்ரகாசகதயா
ஸிந்தோ
நிராமய நீதிகர்த்ரே நிரங்குசாய விச்வபர்த்ரே
நிரஞ்சனுய புவபோக்த்ரே நிரம்சாய ஸுக
ப்ரதார்த்ரே

மொழிபெயர்ப்பு

ஓ ப்ருஹஸ்பதி! தாராவின் கணவரே! ஓ ப்ரஹ்மன்! நான் உம்மை வணங்குகிறேன். ஓ, வர்க்

குக்கு அதிபதியாகவும் தனுஸ், மீன ராசிகளையும் ஆள்பவரே! நீர் மஹேந்திரனால் தோத்தரிக்கப் பெற்றவர். ஓ! தேவர்களின் குருவே! நீர் வஜ்ரா யுதத்தைத் தரித்திருக்கிறீர். ஓ மூவுலகங்களின் ஆசார்யரே! உம்முடைய பெயர் பவித்திரமானது. கோபத்தினின்றும், பழமையினின்றும் விடுபட்ட வர் நீர். ஓ! கச்சனின் பிதாவே! உம்மைப் பணிந்தவர்களுக்கு மோக்ஷ சாம்ராஜ்யத்தை அளிக்கும் கல்பதரு நீர். பரமேச்வரனின் ஆசா னாகிய குருகுஹனை மகிழ்விப்பவர் நீர். ஓ! ஆதர வற்றவர்களின் நண்பரே! ஸந்தான பாக்யம் அருள்பவர் நீர். பரா முதலிய நான்கு வகைகளி லும் பிரகாசிக்கிறீர். நீர் கருணைக் கடல். நீர் குற்றமற்றவர். நீதியை வகுத்தவரும் நீர். உலகத் தின் தெய்வமாகும் நீர் கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட்டவர். நீர் குற்றமற்றவர். உலகத்தின் இன்பம் நீர். முழுமையானவர் நீர். மகிழ்ச்சியை அருள்கிறீர்.

8

தீக்ஷிதர் தமது சொந்தக் காரணத்திற்காகவே அறிவை வணங்கினார். ஆதலால் வாக்தேவியாம் ஸரஸ்வதி பேரில் பல கீர்த்தனைகள் இயற்றி இருக்கவேண்டும் என்பதில் ஆச்சரியமில்லை. இந்த வகையில் ஸங்கீத மும்மூர்த்திகளில் இவர் ஒருவரே தனித்து விளங்கினார். ஸரஸ்வதிபேரில் அமைந்துள்ள க்ருதிகளில் ஒன்று கீழே கொடுக்கப் பெற்றுள்ளது.

இராகம்: வேகவாஹினி தாளம்: ஜம்ப

பல்லவி

வீணா புஸ்தக தாரிணீம் ஆச்ரயே
வேக வாஹினீம் வாணீம் ஆச்ரயே

அநுபல்லவி

ஏணாங்கயுத ஜடாஜூட மகுடாந்தாம்
ஏகாக்ரசித்த நித்யோதாம் நிதி காந்தாம்

சரணம்

பராத்யகில சப்தஸ்வரூ பாவகாசாம்
பௌர்ணமீ சந்த்ரிகதவள சங்காசாம்
கராரவிந்தாம் கல்யாண தாம்பாஷாம்
கனக சம்பகதாம பூஷா விசேஷாம்
நிரந்தரம் பக்த திஹ்வாக்ர வாஸாம்
நிகில ப்ரபஞ்ச ஸங்கோச நிகாஸாம்
நராதமானன விலோக சோகாபஹாம்
பூஜித விக்ரஹாம்

## மொழிபெயர்ப்பு

ஒரு கரத்தில் வீணையையும், மற்ருெரு கரத்தில் புத்தகத்தையும் கொண்டு விளங்கி வேகமான* சக்தி படைத்த வாணியை நான் வணங்குகிறேன். அவள் பிரம்மனின் பத்னி. அவளது கூந்தலின் மேல் சந்திரனையும் அதன் மேல் க்ரீடமும் தரித்

* ஸம்ஸ்க்ருத வார்த்தை வேகவாஹினி என்பது ஒரு இராகத்தின் பெயர். அது க்ருதியில் வரும் இடத்தைப் பொறுத்து வேகமான நீரோட்டம் என்ற பொருளுடன் அமைக்கப்பெற்றுள்ளது.

திருக்கிருள். மனத்தை ஒருநிலைப்படுத்த வல்லவர்களே அவளை ஆழ்ந்து சிந்திக்க முடியும். ஒலிகளுக்கும் பரா முதலிய பேச்சுக்களுக்கும் அவளே இருப்பிடம். பௌர்ணமி சந்திரனைப் போன்ற வெண்ணிறமான மேனியுடையவள். அவளுடைய புஜங்கள் அழகு நிறைந்து தாமரை மலர் போன்றவை. நன்மையெல்லாம் அருளும் அவள் மொழி வடிவானவள். பொன்னொளி தரும் சம்பக மலர் மாலை அணிந்தவள். அவளை இடைவிடாமல் துதிப்பவர்களின் நாவை இருப்பிடமாகக் கொள்ளுபவள் அவள். இந்த ப்ரபஞ்சங்கள் தோன்றவும், பரவவும் காரணமானவள் அவள். சோர்வுற்ற மனிதனின் துக்கங்களைக் களைந்தெறிபவள் அவள். அவள் விஷ்ணுவாலும், அரனாலும், குருகுஹனாலும் துதிக்கப்படுகிருள்.

# அருஞ்சொல் விளக்கம்

## 1. ஆக்ஷிப்திகா

இராக விஸ்தாரமாகிய ஆலாபனையோடு தொடர்புடைய கலைச் சொல் இது. இதைப் பற்றிய ஆராய்ச்சியாளர்கள் இராக ஆலாபனை பத்ததியை மூன்று விதமாக வகுத்துள்ளார்கள். அவை: ஆக்ஷிப்திகா (இராகத்தின் பொதுவான சாயையைக் காண்பித்தல்), இராகவர்த்தனி (இராகத்தின் விரிவான ஸஞ்சாரங்கள்), விதாரி (மகரிணி). சில சமயங்களில் ஆக்ஷிப்திகா என்பது ஒரு பாடலின் ஆரம்ப ஸ்வரத்தைக் குறிப்பிடுவதற்கும் பெயர் ஆகும். என்றாலும் அந்த ஆரம்ப ஸ்வரத்தைக் குறிக்கும் சரியான சொல் 'க்ரஹஸ்வரம்' என்பது ஆகும்.

## 2. அக்ஷரம்

இன்னிசையில் பயன்படுத்தப் பெறும் ஒரு அசைக்கு அக்ஷரம் என்று பெயர். தாளத்தில் இது ஒரு கால அளவையும் குறிக்கும்.

## 3. ஆலாபனை

ஆக்ஷிப்திகாவைப் பார்க்க.

## 4 அரங்கேற்றல்

இது தென்னிந்தியச் சொல். ஒரு ஸங்கீத மாணவன் தன்னுடைய ஸங்கீத சிக்ஷை பூர்த்தி

யான பிறகு பலருக்கு எதிரில் நிகழ்த்தும் முதற் கச்சேரியை இச் சொல் குறிக்கும். பொதுவாக இச்சொல் பரத நாட்டியம் அல்லது நடனத்திற்கே உரியதாகக் கருதப்படுகிறது.

5. **அநுபல்லவி**

கர்னாடக ஸங்கீதத்தில் ஒரு க்ருதி பொதுவாக மூன்று பகுதிகளைக் கொண்டிருக்கும். பாடலைத் தொடங்கும் முதற்பகுதி 'பல்லவி' எனப்படும். இராக ஸஞ்சாரங்களை விஸ்தாரம் செய்தும் பாட்டை முடிக்கும் பகுதியாகவும் அமைந்துள்ள பகுதி 'சரணம்' எனப்படும். பல்லவிக்கும் சரணத்திற்கும் நடுவில் அமைந்து, இராகத்தின் சில தோற்றங்களை வெளிப்படுத்தும் பகுதி 'அநு பல்லவி' ஆகும். பெரும்பாலான க்ருதிகளில் அநுபல்லவி என்ற அங்கம் இருந்தாலும், பல்லவி சரணத்துடன் மட்டிலும் அமைந்துள்ள க்ருதி களும் சில உண்டு.

6. **ஆரோஹணம்**

இராகத்தின் லக்ஷணம் என்பது இராகத்தின் ரூப இலக்கணத்தையும், ஸஞ்சார க்ரமத்தையும் குறிப்பதாகும். இராக லக்ஷணத்தின் முதல் அம்சம் அதனுடைய ஆரோஹண அவரோஹணங்களைக் கூறுவதாகும். ஆரோஹணம் என்பது ஸ்வரங்களின் ஏற்றத்தையும், அவரோஹணம் என்பது ஸ்வரங்களின் இறக்கத்தையும் குறிக்கும். இராக லக்ஷணத்தின் முதல் அம்சமாகிய ஆரோ

ஹணை அவரோஹணங்கள் அந்த இராகம் எடுத்துக்கொள்ளும் ஸ்வரங்களைக் கொண்டிருக்கும். ஆனால் இராகத்தின் உண்மை ஸ்வரூபத்தை அறிந்து கொள்ளுவதற்கு இந்த ஸ்வரங்களைத் தெரிந்து கொள்ளுவது மட்டும் போதாது. நாம் இராகத்தின் முழு ரூபத்தை அறிந்து கொள்ளுவதற்கு அதன் வேறு அம்சங்களையும் கவனிக்க வேண்டும். உதாரணமாக:— இராக ஸஞ்சாரங்களின் முக்கிய ப்ரயோகங்களும் கமகங்களும் உள்ளன. அவை இராகங்களை அலங்கரிக்கும் ஆபரணங்களைப் போல் அமைந்து பொலிவைத் தரும். அவற்றை உணர்ந்து கொண்டால் தான் இராகத்தின் முழு ஸ்வரூபத்தை அறிந்து கொள்ள முடியும். ஸங்கீத ஆராய்ச்சி நூல்கள் பலவகைப்பட்ட கமகங்களைக் கூறுகின்றன. அவை பத்து வகைப்படும் என்று சொல்லுவது உண்டு. ஆனால் வரவர அதிகரித்து கமகங்கள் பதினைந்து வகைப்படும் என இன்று கூறுவோரும் உண்டு.

7. அவரோஹணம்

ஆரோஹணத்தைக் காண்க.

8. பரத நாட்டியம்

பரத நாட்டியம் என்பது ஒருவகை நடனம். கர்னாடக ஸங்கீதத்தில் பரத நாட்டிய இசை மிக நன்றாக வளர்ச்சி பெற்றுள்ளது. அபிநயத்தோடு (சைகைகள்) அலாரிப்பு, சப்தம், வர்ணம் முதலிய பலவகை அம்சங்களைக் கொண்டு பரத நாட்டியம் விளங்குகிறது.

### 9. தரு

பரத நாட்டியத்திலும், இசை நாடகங்களிலும் பெரும்பாலும் கையாளப் பெறும் கலை நுட்பம் செறிந்த ஒரு வகை உருப்படி.

### 10. கனராகங்கள்

விசேஷமான ஒரு வகை இராக ஸஞ்சார முறைக்கு 'கனம்' என்று பெயர். அடுத்தடுத்து அமைந்துள்ள மூன்று அல்லது நான்கு ஸ்வரங்களை எடுத்துக்கொண்டு அவற்றைக் கொண்டே பலவகைப்பட்ட மாறுதலான ஸஞ்சாரங்களை அமைப்பதே கனம் என்பதாகும். இந்த வகையில் மந்தரத்திலிருந்து தாரஸ்தாயி வரையில் இராகங்களின் எல்லா வகையான ஸஞ்சாரங்களையும் கையாளலாம். வரலாறு காணாத பழங்கால முதற் கொண்டே இவ் வகையான 'கனம்' பாடுவதற்கு ஏற்றவை என்று சில இராகங்கள் கருதப் பெற்று வந்துள்ளன. அந்த இராகங்களே கனராகங்கள் எனப்படும். நாட, கௌள, ஆரபி, வராளி ஸ்ரீ முதலிய இராகங்கள் கனராகங்கள் என வகைப்படுத்தப் பெற்றுள்ளன.

### 11. கீதங்கள்

ஸங்கீத சாஸ்திர இலக்கண முறைப்படி அமைந்தவை கீதங்கள். இவ்வகை கீதங்களில் இராகங்களின் ஸ்வரங்களும் விசேஷ ஸஞ்சாரங்களும் விளக்கப் பெற்றிருக்கும். கர்னாடக ஸங்கீதத்தை முறைப்படி கற்றுக்கொள்ள முற்படுகிறவர்களுக்கு

முதலில் ஸ்வர ரூபமாக அமைந்துள்ள பல வரிசைகளைக் கற்பித்தபின் இவ்வகை கீதங்களைப் போதிப்பது வழக்கம்.

## 12. க்ருதி

க்ருதி என்பதன் நேரான பொருள் ஒருவகை உருப்படி ஆகும். பிற்காலத்தில் ஸங்கீத சாஸ்திர முறைப்படி அமைந்த உருப்படிகளும், தெய்வங்களைப்பற்றிப் புகழும் பாடல்களும் க்ருதிகள் என்றே அழைக்கப் பெறுகின்றன. பிறகு இவை எல்லாம் கீர்த்தனங்கள் என்று பிரபலமாக வழங்கப் பெறுகின்றன.

## 13. லக்ஷண கீதங்கள்

72 மேளங்களை வரிசைப்படுத்திய வேங்கடமகி என்பவர் இராகங்களின் இலக்கணங்களை விளக்குவதற்காகத் தாம் புனைந்த கீதங்களை லக்ஷண கீதங்கள் என அழைத்துள்ளார். வேங்கடமகியின் லக்ஷண கீதங்களில் மேளங்களின் பெயர், அவை எடுத்துக் கொள்ளும் ஸ்வரங்களின் பெயர்கள், அதிலிருந்து ஜன்யமான இராகங்களின் பெயர்கள் முதலியவற்றைக் கூறியுள்ளார்.

## 14. மணிப்ரவாளம்

தென்னிந்தியாவில் ஒரு பாடலில் ஒன்றுக்கு மேற்பட்ட பாஷைகளைப் பயன்படுத்தும் வழக்கம் இடைக்காலத்தில் வளர்ந்திருந்தது. இவ்வாறு ஒன்றுக்கு மேற்பட்ட பாஷைச் சொற்களைக் கலந்து மூன்று நான்கு க்ருதிகளை தீக்ஷிதர் இயற்றியுள்ளார். அத்தகைய அவருடைய க்ருதிகளில்

ஸம்ஸ்க்ருதம், தெலுங்கு, தமிழ் மொழிகள் கலந்திருக்கின்றன. இவ்வாறு அமைந்திருப்பது மணிப்ரவாள நடை என அழைக்கப்பெறுகிறது. மாணிக்கக் கற்களும் பவளங்களும் கலந்து தொடுக்கப்பெற்ற மாலைபோல் தோற்றம் அளிக்கின்ற காரணத்தினால்தான் மணிப்ரவாளம் என்ற பெயர் பெற்றது. 'மணி' என்பது மாணிக்கக்கற்களையும், பிரவாளம் என்பது பவளங்களையும் குறிக்கும்.

## 15. மேள ராகங்கள்

ஸப்த ஸ்வரங்களும் அமைந்துள்ள இராகங்கள் மேள ராகங்கள். தொடர்ச்சியாக ஏழு ஸ்வரங்களும் அமைந்தவை ஸம்பூர்ண ராகங்கள். ஏழு ஸ்வரங்களும் வரிசையாக இல்லாமல் திரிந்து அமைந்திருப்பவை வக்ரஸம்பூர்ண இராகங்கள் எனப்படும். ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஸ்வரங்கள் இல்லாமல் அமைந்திருப்பவை ஜன்ய ராகங்கள் எனப்படும். அத்தகைய ஜன்ய ராகங்கள் எந்தெந்த ஸ்வரங்களைக் கொண்டுள்ளனவோ அதே ஸ்வரங்களைக் கொண்டு விளங்கும் மேள ராகங்களின் ஜன்யங்கள் என வகுக்கப்படும். இரண்டு ஸ்வரங்கள் ஒன்றோடொன்று இன்னிசை பொருந்துமாறு கூடி ஒலிப்பவை வாதி ஸம்வாதி ஸ்வரங்கள் எனப்படும். ஆனால் அவை ஒன்றுக்கொன்று சேராதவை வாதி விவாதி ஸ்வரங்கள் எனப்பெறும். மேளத்தில் அடுத்தடுத்த ஸ்வரங்கள் வாதி விவாதி ஸ்வரங்களாக அமைந்திருந்தால் அந்த மேளம் விவாதி மேளம் எனப்படும்.

16. முத்திரை

ஸாஹித்திய கர்த்தாக்கள் தம்முடைய க்ருதிகளில் அடையாள முத்திரை வைப்பது வழக்கம். தங்களுடைய பெயரையோ, புனை பெயரையோ அவர்கள் அடையாளமாக அமைப்பார்கள். அத்தகைய அடையாளக் குறிக்கே முத்திரை எனப் பெயர். ஸ்ரீ தியாகையர் தம்முடைய பெயரையே முத்திரையாகவும், தீக்ஷிதர் 'குருகுஹ' என்பதை முத்திரையாகவும் அமைத்துள்ளார்கள்.

17. ப்ரபந்தங்கள்

சாஸ்த்ரீய ஸங்கீத முறைப்படி அமைந்த ஒரு வகை உருப்படி வகைக்கு 'ப்ரபந்தம்' என்று பெயர். அவற்றுள் பலவற்றைப்பற்றி நம்முடைய ஆராய்ச்சிகளில் குறிப்பிடுகிறோம். தமிழ் இலக்கியத்தில் ப்ரபந்தங்கள் என்னும் ஒரு வகைப் பாடல்களும் உண்டு. அவையன்றி வைஷ்ணவ சமய ஆழ்வார்கள் பாடிய பக்திப் பாடல்கள் நாலாயிரத்திற்கும் திவ்ய ப்ரபந்தம் என்ற பெயரும் உண்டு.

18. இராக மாலிகை

ஒரு பாட்டில் ஒவ்வொரு பகுதியும் வெவ்வேறு இராகங்களில் அமைந்திருந்தால் அதற்கு இராக மாலிகை எனப் பெயர்.

19. இராக தாள மாலிகை

ஒரு பாடலின் பகுதிகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு இராக தாளங்களில் அமைந்திருந்தால் அது இராக தாள மாலிகை எனப் பெறும். இராமஸ்வாமி தீக்ஷிதரின் 18 இராக தாள மாலிகை இதற்குச் சிறந்த உதாரணமாகும்.

20. ஸாஹித்தியம்

ஒரு பாட்டில் அமைந்த சொற்களுக்கு ஸாக்ஷித்தியம் என்று பெயர். பாடலுடைய இன்னிசையமைப்பின் வேறுபாடுகளைக் கண்டறிய இது உதவுகிறது.

21. ஸ்தாயி

ஏழு ஸ்வரங்களையும் கொண்ட ஒரு பகுதிக்கு ஸ்தாயி என்று பெயர். இவை மந்தர, மத்யம, தாரம் என மூன்று வகைப்படும். மந்தரஸ்தாயி கீழ் ஒலியாகும். அதற்குமேல் நடுப்பகுதியில் அமைவது மத்யமஸ்தாயி. உச்சமாக ஒலிப்பது தாரஸ்தாயி.

22. சூளாதி ஸப்த தாளங்கள்

கர்நாடக ஸங்கீதத்தில் பிரதானமானவையாகவும் அடிப்படையாகவும் அமைந்த தாளங்கள் ஏழு. அவை: த்ருவம், மட்யம், ரூபகம், ஜம்ப, த்ரிபுட, அட, ஏக தாளங்கள். இத்தகைய தாள வகைகளில் சிறந்த பயிற்சி கொடுக்கவேண்டும் என்பதற்காக இயற்றப்பெற்றவை சூளாதி எனப் பெறும்.

23. ஸ்வரங்கள்

இயற்கையாகவே இனிமையோடு ஒலிக்கும் சப்தத்திற்கு ஸ்வரம் என்று பெயர். ஸங்கீத சாஸ்திர முறைப்படி ஏழு வகை ஸ்வரங்கள் உள்ளன. அவற்றுள் ஷட்ஜம்-பஞ்சமம் இரண்டும் மாறுதல் இல்லாத ஸ்வரங்கள். அவை ப்ரக்ருதி

ஸ்வரங்கள் எனப்பெறும். ஏனைய ரிஷப, காந்தார, மத்யம, தைவத, நிஷாதம் ஆகிய ஐந்தும் பேதம் அடைபவை. அவை விக்ருதி ஸ்வரங்கள் எனப்பெறும். நமது ஸங்கீத சாஸ்திரங்கள் இந்த ஸ்வரங்களின் இருவகை பேதங்களையே ஒப்புக் கொள்ளுகின்றன. அவை ஹிந்துஸ்தானி ஸங்கீதத்தில் கோமள, தீவ்ர என அழைக்கப் பெறுகின்றன. கர்னாடக ஸங்கீதத்தில் கோமள ரிஷபம் சுத்தரிஷபம் எனவும், கோமள தைவதம் சுத்ததைவதம் எனவும், கோமள காந்தாரம் சாதாரண காந்தாரம், தீவ்ர காந்தாரம் அந்தர காந்தாரம், கோமள மத்யமம் சுத்த மத்யமம், தீவ்ரமத்யமம் ப்ரதி மத்யமம், கோமள நிஷாதம் கைசிகிநிஷாதம், தீவ்ர நிஷாதம் காகலி நிஷாதம் எனவும் அழைக்கப்பெறுகின்றன.

## 24. வர்ணங்கள்

ஸங்கீத சாஸ்திர முறைப்படி வர்ணங்கள் இயற்றப் பெற்றுள்ளன. வர்ணங்களில் இருவகை உண்டு. அவை சௌக வர்ணங்கள், பதவர்ணங்கள் எனப்படும். ஸங்கீத சாஸ்திர முறையில் சிறந்து, இராக ஸஞ்சாரங்களையும், நுட்பமான தாள அம்சங்களையும் கொண்டு விளங்கும் வர்ணம் சௌக வர்ணம் எனப்படும். பதவர்ணங்கள் பெரும்பாலும் நாட்டியக் கச்சேரிகளுக் கென்றே இயற்றப்பெற்றவை.

## வாழ்க்கை வரலாற்று வரிசை

பிரதம பதிப்பாசிரியர் :

டாக்டர் பி. வி. கேஸ்கர்

பதிப்பாசிரியர்கள் :

பேராசிரியர் கே. ஸ்வாமிநாதன் ஸ்ரீ எம். வி. தேசாய்

### தயாரிக்கப்பட்டு வரும் புத்தகங்கள்

| | | |
|---|---|---|
| 1. | பாணு | லால்லன் ஜி கோபால் |
| 2 | பஸவண்ணு | எம். ஸி. மூர்த்தி |
| 3. | பாய் வீர்சிங் | பி. எஸ் மெய்னி |
| 4. | போஜா பர்மார் | எல். கே. த்ரிபாடி |
| 5. | ஸர். ஸி. ஒய். சிந்தாமணி | ஸி. பி. ராவ் |
| 6. | டா. ஹோமி பாபா | பி. டி. நாக்செளத்ரி |
| 7. | ஹப்பா கடுன் | என். எல். செளலா |
| 8. | ஹேமசந்த்ராசார்ய | ரஸிக்லால் ஸி. பாரீக் |
| 9. | கிருஷ்ணதேவராயா | ராமராவ் |
| 10. | லாலா லாஜ்பத்ராய் | பிரான் சோப்டா |
| 11. | மதுஸூதன் தாஸ் | எஸ். மொஹந்தி |
| 12. | மீராபாய் | ராஜ்பிஹாரிலால் |
| 13. | நாகார்ஜுனு | கே. எஸ். மூர்த்தி |
| 14. | நாம்தேவ் | எல். ஜி. ஜோஹ் |
| 15. | நர்ஸிங் மேஹ்தா | கே. கே. சாஸ்த்ரி (குஜராத்தி) |
| 16. | பி. ஸி. ராய் | ஜே. சென்குப்தா |
| 17. | பிருத்விராஜ் செளஹான் | தசரத சர்மா |
| 18. | டி. பிரகாஸம் | பி. ராஜேஸ்வர ராவ் |
| 19. | ராமானுஜன் | சுரேஷ் ராம் |
| 20. | ராம்தாஸ் | எம். ஜி. தேஷ்முக் |
| 21. | ராஜேந்த்ர சோழன் | பி. ஸ்ரீவத்ஸவா |

| | | |
|---|---|---|
| 22. | ஸமன்த் சந்த்ரசேகர் | கே. ஸி. பாணிக்ராஹி |
| 23. | ஸாயாஜிராவ் கேய்க்வாட் | வி. கே. சாவ்லா |
| 24. | ஸவாய் ஜெய்சிங் | ஆர். எஸ். பட் |
| 25. | ஸித்தராஜா | ஸி. ஜே. நாயக் |
| 26. | தான்ஸேன் | டாகுர் ஜய்தேவ ஸிங் |
| 27. | திப்புசுல்தான் | பி. ஷேக் அலி |
| 28. | வல்லபாசார்யா | பி. என். பகவதி |
| 29. | விவேகாநந்தா | ஏ. கே. மஜும்தார் |

## வெளிவந்துள்ள புத்தகங்கள்

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1. | குரு கோவிந்த ஸிங் | டாக்டர். கோபால் ஸிங் | 2.00 |
| 2. | குரு நானக் | டாக்டர் கோபால் ஸிங் | 2.25 |
| 3. | கபீர் | டாக்டர் பரஸ்நாத் திவாரி | 2.00 |
| 4. | ரஹீம் | டாக்டர் ஸமர் பஹதூர் ஸிங் | 2.00 |
| 5. | மஹாராணா ப்ரதாப் (இந்தி) | ஸ்ரீ ஆர். எஸ். பட் | 1.75 |
| 6. | அஹல்யா பாய் | ஸ்ரீ ஹீராலால் சர்மா | 2.25 |
| 7. | தியாகராஜா * | பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி | 2.00 |
| 8. | பண்டிட் பாத்கண்டே | டாக்டர் எஸ். என். ரதன்ஜங்கர் | 1.25 |
| 9. | பண்டிட் விஷ்ணு திகம்பர் | ஸ்ரீ வி. ஆர். அதவாலே | 1.25 |
| 10. | சங்கரதேவா | டாக்டர் மஹேஸ்வர் நியோக் | 2.00 |
| 11. | ராணி லக்ஷ்மி பாய் (இந்தி) | ஸ்ரீ வ்ருந்தாபன் லால் வர்மா | 1.75 |
| 12. | சுப்ரமண்ய பாரதி | டாக்டர் (ஸ்ரீமதி) பிரேமாநந்தகுமார் | 2.25 |
| 13. | ஹர்ஷா | ஸ்ரீ வி. டி. கங்கல் | 1.75 |

| | | ரு |
|---|---|---|
| 14. சமுத்ரகுப்தா | டாக்டர் லால்லன் ஜி கோபால் | 1.75 |
| 15. சந்த்ரகுப்த மௌரியா | டாக்டர் லால்லன் ஜி கோபால் | 1.75 |
| 16. காஸி நஸ்ருல் இஸ்லாம் | ஸ்ரீ பஸூதா சக்ரவர்த்தி | 2.00 |
| 17. சங்கராச்சார்யா | பேராசிரியர் டி. எம். பி. மஹாதேவன் | 2.00 |
| 18. அமீர் குஸ்ரு | ஸ்ரீ ஸையத் குலாம் ஸம்னானி | 1.75 |
| 19. நானு பத்ஞவிஸ் | டாக்டர் ஆர். என். த்யோதர் | 1 75 |
| 20. ரஞ்சித் ஸிங் | ஸ்ரீ டி. ஆர். ஸூட் | 2.00 |
| 21. ஹரி நாராயண் ஆப்தே | டாக்டர் எம். ஏ. கரன்திகார் | 1.75 |
| 22. ஆர். ஜி. பண்டார்கர் | டாக்டர் எச். ஏ. பாத்கே | 1.75 |
| 23. முத்துஸ்வாமி தீக்ஷிதர் | ஜஸ்டிஸ் டி. எல். வெங்கடராம அய்யர் | 2.00 |
| 24. மிர்ஜா காலிப் | ஸ்ரீ மாலிக் ராம் | 2.00 |
| 25. ராமானுஜாச்சார்யா * | ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி | 2.00 |
| 26. ஈஸ்வர சந்த்ர வித்யாஸாகர் | ஸ்ரீ எஸ். கே. போஸ் | 2.00 |
| 27. ஸூர்தாஸ் (இந்தி) | ஸ்ரீ வ்ரஜேஸ்வர் வர்மா | 1.75 |
| 28. ஸ்வாமி தயானந்த் | டாக்டர் பி. கே. சிங் | 2.50 |
| 29. மோதிலால் கோஸ் | ஸ்ரீ எஸ். எல். கோஷ் | 2.75 |
| 30. ஸியாமா சாஸ்த்ரி | ஸ்ரீமதி வித்யா சங்கர் | 2.00 |
| 31. ஜகதீஸ் சந்த்ரபோஸ் | ஸ்ரீ எஸ். என். பஸூ | 2.00 |
| 32. ஸ்வாமி ராம் தீர்த் | ஸ்ரீ டி. ஆர். ஸூட் | 2.50 |
| 33. சைதன்ய | ஸ்ரீ திலிப் குமார் முகர்ஜி | 2.50 |

* தமிழ் மொழி பெயர்ப்பும் கிடைக்கும்.

நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, 1957-ம் வருஷம் ஸ்தாபிக்கப் பெற்றது. தனிப்பட்ட ஸ்தாபனமான இது நல்ல இலக்கியங்களை வெளியிடுதல், பொது மக்களுக்கு நியாய மான விலையில் கிடைக்கச் செய்தல் ஆகிய இரண்டு நோக்கங்கள் கொண்டது. மற்றும் புத்தகக் கண்காட்சிகளை ஆங்காங்கு ஏற் படுத்துவது, எழுதுவதில் கருத்தரங்குகள் நடத்துவது, எழுதுதல், வெளியிடுதல், பரவச் செய்தல் ஆகிவை மூலமாகப் புத்த கங்களைப் படிக்கும் ஆர்வத்தை வளர்ப்பது முதலியவை இந்த ஸ்தாபனத்தின் முக்கிய நோக்கங்கள்.

இந்த ஸ்தாபனம் இதுவரை 400 புத்தகங் களை பல்வேறு இந்திய மொழிகளில் வெளி யிட்டுள்ளது. இந்தப் புத்தகம் தேசப்பெரு மக்களின் வரலாற்று வரிசை என்னும் தலைப் பில் வெளிவந்துள்ளது. சமயம், தத்துவம், சரித்திரம், இலக்கியம், கலை, ஸங்கீதம், விஞ் ஞானம் ஆகிய பல துறைகளில் வல்ல பல பெரியோர்களை நமது இந்தியா தேசம் தோற்றுவித்துள்ளது. இத்தகைய சுமார் 100 பெருமக்களின் வரலாறுகளை இந்த வரிசையில் வெளியிடுவது இந்த ஸ்தாபனத் தின் நோக்கமாகும்.